# நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சங்க இலக்கியச் செல்வாக்கு

பாரதிதாசன் பல்கலைக்கழகத்
தமிழ் முனைவர் பட்டத்திற்காக
அளிக்கப் பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்
சீ. சுஜாதா, எம்.ஏ., எம்.ஃபில்.,





தமிழ் உயராய்வு மையம்
தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக் கல்லூரி
தஞ்சாவூர்-613002


டிசம்பர் 2002

**முனைவர் மு.இளமுருகன், எம்.ஏ., பிஎச்.டி.,**
தமிழ்த்துறைத் தலைவர்,
தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக் கல்லூரி,
தஞ்சாவூர் – 613 002.

நாள்: 30.12.2002

# நெறியாளர் சான்றிதழ்

**நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சங்க இலக்கியச் செல்வாக்கு** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வு, பாரதிதாசன் பல்கலைக்கழகத்தின் முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகத் திருமதி ***சீ.சுஜாதா*** அவர்களால் 1997 முதல் 2002 வரையான கல்வியாண்டுகளில் என் மேற்பார்வையில் தன்னியலாகச் செய்யப்பட்டதாகும். தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக் கல்லூரித் தமிழ்த்துறை உயராய்வு மையத்தில் அவர் செய்த இவ்வாய்வின் மீது இதற்குமுன் வேறெந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை. எனச் சான்றளிக்கிறேன்.

**(மு.இளமுருகன்)**
நெறியாளர்.

முனைவர் மு. இளமுருகன், எம்.ஏ., பிஎச்.டி.,
தமிழ் விரிவுரையாளர் (முதுநிலை)
தமிழவேள் உமாமகேசுவரனார்
கரந்தைக் கலைக்கல்லூரி,
தஞ்சாவூர்-613 002.

**சீ.சுஜாதா, எம்.ஏ., எம்.ஃபில்.,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
தமிழவேள் உமாமகேசுவரனார் கரந்தைக் கலைக்கல்லூரி,
தஞ்சாவூர் – 613 002.

நாள்: 30.12.2002

# ஆய்வாளர் உறுதிமொழி

**நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சங்க இலக்கியச் செல்வாக்கு** என்னும் தலைப்பில் பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்வாய்வேடு 1997 முதல் 2002 வரை யான் மேற்கொண்ட ஆராய்ச்சியின் பயனாகும். இவ்வாய்வேடு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்றும், இஃது என் சொந்த முயற்சியால் உருவாக்கப்பட்டது என்றும் உறுதி கூறுகிறேன்.

சீ. சுஜாதா
**(சீ.சுஜாதா)**
ஆய்வாளர்

## நன்றியுரை

தமிழிலக்கியக் கல்வியை எனக்கு அளித்த தமிழாசிரியர்கள், தமிழ்ப் பேராசிரியர்கள் அனைவருக்கும் உயர்கல்வி பயில ஊக்கமளித்த என் பெற்றோர்கட்கும், வாழ்க்கைத் துணைவர்க்கும் முதற்கண் நன்றி உரியதாகுக

ஆய்வு சிறப்பான முறையில் செம்மையுற உருவாவதற்குப் பெருந்துணை புரிந்து, நன்முறையில் என்னை ஊக்கப்படுத்தி வழிகாட்டிய நெறியாளர் முனைவர் மு.இளமுருகன் அவர்களுக்கும்,

ஆய்வுத் தலைப்பினைத் தேர்ந்தெடுத்து அளித்து, ஆய்வேட்டினைச் செம்மை செய்வதற்காக வழிகாட்டியை வகுத்துத் தந்த எம் கல்லூரி முன்னாள் முதல்வர் மதிப்பிற்குரிய பேராசிரியர் பி.விருத்தாசலம் ஐயா அவர்கட்கும், இந்நாள் மதிப்பிற்குரிய முதல்வர் முனைவர் இரா.குருநாதன், அவர்களுக்கும் என் நன்றி உரியதாகுக.

ஆய்வுத் தொடர்பான நூல்களை அளித்து உதவிய எம் கல்லூரி நூலகர் திருமதி ப.நீலா, அவர்களுக்கும், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழக நூலகத்தார்க்கும், உயர்கல்வி பயில ஊக்கமளித்த என் பெற்றோர்கட்கும், நல்ல முறையில் தட்டச்சுச் செய்து கொடுத்த திரு.மு.நாகு அவர்களுக்கும் எனது உளம் நிறைந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சீ.சுஜாதா

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | - | அகநானூறு |
| இ.திரு. | - | இரண்டாம் திருவந்தாதி |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| கலி. | - | கலித்தொகை |
| குறி.பா. | - | குறிஞ்சிப் பாட்டு |
| குறுந். | - | குறுந்தொகை |
| சிறு.பா. | - | சிறுபாணாற்றுப்படை |
| திரு.முருகு. | - | திருமுருகாற்றுப்படை |
| தொ.நூ. | - | தொல்காப்பிய நூற்பா |
| ந.நூ. | - | நன்னூல் நூற்பா |
| நற். | - | நற்றிணை |
| நா.தி.பி. | - | நாலாயிர திவ்யப்பிரபந்தம் |
| நெடு. | - | நெடுநல்வாடை |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| ப.ஆ. | - | பதிப்பாசிரியர் |
| ப.இ. | - | பக்கம் இல்லை |
| ப.ப. | - | பதிற்றுப்பத்து |
| பரி. | - | பரிபாடல் |
| ப.பாலை | - | பட்டினப்பாலை |
| ப.பா. | - | பத்துப்பாட்டு |
| புறம். | - | புறநானூறு |
| பெரும். | - | பெரும்பாணாற்றுப்படை |
| பொருந. | - | பொருநராற்றுப்படை |
| மதுரை. | - | மதுரைக்காஞ்சி |
| மலை. | - | மலைபடுகடாம் |
| முல்லை. | - | முல்லைப்பாட்டு |
| மேலது. | - | மேற்குறிப்பிட்டநூல் |

# பொருளடக்கம்

# 1.0. ஆய்வு அறிமுகம்

காலத்தால் அழியாத புகழ்பெற்ற இலக்கியங்களுள் குறிப்பிடத்தக்கது சங்க இலக்கியம் ஆகும். இவை தமிழின் தாய் இலக்கியமாகும். தனித்தனி உதிரிப்பாடல்களாக இருந்த சங்க இலக்கியம் பிற்காலத்தில் யாப்பு, திணை, அடிப்படையில் தொகுக்கப்பட்டது. சங்க இலக்கியம் உதிரிப் பாடல்களாக இருப்பினும் அதனைப் பிழையற பிற்காலப் புலவர்கள் குறிப்பாக ஆழ்வார்கள் கற்றுணர்ந்தனர். அதனால்தான் அவர்களது படைப்பிலக்கியங்களில் சங்கப் புலவர்களின் நுண்மான் நுழைபுலம் மிளிர்கிறது. பக்தியை மையமிட்ட ஆழ்வார் பாடல்களில் சங்க இலக்கிய ஏற்பு மிகுந்தவற்றை ஒப்பிட்டறிவது சிறப்புடையதாகும்.

சங்க இலக்கியம் தோன்றி பல நூற்றாண்டுகட்குப் பிறகு பக்தி இலக்கியம் பாடப்பட்டிருப்பினும் ஆழ்வார் பாசுரங்களில் சங்க இலக்கியம் செல்வாக்குப் பெற்றதை அறியமுடிகிது. இச்செல்வாக்கு எவ்வாறு ஏற்பட்டுள்ளதென்பதை மதிப்பிடுவதே இவ் ஆய்வின் நோக்கமாகும்.

### ஆய்வு எல்லை

எட்டுத்தொகை, பத்துப்பாட்டு ஆகியன சங்க இலக்கிய எல்லையாகவும், பன்னிரு ஆழ்வார்களின் பாசுரங்களான நாலாயிர திவ்யப்பிரபந்தத்தையும் எல்லையாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப் பெற்றது.

திவ்யப்பிரபந்தத்துள் பன்னிரு ஆழ்வார்களும் வெவ்வேறு காலத்தவர்களாக இருப்பினும் பாடுபொருள், பாட்டமைப்பு ஆகியவை ஒன்றாக இருத்தலால் நாதமுனிகளால் தொகுக்கப்பட்டு நாலாயிர திவ்யப்பிரபந்தம் என்றாயிற்று. இவற்றுள் இராமானுச நூற்றந்தாதியைத் தவிர ஏனையப் பாடல்கள் ஆய்விற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன.

படைப்பாளி புதிய இலக்கியத்தைப் படைக்கும்போது அவன் முன்கற்ற கல்வியின் தாக்கம் படைப்புகளில் செல்வாக்குப் பெறுவதுண்டு. அவ்வகையில் காலத்தால் முந்தைய நூலான சங்க இலக்கியத்தின் செல்வாக்குப் பக்தி இலக்கியமான நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் ஏற்பட்டிருப்பதைக் காணும் வாய்ப்புள்ளமை புலனாகிறது.

## முந்தைய ஆய்வுகள்

முனைவர் பட்ட அளவிலான தமிழிலக்கிய உயராய்வுகளில் செல்வாக்குப் பற்றி மேற்கொள்ளப் பெற்றவை பெரிதும் நவீன இலக்கியங்கள் பற்றியனவேயாம்.

நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் சங்க இலக்கியம் ஏற்படுத்திய செல்வாக்கு என்பதில் குறிப்பிடத்தக்க முன் ஆய்வுகளாக ப.அருணாசலம் அவர்களின் பக்தி இலக்கியம் (1973), வைணவசமயம் (1982) மற்றும் பெ.அரிகேசவனின் ‘வைணவம் அறிவோம் வாரீர்’ (1996) போன்ற நூல்கள் ஆழ்வார்கள் காலத்து வைணவ சமயமும், பக்தியின் இருப்பிடத்தையும் அறிந்து கொள்வதற்குரிய ஆய்வு நூலாகக் குறிக்கத்தக்கன.

நாலாயிர திவ்யப்பிரபந்தத்தை அடிப்படையாகக் கொண்டு ந.சுப்புரெட்டியார் அவர்கள் எழுதிய சில நோக்கில் நாலாயிரம் (1983), வைணவ உரைவளம் (1985) ஆழ்வார்களின் ஆரா அமுது (1987) மற்றும் ‘வைணவச் செல்வம்’ (1995) போன்ற நூல்கள் முன் ஆய்வுகளாகக் கருதத்தக்கன.

தெ.ஞானசுந்தரம் அவர்களின் சங்க இலக்கியத்தில் திருமால் நெறி (1984) என்ற கருத்தரங்கக் கட்டுரையும், த.தனபாக்கியவதியின் தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு என்ற நூலும் (1996) திருமால் வழிபாட்டின் வளர்ச்சி நிலையை அறிய முன்மாதிரியாக விளங்குகின்றன.

நாலாயிர திவ்யப்பிரபந்தத்திலேயே வெவ்வேறு கோணங்களில் சில ஆழ்வார்களின் பாசுரங்களை எடுத்து ஆய்வு செய்த நூல்களும் இவ் ஆய்விற்கு முன்மாதியாகப் பயன்பட்டன. அவ்வகையில் வி.மு.உலகநாதனின், 'ஆண்டாள் பாவையும் அழகுதமிழும்' (1988) என்ற நூலும் கோதையின் காதல் ஓவியம் (1994) என்ற நூலும், எஸ்.கண்ணன் அவர்களின் பெரியாழ்வார் ஆண்டாள் பாசுரங்கள் (1994) என்ற நூலும் இவ்வாய்வின் முன்மாதிரியாக எடுத்துக்கொள்ளப்பட்டன.

நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் குறிப்பிட்ட சில ஆழ்வார்களின் பாசுரங்கள் பற்றிய சமூக ஆய்வு தொடர்ந்திருப்பினும் செல்வாக்கு அடிப்படையில் தனித்த, விரிந்த ஆய்வுகள் மேற்கொள்ளப்படவில்லை. இம் முன் வரலாற்றை கவனத்திற்கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப்பெறுகிறது.

## அணுகுமுறை

### செல்வாக்கு-சொற்பொருள் விளக்கம்

செல்வாக்கு என்பது இன்றைய நிலையில் இலக்கியத்தில் மட்டுமல்லாது நடைமுறை வாழ்க்கையில் வேறு பொருளை விளக்குவதாக வழக்கில் உள்ளது. "ஒருவர் கூறும் சொல் பிறிதொருவரிடம் சென்று சேர்கையில் அவரது மனத்தில் உண்மையான நம்பகத்தையும் விளைவையும் ஏற்படுத்துமேயானால் அச்சொல் மதிப்புடையதாகிறது."[1] இவ்வகையில் குறிப்பிட்ட ஆன்றோர்களின் வாக்கு மற்றும் அவர்களால் ஏற்படும் சில மாற்றங்களைச் செல்வாக்கு என்கிறோம். செல்வாக்கு என்ற சொல்லிற்குப் பொருள் விளக்குகையில் "நாடெங்கும் செல்லும் மதிப்பு"[2] என்று சென்னைப் பல்கலைக்கழக அகராதி குறிப்பிட்டுள்ளதும் ஈண்டு நோக்கத்தக்கது. செல்வாக்கு, தாக்கம் என்ற இரண்டு சொற்களும் ஒரே பொருளிலேயே மேலை நாட்டினரால் கையாளப்படுகிறது. அவ்வகையிலேயே இவ் ஆய்வேட்டிலும் கையாளப்பட்டுள்ளது.

### ஒரே மொழியில் செல்வாக்கு

சங்கப் புலவர்களுக்கும் ஆய்வார்களுக்கும் தமிழ்மொழியே தாய்மொழியாக இருப்பினும் இருவரும் வெவ்வேறு காலத்தவர்கள்

அவர்களது படைப்புகளும், பாடுபொருளும் தம்முள் வேறுபட்டவை இருந்தபோதிலும் அவை தமக்குள் செல்வாக்குப் பெற்றிருக்கின்றன.

"ஒன்றுக் கொன்று தொடர்புடைய இரு நூல்களில் ஒரு நூலின் தாக்கம் மற்றொன்றின் மீது காணப்படுவது இலக்கிய ஆய்வில் ஒரு முக்கியமான பகுதி. ஒப்பிலக்கியத்தில் இத்தகைய செல்வாக்கு ஒருமைமயமான கொள்கையும் ஆகும். ஏனெனில் ஓர் அறிவுச் சூன்யமான நிலையில் எந்த ஆசிரியனோ அவனுடைய நூலோ தோன்றவோ அன்றி அறிவு வளரவோ முடியாது. தனது மொழியிலிருந்தோ அல்லது அயல்மொழியிலிருந்தோ சிற்சில கருத்துக்களின் ஆதாரம் வந்திருந்தாலும் அறிந்தோ அறியாமலோ ஓர் ஆசிரியனால் இரவல் வாங்கப்பட்ட அக்கருத்துக்களில் தூண்டப்பட்டுத்தான் இலக்கிய வளர்ச்சியே ஏற்படுத்துகிறது."[3] என்று ஒரே மொழியல் வெவ்வேறு இலக்கியங்கள் செல்வாக்குப் பெறமுடியும் என்பதை பிராவர் எடுத்துக்காட்டுகிறார்.

**செல்வாக்குத் தோன்றல்**

செல்வாக்குத் தோன்றும் இடங்களாகத் தமிழண்ணல் அவர்கள்,

1. "ஓர் இலக்கியத்திலிருந்து பிறிதொன்று நேரே கடன் வாங்கிய பகுதிகளை சொல், தொடர், கருத்து அனையன, ஒருவர் காணுதல் கூடும்.
2. தூண்டுதல்களால் ஒருவர் புதியன படைத்திருந்தால் அதற்குக் காரணமான முன்னையவற்றை ஒருவர் அறிய முற்படலாம். இதில் ஒன்றைப் படித்ததால் எழுந்த மனவுணர்வுத் தூண்டுதலால் முன்னையதன் சாயலுடன் ஒரு நூல் படைக்கப்படுதல் கூடுமே தவிர வேறுதாக்கமின்று.
3. முன்னைய நூல்களைப் படித்த அகத்தெழுச்சியால் அதன் சாயல் மட்டுமின்றி அமைப்பும் சிறப்பும் அதனிலும் சிறக்கப் படைத்து விடுவதுண்டு. இது வெறும் தூண்டுதல் மட்டுமன்று. வழிகாட்டியாகவும் அமையும்.
4. ஒரு நாட்டில் தங்கி வாழும் பிறமொழியினர் சென்றேறிய மொழியில் எழுதும்பொழுது தங்களையும் அறியாமல் தமது

முன்னைய தாய்மொழிப் பண்புகளைப் பின்னையதில் கலப்பர். இதுவும் அம்மொழியில் ஏற்படும் ஒருவகைத் தாக்கமே.

5. மறைமுகத் தாக்கமானவை உய்த்துணரப்பட வேண்டியன. மேலைநாட்டாசிரியர் ஒருவரை நம் மொழியில் ஒருவர் பின்பற்றி எழுதலாம். அவர் செல்வாக்கைப் பெற்றுவிட்டால் மேலைநாட்டு நூல்களையே படிக்காத ஒருவரும் தம் மொழியில் செல்வாக்குப் பெற்றவரது தாக்கத்தால் தம் நூல்களை அம்முறையில் அமைக்கலாம்.

6. எதிர்முகத் தாக்கமாக ஒரு நூலுக்கு எதிரானவற்றையே சிந்தித்து ஒருவர் எழுதலாம்"[4]

என்று குறிப்பிடுகிறார். மேற்குறிப்பிட்டுள்ள செல்வாக்குக் கொள்கையின் அடிப்படையில் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சங்க இலக்கியம் ஏற்படுத்தியுள்ள செல்வாக்கை அறியமுடிகிறது.

சங்க இலக்கியப் பாடல்களைத் தம் மனதில் நிலைநிறுத்திய ஆழ்வார்கள் தம் பாசுரங்களில் தங்களுக்கு முற்பட்ட சங்க நூல்களினின்று பெற்ற சொல், தொடர், கருத்து, உத்தி ஆகியவை செல்வாக்குப் பெற்றிருத்தலை இவ்ஆய்வு விளக்குகிறது.

## கருதுகோள்

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சங்க இலக்கியம் ஏற்படுத்தியுள்ள செல்வாக்கை ஒப்பிட்டுக் காணுவதே இவ்வாய்வின் கருதுகோளாகும்.

சங்க இலக்கியம் மற்றும் நாலாயிர திவ்யப் பிரபந்தம் ஆகியவற்றின் விரிந்த பரப்பு கருதி செல்வாக்கின் இன்றியமையாக் கூறுகள் மட்டும் இவ்ஆய்வில் எடுத்துக் கொள்ளப்பட்டன.

## ஆய்வேட்டின் அமைப்பு

அடியிற்கண்ட ஐந்து இயல்களைக் கொண்டதாக இவ்வாய்வு அமைந்துள்ளது.

'சொல் தொடர் செல்வாக்கு' என்னும் இரண்டாம் இயல் சங்க இலக்கிய யாப்பு அமைப்பு, பாடல் முறை, சொல், தொடர் ஆகியவை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பொருள் மாற்றம் பெற்றும், பெறாமலும் இடம்பெற்றுள்ளதை ஆராய்கிறது.

‘திணைச் செல்வாக்கு’ எனும் மூன்றாமியல் சங்க இலக்கிய அகத்திணை, புறத்திணைகளின் துறைகள் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பெற்றுள்ள இடத்தை மதிப்பிடுகிறது. சங்க இலக்கியத்தின் உயிர் நாடி அகப்புறத் திணைகளாகும். ஆனால் பக்தி இலக்கியத்தில் திருமால் தலைவனாகவும், தம்மைத் தலைவியாகவும் வைத்து ஆழ்வார்கள் பாடிய நாயக நாயகி பாவம் ஒப்பிடப்படுகிறது. பக்தியை அடியொற்றியே பாடியிருப்பினும் சங்க இலக்கிய அகம், புறம் துறைகள் செல்வாக்குப் பெற்றதை எடுத்துக் காட்டுகிறது.

‘வாழ்வியல் செல்வாக்கு’ எனும் நான்காமியல் சங்க கால மக்களின் வாழ்க்கை, நாகரிகம், பண்பாடு ஆகியவை எவ்வாறு நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த பாங்கினை ஒப்பிட்டுரைக்கின்றது.

‘உத்திச் செல்வாக்கு’ என்னும் ஐந்தாமியல் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தியுள்ள உவமை, இயற்கை வருணனை, நுண்கலை ஆகியவை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் எவ்வாறு செல்வாக்குற்றிருக்கிறது என்பதை எடுத்துக் காட்டுகிறது. முடிவுரையில் ஆய்வு முடிபுகள் சுட்டப்பட்டுள்ளன.

ஆய்விற்குப் பயன்பட்ட முதன்மை, துணைமை ஆதார நூற்கள் துணைநூற் பட்டியலில் கொடுக்கப்பட்டுள்ளன.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சங்க இலக்கியம் மட்டுமன்றி, தொடர்ந்து வந்த பதிணென் கீழ்க்கணக்கு, காப்பியம் மற்றும் தேவார, திருவாசகங்கள் ஏற்படுத்திய செல்வாக்கிற்குரிய பகுதிகள் மேலாய்விற்குப் பயன்படும் நோக்கில் பின்னிணைப்பில் தரப்பட்டுள்ளன.

## அடிக்குறிப்புகள்

1. *மு.இளமுருகன், தமிழ்ப் பெருங்காப்பியங்களில் சங்க இலக்கியத்தின் செல்வாக்கு, ப.20.*
2. Tamil Lexicon, Vol.III, p.1610.
3. *வை.சச்சிதானந்தன், ஒப்பிலக்கியம், ப.39.*
4. *தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம், ப.181.*

# 2.0. சொல், தொடர் செல்வாக்கு

மக்களின் வாழ்க்கை முறையை அறிந்து கொள்வதற்குப் பெரிதும் துணைபுரிவது இலக்கியங்கள் ஆகும் பிற்காலத்தில் வாழ்கின்ற மனிதர்கள் தங்களது படைப்புத்திறனை வெளியிடும்போது அவர்கள் கற்ற கல்வியின் தாக்கம் வெளிப்படுகிறது. அவ்வகையில் சங்க இலக்கியத்தை அறிந்த ஆழ்வார்கள் தங்களது பக்தி படைப்பான நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் அதனை வெளிப்படுத்தவும் செய்திருக்கிறார்கள். சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள இலக்கிய அமைப்பு முறை, சொல் மற்றும் தொடர்கள் திவ்ய பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ளமையை இவ்வியல் எடுத்துக்காட்டுகிறது.

## அமைப்பு

கி.பி.7, 8 ஆம் நூற்றாண்டளவில் தோன்றிய பக்தி இலக்கியமான திவ்ய பிரபந்தமானது தொடக்கத்தில் வைணவ மதத்தைப் பரப்புவதற்காகப் படைக்கப்பட்ட போதிலும் அது முன்னர்த்தோன்றிய சங்க இலக்கிய அமைப்புமுறையை பின்பற்றி முன்னோர்களின் கருத்துக்களைப் பாதுகாப்பதாக அமைந்துள்ளது.

### 1. அந்தாதி

அந்தத்தை ஆதியாக உடைய அந்தாதி அமைப்பு முறையானது சங்க இலக்கியங்களிலே தோற்றம் பெற்று திவ்ய பிரபந்த காலத்தில் வளர்ச்சியடையத் துவங்கியது எனலாம்.

மண்டினிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும் ...

(புறம்., 2)

என்ற பாடல் அந்தாதி முறைக்குச் சான்றாக அமைந்துள்ளது. இந்த அமைப்பு முறை திவ்யபிரபந்தத்தில் வளர்ச்சியடைந்து திருவந்தாதியாக இடம் பெற்றுள்ளது. மேலும் நம்மாழ்வாரின் பாசுரங்கள் அந்தாதி முறையில் பாடப்பட்டுள்ளன.

எழுவார் விடைகொள்வார் ஈன்துழயானை

வழுவா வகைநினைந்து வைகல்-தொழுவார்

வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே வானோர்

மனச்சுடரைத் தூண்டும் மலை

(நா.தி.பி., 2107)

*என்று மலை என்ற சொல்லில் முடிந்து உள்ளது. அதனைத் தொடர்ந்து, ''மலையால் குடைகவித்து மாவாய்பிளந்து ... (நா.தி.பி., 2108) என்ற பாடல் அந்தாதியாக இடம்பெற்றுள்ளது.*

## 2. பதிகம்

*சங்க இலக்கியப் பாடல்களில் பதிற்றுப்பத்தில் பதிகமுறை இடம் பெற்றுள்ளது. பதிகம் என்பது பத்து பாடல்கள் கொண்ட அமைப்பு முறையாகும். ஐங்குறுநூற்றிலும் இவ்வமைப்பு காணப்பட்டபோதிலும் அது தெய்யோபத்து மஞ்ஞை பத்து என்று குறிப்பிடப்பட்டுள்ளது. நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் பாசுர அமைப்பு முறையானது பதிகத்திலும் அமைக்கப்பட்டுள்ளதால் சங்க இலக்கிய பதிகமுறையை ஆழ்வார்கள் பின்பற்றியமையை அறியமுடிகிறது.*

### தொகுப்பு முறை

*சங்க இலக்கியங்கள் உதிரிப்பாடல்களாக (தனிப்பாடல்களாக) இருப்பினும் அவற்றை முறையாக தொகுத்து அளித்து எண்பகுப்பு முறை செய்ததைப் போன்று திவ்ய பிரபந்த பாசுரங்களும் ஆழ்வார்களால் பாடப்பட்டுள்ள போதிலும் நாதமுனிகளால் தொகுக்கப்பட்டு நாலாயிரம் என்று எண்பகுப்பு செய்யப்பட்டு உள்ளது. ஆனால் அகம், புறம் என்று தனித்தனியாகப் பிரிக்கப்படவில்லை. அகமாக இருப்பினும் புறமாக இருப்பினும் நாலாயிர திவ்ய பிரபந்த பாடல்கள் பக்தியையே உட்பொருளாகக் கொண்டது இதற்குக் காரணமாக இருக்கலாம்.*

### யாப்பு

*திவ்ய பிரபந்தத்தின் அமைப்பு சங்க இலக்கியங்களின் அமைப்பை ஒன்று சேர்த்து தன்னகத்தேக் கொண்டுள்ளது. திவ்யபிரபந்தத்தில் சில*

பாசுரங்கள் கலிப்பாவிலும் கலிவிருத்தத்திலும் பாடப்பட்டுள்ளது கலித்தொகையின் வளர்ச்சிநிலை எனலாம். பரிபாடல் போன்று திவ்ய பிரபந்தமும் இசையுடன் பாடக்கூடியதாகவும் அமைந்து உள்ளது. திவ்ய பிரபந்தத்தில் சங்க இலக்கிய இசை வளர்ச்சியடைந்ததை அறியமுடிகிறது. "நம்மாழ்வார் அருளிய திருவாய்மொழியில் சில தொடர்கள் யாப்புக் குறிப்புடையவனாக அமைந்துள. அவற்றுக்கு உரையிட்ட வாதிகேசரி அழகிய மணவாளச் சீயர் என்னும் உரையாசிரியர் இதனை உணர்ந்து நிரைநிறை ஆயிரம் (1, 1-11) என்பதற்குச் சொல்லும், பொருளும், இயலும், இசையும், தாளமும் அபிநயமும், ஒன்றுக்கொன்று சேருகையாலே நிரந்து நிறைந்து ஆயிரம் என்றும் "அளவியன்ற அந்தாதி ஆயிரம் யாப்பலங்காரங்களைச் சொல்லுகிற பரிமாணங்களிலே இருப்பதாய் அந்தாதியான ஆயிரம் என்றும் நிரைக் கொளந்தாதியோராயிரத்துள் (5, 3-11) என்பதற்கு எழுத்தும் அசையும், சீரும் தளையும் அடியும், தொடையும், பாவும் பாவினமும் இசையும், தாளமும், மற்றுமுள்ள சப்தாங்காரமும் உடைத்தானது என்றும் யாப்புக்குரிய உறுப்புக்களைச் சுட்டிக்காட்டிப் பொருள் வழங்கியது காணலாம்"[1] என்று கூறுகிறார்.

**துயிலெடை நிலை**

சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள துயலெடைநிலையானது பக்தி இலக்கியமான நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் திருப்பள்ளியெழுச்சியாக மலர்ந்தது. இதனை, "அரசர்களுக்குப் பாடிவந்த துயிலெடைநிலையே பக்திநெறிக் காலத்தில் கடவுளைத் துயிலெழுப்பும் பாடலாக மாறியது. அப்போது துயிலெடைநிலை என்ற பெயரும் மாறித் திருப்பள்ளியெழுச்சி என்ற புதுப்பெயரும் மாறிவிட்டது"[2] என்று 'காலந்தோறும் தமிழ்' என்ற நூலில் மு.வ. குறிப்பிடுகிறார். "அரசனைத் தூங்க வைக்கவும், எழுப்பவும் பாடும் முறை இருக்கிறது. முற்காலத்தில் அரசனைப் புகழ்வதற்கென்றே சில தொழிலர் இருந்தனர். அவர்கள் சூதர், மாகதர், வைதாளிகள் எனப்பட்டனர். அவர்களை நின்றேத்துவார், இருந்தேத்துவார் என்று சிலப்பதிகாரம் பகரும் அரசர்கள் உறங்கச் செல்லும்போதும், விழித்தெழும் போதும் அவர்கள் பாடினர் மன்னவனைத் துயிலெழுப்புதலை,

தாவில் நல்லிசை கருதிய கிடந்தோர்க்குச்

சூதர் ஏத்திய துயில் எடை நிலையும் ...

(தொல்.புறம்., 88)

என்ற நூற்பா விளக்குகிறது. அரசனுக்காகப் பாடப்பட்ட துயிலெடை நிலையை இறைவனுக்காகப் பாடும் திருப்பள்ளியெழுச்சியாக மாற்றினர். சூதர்கள் பாடிய பாடல் சமயம் வளர்ப்பவர்கள் பாடும் பாடலாக மாறியது. பகைவருக்கு அருள்புரிய எழுவேண்டும் என்று துயிலெழ வேண்டிய காரணமானது உயிர்களின் தமோகுணம் தெளிவடைய இறைவனை எழுப்புவதாக மாறியது."[3] ஆண்டாளின் திருப்பாவையில் திருப்பள்ளியெழுச்சியில் ஒற்றுமை, வேற்றுமைக் கூறுகள் உள்ளன. திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களில் இறைவனை ஆடவர் துயிலுணர்த்த பாவைப் பாடல்களில் மகளிர் துயிலுணர்த்துகின்றனர். திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களில் நோன்பு நோற்காமலே துயிலுணர்த்த பாவைப்பாடலில் நோற்றபிறகு, துயிலுணர்த்துவதாக அமைந்துள்ளது. திருப்பள்ளியெழுச்சிப் பாடல்கள் நாள்தோறும் இறைவனை எழுப்பப் பாடப்படுகின்றன. பாவைப்பாடல்கள் மார்கழியில்_மட்டும் பாடப்படுகின்றன. திருப்பள்ளியெழுச்சிப் பாடல்களில் இறைவனின் அருள் மட்டுமே வேண்டப்படுகிறது. பாவைப் பாடலில் என்னென்ன அருளவேண்டும் என்று பட்டியலிட்டுக் காட்டப்படுகிறது. திருப்பாவையின் முற்பகுதி பெண்ணொருத்தி மற்றொருத்தியைத் துயிலெழுப்பும் முறையிலும் (1-20) பிற்பகுதி கண்ணனை மகளிர் பறை தரவேண்டி துயிலெழுப்புவதாகவும் அமைந்துள்ளது."[4]

சங்க இலக்கியத்தில் துயிலெடைநிலையை

வெள்ளியு மிருவிசும் போர்தரும் புள்ளும்

உயர்சினைக் குடம்பைக் குரற்றோற் றினவே

பொய்கையும் போதுகண் விழித்தன பைபயச்

சுடருஞ் சுருங்கின் றொளியே மாடெழுந்

திரங்குரன் முரசமொடு வலம்புரி யார்ப்ப ...

(புறம்., 397)

என்ற கூறுகிறது.

கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைந்தான்
கனையிருள கன்றது காலையம் பொழுதாய்
மதுவிரிந்தொழுகின மாமலரெல்லாம்
வானவ ரரசர்கள் வந்து வந்தீண்டி ...

(நா.தி.பி., 917)

என்று கூறுகிறது. ~~இதனை திவ்யபிரபந்தம்~~,

இயல் இசை நாடகம் என்று பாகுபடுத்தப்பட்ட தமிழ் மொழியில் நாடகமானது பாமரர்களும் விரும்பும் ஆற்றல் படைத்தது. இது சங்க காலத்தில் கூத்து என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கி.பி.எட்டாம் நூற்றாண்டளவில் தோன்றிய பக்தி இலக்கியத்தில் இது இடம்பெற்றுள்ளது.

ஆண்டாள் பாடிய பாசுரங்களில் திருப்பாவையானது வடிவத்தில் இயலாகவும், இசையுடன் பாடக்கூடிய பாவகையைப் பெற்றதால் இசையாகவும் தோழி, தலைவி இவர்களின் உரையாடல் போன்று படைக்கப்பட்டுள்ளதால் நாடகப்பாங்கும் பெற்று மிளிரக் காணலாம்.

**வஞ்சினக் காஞ்சி**

புறநானூற்றில் இடம்பெற்றுள்ள துறைகளில் வஞ்சினக் காஞ்சி என்பது சூளுரைத்தல் ஆகும். சூளுரைத்தல் பற்றிய செய்தி புறநானூற்றில் இடம்பெற்றுள்ளது போன்றே நாலாயிர திவ்ய பிரபந்தத்திலும் பக்தி அடிப்படையில் இடம்பெற்றுள்ளது.

மடங்கலிற் சினைஇய மடங்களவுள்ளத்
தடங்காத் தானை வேந்த ருடங்கியைத்
தென்னொடு பொழுது மென்பவவரை ...

(புறம்., 71)

என்று ஒல்லையூர்ந்த பூதப்பாண்டியன் பாடல் சூளுரைத்தலை விளக்குகிறது. நாலாயிர திவ்ய பிரபந்தத்தில்,

செந்தழலே வந்து அழலைச் செய்திடினும் செங்கமலம்
அந்தரம்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்

**வெந்துயர் வீட்டாவிடினும் விற்றுவக் கோட்டம்மா! உன்**

**அந்தமில் சீர்க்கல்லால் அகம்குழைய மாட்டேனே! ...**

(நா.தி.பி., 693)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**இயன்மொழி வாழ்த்து**

*மன்னனது புகழைக்கூறி வாழ்த்துவது இயன்மொழி வாழ்த்தாகும். புறநானூற்றில் "நானில் முழுடையனாதலிற் பெருஞ் செல்வமுடையன், நீ அவன்பாற் செல்லென ஆற்றுப்படுத்தாவாறு, அவனது இயல்பைப் புகழ்ந்தமையான் இயன்மொழியாயிற்று, இன்ன வள்ளல் இத்தகைய பொருளை வழங்கினார், நீயும் அவர்போல் எமக்கு வழங்குவாயாக என்று இரவலன் புரவலனுக்குக் கூறியதும் பெருமைமிக்க தலைவன் ஒருவனது தன்மையைக் கூறிப்புகழ்வதும் இயன்மொழி வாழ்த்தாகும். இதனை,*

நாடனென்கோ வூர னென்கோ

பாடிமிழ் பனிக்கடற் சேர்ப்ப னென்கோ

யாங்கன மொழிகோ வோங்கு வாட்கோதையைப்

புனவர் தட்டை புடைப்பினயல

திறங்குகதி ரலமரு கழனியும்

பிறங்கு நீர்ச் சேர்ப்பினும் புள்ளொருங் கெழுமே ...

(புறம்., 49)

*என்று கூறுகிறது. இதனை நாலாயிர திவ்ய பிரபந்தத்தில்,*

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு

பலகோடி நூறாயிரம்

மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்

செவ்வடி செவ்வி திருக்காப்பு ...

(நா.தி.பி., 1)

*என்று இடம்பெற்றுள்ளது. இப்பாடலில் ஆழ்வார் திருமாலை வாழ்த்துவதாக அமைந்துள்ளது.*

**நிலையாமை**

*சங்க இலக்கியமான புறநானூற்றில் காஞ்சித்திணையில் நிலையாமை பற்றிய செய்திகள் இடம்பெறுவது போல நாலாயிர திவ்ய பிரபந்தத்திலும் நிலையாமை பற்றிய செய்திகள் இடம்பெற்றுள்ளன.*

மடங்கலிற் சினைஇய மடங்காவுள்ளத்
தடங்காத் தானை வேந்த ருடங்கியைந்
தென்னாடு பொருது மென்ப வவரை ...

(புறம்., 71)

*என்ற பாடல் காஞ்சித்திணை பற்றிய பாடலாகும்.* இத்திணை,

சாமாறும் கெடுமாறும் தமருற்றார்தலைத் தலைப்பெய்து
ஏமாறிக் கிடந்தலற்றும் இவையென்ன உலகியற்கை?
ஆமாறொன்ற றியேன் நான் அரவணையாய்! அம்மானே
கூமாறே வினாகண்டாய் அடியேனைக் குறிக்கொண்டே ...

(நா.தி.பி., 3096)

*என்று திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ளது.*

**தாபதநிலை!**

*தாபத நிலை என்பது தலைவனைப்பிரிந்த தலைவியின் மாற்றங்களைக் (தலைவி அழுதலை) கூறுவதாகும்.*

ஓவத்தன்ன விடறுடை வரைப்பிற்
பாவையன்ன குறுந்தொடி மகளிர் ...

(புறம்., 251)

*என்றபாடல் தாபதவகையைச் சேர்ந்ததாகும். இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தமானது,*

குழற்கோவலர் மடப்பாவையும் மண்மகளும் திருவும்
நிழற்போல் வனர்கண்டு நிற்குங்கொல்? ...

(நா.தி.பி., 2480)

*என்ற பாடல் விளக்குகிறது.*

### மனைவியோடு சேர்த்து வாழ்த்துதல்

சங்க இலக்கியத்தில் ஒரு ஆணை வாழ்த்தும் போது அவனுடைய மனைவியை சேர்த்துக் கூறும்முறை காணப்படுகிறது. அதே முறை திவ்ய பிரபந்தத்திலும் காணப்படுகிறது.

**மலர்போன் மழைக்கண் மங்கையர் கணவன் ...**

(மலை., 58)

என்றும் புறநானூற்றிலும், பதிற்றுப்பத்திலும், திருமுருகாற்றுப்படையிலும் இடம்பெற்றுள்ளது, இது நாலாயிர திவ்ய பிரபந்தத்தில்,

**தருமனையே நோக்கும் ஒண்தாமரையாள் கேள்வன் ...**

(நா.தி.பி., 2148)

என்று இடம்பெற்றுள்ளது.

### ஆற்றுப்படுத்தல்

சங்க இலக்கியத்தில் பத்துப்பாட்டில் ஆற்றுப்படுத்தல் சிறப்புப் பெற்றதாகும். ஆற்றுப்படுத்தல் என்பது பரிசு பெற்ற பாணன் திரும்பி வரும்போது எதிர்படுகின்ற பாணனை தான் பரிசுபெற்ற மன்னனின் புகழ், ஈகை, வீரம் ஆகியவற்றைக் கூறி அவனிடத்து வழியனுப்புதல் ஆற்றுப்படுத்தல் ஆகும், நக்கீரனின் திருமுருகாற்றுப்படை முருகப்பெருமானிடத்து அடியவர்களை வழிபடுத்துவதாக அமைந்துள்ளது போன்றே நாலாயிர திவ்ய பிரபந்தத்திலும் திருமாலிடத்து அடியவர்களை வழியனுப்பும் முறை காணப்படுகிறது. "ஆற்றுப்படை நூல்களில் எழில் கொழிக்கின்ற காட்சிகள் இயற்கைச் சூழல்கள் புரவலன் நாட்டு வளம் ஆகியவை குறிக்கப்படுகின்றன."[5]

**மூன்றுவகைக் குறித்த முத்தீச் செல்வத்து**
**இருப்புப்பாளர் பொழுதறிந்து நுவல ...**

(திருமுரு., 180)

என்று தொடங்கும் பாடல் விளக்குகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தமானது.

**ஓடியோடிப் பலபிறப்பும் பிறந்து மற்றோர் தெய்வம்**
**பாடியாடிப் பணிந்து பல்படிகால் வழியேறிக் கண்டீர்**

கூடிவானவரேத்த நின்ற திருக்குருகூரதனுள்
ஆடுபுட் கொடியாதி மூர்த்திக்கு அடிமை புகுவதுவே ...
(நா.தி.பி., 3112)

என்றிடம் பெற்றுள்ளது.

**அடுக்குத் தொடர்**

ஒரே சொல் ஒருவாக்கியத்தில் அடுத்தடுத்து வருவதாயும் அவற்றைப் பிரிக்குங்கால் பொருள் தருவதாயும் அமைவது அடுக்குத் தொடர் எனப்படும். இது சங்க இலக்கியத்திலும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளது.

வாழை வாழை ...
(சிறு.பா., 20)

இதேபோன்று திவ்யப் பிரபந்தத்தில்,

கோவிந்தா கோவிந்தா ...
(நா.தி.பி., 625)

என்று அடுக்குத் தொடரில் இடம்பெற்றுள்ளது.

**வேற்றுமைத் தொகை**

ஐ, ஆல், கு, இன் அது, கண் என்னும் இரண்டு முதல் ஏழு வரை உள்ள வேற்றுமை உருபுகள் இடையில் மறைந்து நிற்க இரண்டு சொற்கள் தொடர்வது வேற்றுமைத் தொகை ஆகும். இதனை,

இரண்டு முதலாம் இடைஆ றுருபும்
வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகையே ...
(ந.நூ., 363)

என்று கூறுகிறது. வேற்றுமைத் தொகை சங்க இலக்கியத்தில்,

பொய்கைப் பூத்த ...
(ஐங் -34)

என்று இடம் பெற்றுள்ளது. இதில் இது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

பொன்னடி போற்றும் ...
(நா.தி.பி., இரா.நூ., 10)

என்று இரண்டாம் வேற்றுமைப்புருபு ‘ஐ’ மறைந்து வந்துள்ளது.

**வினைத்தொகை**

ஒரு பெயரெச்சத்தில் காலம் காட்டும் இடைநிலையும் பெயரெச்ச விகுதியும் மறைந்து நிற்க, வினைப்பகுதி மட்டும் ஒரு பெயரைத் தொடர்ந்து வருவது வினைத்தொகை ஆகும். இதனை,

காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை ...

(நா.நூ., 364)

என்று கூறுகிறது. சங்க இலக்கியத்தில் வினைத்தொகை,

உண்கண்...

(ஐங்., 37)

என்று இடம்பெற்றுள்ளது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம்.

வம்புமலர்கின்ற பொழி ...

(நா.தி.பி., 1440)

என்று இடம் பெற்றுள்ளது.

**பண்புத்தொகை**

பண்புச் சொல்லுக்கும் பண்பையுடைய பொருளைக் குறிக்கும் சொல்லுக்கும் இடையில் ஆகிய என்னும் பண்புருபு மறைந்து வருவது பண்புத்தொகையாகும். இதனை,

பண்பை விளக்கும் மொழிதொக் கனவும்
ஒரு பொருட் கிருபெயர் வந்தவும் குணத்தொகை ...

(நா.நூ., 365)

என்று கூறுகிறது. பண்புத்தொகை சங்க இலக்கியத்தில்,

பச்சைப் பரியரைக் கமுகின் ...

(பெரும்., 6)

இது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

பைம் பொன் ...

(நா.தி.பி., 1440)

என்று எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

**உம்மைத் தொகை**

சொற்கள் ஒன்றோடொன்று தொடர்ந்து வரும்போது இடையிலும் ஈற்றிலும் உம் என்னும் இடைச்சொல் மறைந்து வருவது உம்மைத் தொகை ஆகும். இதனை,

எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
எனும் நான் களவையுள் உம்மிலதத் தொகை...

(ந.நூ., 368)

என்று எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. இது சங்க இலக்கியத்தில்,

இது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

காலை மாலை ...

(நா.தி.பி., 3656)

என்று உம்மைத் தொகை மறைந்து வந்துள்ளது.

**உவமைத் தொகை**

உவமைச்சொல், உவமேயச் சொல் ஆகியவற்றிற்கு இடையில் போல, புரைய முதலிய உவமஉருபுகள் மறைந்து வருவது உவமைத் தொகையாகும். இதனை,

உவம உருபில துவமத் தொகையே ...

(ந.நூ., 366)

எடுத்துக் காட்டுகிறது. சங்க இலக்கியத்தில் உவமத்தொகை.

தாமரை முகம் ...

(கலி., 15)

என்று இடம் பெற்றுள்ளது. இதனை நாலாயிரதிவ்யபிரபந்தம்.

தாமரை பாதம், கைகள் கண்கள் ... (நா.தி.பி. 2855)

என்று முகத்திற்கு உவமையாகிய தாமரை திவ்யப் பிரபந்தத்தில் கைக்கு உவமையாக வந்துள்ள போதும் இரண்டிலும் உவம உருபு மறைந்து வந்துள்ளது.

**அன்மொழித் தொகை**

"வேற்றுமை, வினை, பண்பு, உவமை, உம்மைத் தொகைகளை அடுத்து ஈற்றில் வேறொரு சொல் மறைந்து வருவது அன்மொழித்தொகையாம்

0எத்தொகையை அடுத்து வருகிறதோ அதைக்கொண்டு அது பெயர் கூறப்படும். இதனை,

ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி ...

(ந.நூ., 367)

என்று எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இது சங்க இலக்கியத்தில்,

துடியிடை ...

என்று இடம்பெற்றுள்ளது. இது திவ்யப் பிரபந்தத்தில்,

துடிகொள் நுண்ணிடைச் சுரிகுழல் துளங்கெயிற்றி
னங்கொடிதிறத்து ...

(நா.தி.பி., 960)

என்று இடம்பெற்றுள்ளது.

**இருபெயரொட்டுப் பண்புத்தொகை**

சிறப்புப் பெயரும் பொதுப்பெயருமாய் இயைந்து ஒரு பொருளைக் குறிக்கும் இரு சொற்களுக்கு இடையே ஆகிய என்னும் பண்புருபு மறைந்து வருவது இருபெயரொட்டுப் பண்புத்தொகை எனப்படும். இருபெயரொட்டுப் பண்புத்தொகை சங்க இலக்கியத்தில்,

தைத்திங்களை தண்கயம் படியும் ...

(நற்., 80)

இது திவ்யப் பிரபந்தத்தில்,

மார்கழித் திங்கள் ...

(நா.தி.பி., 474)

என்று இடம்பெற்றுள்ளது. இவ்வாறு சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள தொகைச் சொற்கள் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளன.

சங்க இலக்கிய பாடல்களுக்குப் பின்னணியாக அமைந்து இருப்பது இயற்கைக் காட்சிகளாகும். தான்கூற வருகின்ற செய்தியை அந்த நிலச் செய்திகளுடனும், காட்சிகளுடனும் தொடர்புபடுத்திக் கூறுவதில் வல்லவர்களாக சங்கப் புலவர்கள் இருந்தனர் என்பதை சங்க இலக்கிய ஐந்திணைப் பாடல்கள் விளக்குகின்றன. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைச் செய்திகளும் மக்களுடைய வாழ்வில் முக்கிய

இடம்பெற்றிருந்தன. அதேப் போன்று நாலாயிர திவ்யப் பிபந்தத்திலும் ஐந்நில காட்சிகள் பக்தியோடு தொடர்புபடுத்திப் பாடப்பட்டுள்ளன.

### குறிஞ்சி

குறிஞ்சித்திணைக்குரிய முதற்பொருளாக மலையும் மலை சார்ந்த இடமும் குறிப்பிடப்பட்டுள்ளது, சங்க இலக்கிய பாடல்களில் அகப்பொருள் காட்சிக்கு சிறந்த பிண்ணனியாக குறிஞ்சிலம் வருணிக்கப்படுகிறது. திவ்யப் பிரபந்தத்திலும் திருமால் வீற்றிருக்கின்ற குறிஞ்சிநிலப் பகுதிகள் சிறந்த பின்னணியுடன் வருணிக்கப்பட்டுள்ளன. குறிஞ்சி நில கருப்பொருளை (ஒன்றினை மட்டும்),

நனிநாணுடைய ணின்னு மஞ்சு
மொலிவெள்ளருவி யோங்குமலை நாடன் ...

(ஐங்., 205)

என்று விளக்குகிறது. இதனை திவய்ப் பிரபந்தமும்,

தேனார் பூஞ்சோலைத் திருவேங்கடமலைமேல்
கானாறாய்ப் பாயும் கருத்துடையே னாவேனே ...

(நா.தி.பி., 683)

என்ற பாடல் விளக்குகிறது.

### முல்லை

காடும் காடுசார்ந்த இடமும் முல்லை நிலத்தின் முதற்பொருள் ஆகின. பிரிவாற்றி இருக்கும் பெண்ணின் (தலைவியின்) உள்ளத்தையும் அவள் பிரிந்த தலைவனை நினைத்து பிறரறியாமல் புலம்புவதற்கு முல்லை நிலத்தின் செழுமையும், கார்காலமும், காரணமாக அமைந்துள்ளன. கார்காலத்து மாலைநேர வருணனையை சங்கப்பாடல்கள் தெளிவுறுத்துவது போலவே திவ்யப் பிரபந்தமும் சிறப்பாக எடுத்துக்காட்டுகிறது. முல்லை நிலத்துக்குத் திருமாலே கடவுளாக இருப்பதுவும் ஆயர்களின் வாழ்க்கைமுறையும் ஒன்றியிருப்பது ஒரு சிறந்த காரணமாக இருக்கலாம். கார்காலத்து மாலைநேரத்தை,

பூங்குழைக் கமர்ந்த ஏந்தெழில் மழைக்கண்

மடவரல் மகளிர் விடகைப் பெய்த ...

(நெடு., 38-39)

*என்று வருணிக்கிறது. இதனை திவ்யப் பிரபந்தம்,*

ஆணிரை மேய்க்க நீபோதி அருமருந்தாவதறியாய்

கானக மெல்லாம் திரிந்து உன்கரிய திருமேனிவாட ...

(நா.தி.பி., 182)

*என்ற பாடல் முல்லைநில முதற்பொருளாகிய காட்டுப்பகுதியைக் குறிப்பிடுகிறது. "சங்க இலக்கியத்தில் பொருந்திய முல்லைப் பாடல்கள் பெரிதும் நான்கு நிலைகளில் அமைகின்றன.*

*(1) பருவ வரவில் தலைவன் வரவைச் சுட்டி அமைவன.*

*(2) வந்த தலைவனைச் சுட்டி அமைவன.*

*(3) தலைவன்-தலைவி நிகழ்த்தும் இல்லறச் சிறப்புரைப்பன*

*(4) பிறதிணைப் பொருளைப் பேசும் திணைமயக்க நிலையன"*[6]

*என்று பிரிக்கப்பட்டுள்ளது.*

**மருதம்**

*வயலும் வயல் சார்ந்த இடமும் மருதத்திணைக்கு முதற்பொருளாகியது. அந்த வயல் பகுதிகளுக்குரிய பொருள்கள், மக்கள், தொழில், கருப்பொருளாக வழங்கப்பட்டன. மருதத் திணைக்குரிய கருப்பொருள்கள் சங்கப்பாடல்களில் இடம் பெறுவதுபோலவே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் மருதச்சூழல் வருணிக்கப்படுகிறது.*

மலைகண்டன்ன நிலைபுணர் நிவப்பின்

பெருநெற் பல்கூட்டெருமை உழவ!

(நற்., 60)

*என்ற பாடலில் மருதநிலம் வருணிக்கப்படுதைப் போலவே நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

பொங்கு தண்ணருவிபுதம் செய்ய பொன்களே சிதறும் இலங்கொளி

செங்கமலம் மலரும் திருக்கோட்டியூரானே

(நா.தி.பி., 1838)

*என்ற பாடல் விளக்குகிறது.*

**நெய்தல்**

*பிரிவையாற்றாது இரங்கும் தலைவியின் நிலையை கடலும் கடல் சார்ந்த இடத்தையும் முதற்பொருளாகக் கொண்ட நெய்தல் நில வருணனை சங்க இலக்கியம் போலவே திவ்யப் பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளன. நெய்தல் நில கருப்பொருள்களுள் ஒன்றான நெய்தல் மலரைக் குறிப்பிட்டு,*

அடும்பினாய் மலர் விரைஇ நெய்தல்
நெடுந்தொடை வேய்ந்த நீர்வார் கூந்தல் ...

(குறு., 401).

*என்ற பாடல் விளக்குகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,*

சங்குதங்கு தடங்கடல் கடல் மல்லையுள் கிடந்தாய் ...

(நா.தி.பி., 1195)

*என்ற பாடலில் நெய்தல் நிலத்திற்குரிய கடலும் கடல் சார்ந்த பகுதியும் குறிப்பிடப்பட்டுள்ளது.*

**பாலைநிலம்**

*பாலைநிலத்தின் கொடுமையை சங்க இலக்கியம் பரவலாக எடுத்து இயம்புகிறது. பாலைநிலம் பற்றிய செய்தியானது,*

அரிதாய அறனெய்தி யருளியோர்க் களித்தலும்
பெரிதாய பகைவென்று பேணாரைத் தெறுதலும்
புரிவமர் காதலிற் புணர்ச்சியுந் தருமெனப் ...

(கலி., 11)

*என்று இடம்பெற்றுள்ளது, இதே செய்தியானது நாலாயிர திவ்யப் பிரபந்தம்,*

கொடுங்கால் சிலையர் நிரைகோளுழவர் காலையில் வெய்ய
கடுங்காலிளைஞர் துடிபடும் கவ்வைத்து அருவினையேன்
நெடுங்காலமும் கண்ணன் நீள் மலர்ப்பாதம் பரவிப்பெற்ற
தொடுங்கா லொசியுமிடை இளமான் சென்ற சூழ்கடமே ...

(நா.தி.பி., 2514)

*என்று செவிலி கூற்றாக இடம்பெற்றுள்ளது.*

**தொடர்**

*சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள சில தொடர்கள் எவ்வித மாற்றமும் இன்றி நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளன.*

**பொய்கையைப் பற்றிய தொடர்**

புனல் பரந்து பொன்கொழிக்கும் ...

(ப.பாலை.வ., 7)

*என்ற தொடர் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

புனல் பரந்து பொன்விளைக்கும் பொய்கை வேலி ...

(நா.தி.பி., 2057)

*என்று மாற்றம் இல்லாமல் இடம்பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள புன்னைமரம் பற்றிய தொடர் எவ்வித மாற்றமும் இன்றி இடம்பெற்றுள்ளது.*

**அன்னை வாழி வேண்டன்னை புன்னை**
**பொன்னிறம் விரியும் ...**

(ஐங்., 110)

*என்ற வரியானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்*

**புன்னை பொன்னேய் தாதுதிர்க்கும் புள்ளம் பூதங்குடிதானே ...**

(நா.தி.பி., 1313)

*என்று இடம்பெற்றுள்ளது. மேலும்,*

அந்தரத்து அமரர் அடியினை வணங்க ...

(மதுரைக்., 215)

*என்ற இந்தத் தொடரானது எவ்விதமாற்றமும் இன்றி,*

அந்தரத்து அமரர் அடியினை வணங்க ஆயிரமுகத்தினாலருளி

(நா.தி.பி., 984)

*என்று இடம்பெற்றுள்ளது. இவ்வாறு சங்க இலக்கிய கவிஞர்கள் பயன்படுத்திய தொடர்கள் எவ்வித மாற்றமும் இன்றி நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளமை தொடர் செல்வாக்கை அறிவுறுத்துவாக அமைந்துள்ளது.*

**சொற் செல்வாக்கு**

*சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள ஒரு சீர் அளவுள்ள சொற்கள் பல நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பொருள் மாற்றம் பெற்றும், பொருள் மாற்றம் பெறாமலும் இடம் பெற்றுள்ளன. அவை இயற்கையை பற்றியன, உணவுப் பொருள்கள் பற்றியன, பறவைகள் பற்றியன, நீழ்வாழ்வனபற்றியன, விலங்குகள் பற்றியன, பெண்கள் பற்றியன என்று பகுத்துக் காட்டப்பட்டுள்ளன.*

**இயற்கையைப் பற்றியன**

*நிலப்பரப்பில் எழுபது விழுக்காட்டிற்கும் மேற்பட்டு நீர்பரப்பு காணப்படுகிறது அதுபோன்றே பாடல்களிலும் நீர்பரப்பு பலபெயர்களில் வருணனையாகவும் கருப்பொருளாகவும் செய்தியாகவும் இடம்பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் நீர்பரப்பினை பலபெயர்கள் கொண்டு குறிப்பிடுவது போல் திவ்யப் பிரபந்தமும் குறிப்பிடுகிறது.*

**பௌவம்**

*பௌவம் என்ற சொல் கடல் என்ற பொருளில்*

பேஎ நிலைஇய இரும் பௌவத்துக்
கொடும் புணரி விலங்கு போழக் ...

(மதுரைக்., 76)

*என்று கூறுவதை திவ்யப் பிரபந்தமும்,*

பரத்திலும் பரத்தையாதி பௌவ நீரனைக் கிடந்து ...

(நா.தி.பி., 780)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**தண்கடல்**

*தண்கடல் என்ற சொல் குளிர்ச்சி பொருந்திய கடல் என்ற பொருளில்,*

தண்கடல் வரைப்பில் தாங்குநர்ப் பெறாது ...

(பெரும்., 18)

*என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

தண்கடல் வட்டத்துள்ளாரைத் தமக்கிரையாத் தடிந்துண்ணும்

(நா.தி.பி., 2942)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**முந்நீர்**

*முந்நீர் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

மாகா லெடுத்த முந்நீர் போல ...

(மதுரைக்., 361)

*என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

கல்லின் முந்நீர் மாற்றிவந்து காவல் கடந்து ...

(நா.தி.பி., 1873)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**புணரி**

*புணரி என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

படுநீர்ப் புணரியிற் பரந்த பாடி ...

((முல்லை., 28)

*என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

பொங்கு புணரிக்கடல் சூழாடை நிலமாமகள் மலர்மா மங்கை ...

(நா.தி.பி., 1546)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**அருவி**

*சங்க இலக்கியங்களில் அருவி மக்களின் வாழ்வில் இயைந்த ஒன்றாக எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. அச்சொல் திவ்யப் பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளது.*

கலிழ்ந்து வீழ் அருவிப் பாடுவிறர் தயல ...

(நெடு., 97)

*என்ற இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

வார் புனலந்த ணருவி வட திருவேங்கடத்தை ...

(நா.தி.பி., 2948)

*என்று எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.*

**கங்கையாறு**

ஆறுகளில் சிறந்ததாக கங்கையாறு இலக்கியங்களில் பேசப்படுகிறது. இது வளத்திற்காக மட்டுமன்றி மக்களின் நம்பிக்கையில் ஒன்றாகவும் இன்றுவரை இருந்து வருகின்றது. கங்கையில் நீராடினால் பாவங்கள் தொலைந்து போகும் என்று மக்கள் நம்புகின்றனர். அதுமட்டுமல்லாமல் கங்கையாறு சிவபெருமானின் மனைவி என்றும் அவரது விரிசடையிலிருந்து தோன்றுகிறது என்றும் மக்கள் நம்புகின்றனர். சங்க இலக்கியம்,

கங்கையம் பேரியாறு கடற் படர்ந்தாங்கு ...

(மதுரைக்., 686)

என்று எடுத்துக்காட்டுகிறது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

கங்கை நீர்பயந்த பாதபங்கயத்து எம் அண்ணலே ...

(நா.தி.பீ., 775)

என்று இடம்பெற்றுள்ளது.

**புனல்**

மகளிர் புனலாடுகின்ற செய்தியை சங்க இலக்கியம் எடுத்துக்காட்டுகின்றது. தலைவன் தலைவியைப் பற்றிய அகத்துறைச் செய்திகளைக் கூறும்போது “புனல் தரு புணர்ச்சி” என்று கூறுவது அதிகளவில் இடம்பெற்றுள்ளது. அதே போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் மகளிர் புனலாடல் பற்றிய பாடல்கள் அதிகளவில் இடம்பெற்றுள்ளன. புனல் என்ற சொல்,

புனலாடு மகளிர்க்குப் புணர்துணை யுதவும் ...

(ஐங்., 15)

என்றும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

கலிந்திழி புனலால் புகர்படு கங்கைக் கண்ட மென்னும் கடிநகரே ...

(நா.தி.பி., 392)

என்றும் சொல்லளவில் இடம்பெற்றுள்ளது.

**பொய்கை**

*பொய்கை என்ற சொல், சங்க இலக்கியத்தில்,*

கராஅங் கலித்த கண்ணகன் பொய்கைக் ...

(ப.பாலை, 242)

*என்று இடம் பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

ஏழைமையாற்றவும் பட்டோம் இனியென்றும்
பொய்கைக்கு வாரோம் ...

(நா.தி.பி., 524)

*என்று பெண்கள் கண்ணனிடம் புலம்புவதாகப் படைக்கப்பட்டுள்ளது.*

*மக்களுடைய குறிப்பாக தலைவன் தலைவியின் உள்ள உணர்வுகளை புலப்படுத்துவதற்கு சங்கப்புலவர்கள் பூமிசுழற்சியை பயன்படுத்தினார்கள். அவற்றிலும் பகற்பொழுதை விட இரவுப்பொழுதானது அவர்களது பாடல்களில் சிறப்பிடம் பெற்றிருந்தது. இரவைக் குறிக்க அவர்கள் கங்குல் என்ற சொல்லை பயன்படுத்தினர். ஆனால் அச்சொல் இன்று பேச்சு வழக்கில் இல்லை என்று கூறலாம்.*

கடவுள் வழங்கும் கையறு கங்குறும் ...

(மதுரைக்., 651)

*என்று சங்க இலக்கியம் குறிப்பிட்ட இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

கங்குலும் பகலும் கண்துயிலறியாள் ...

(நா.தி.யி., 3348)

*என்று இடம்பெற்றுள்ளது. இதேப் போன்று இரவு என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

பகலுரு வுற்ற இரவுவர நயந்தோர் ...

(மதுரைக்., 549)

*என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில்,*

இரவு கூர்ந்திருள் பெருகியவரை முழை இரும்பசியது கூர

(நா.தி.பி., 965)

*என்று இடம்பெற்றுள்ளது.*

*நீர்நிலையை போன்றே மலர்களும் சங்ககால மக்களின் வாழ்வில் முக்கிய அங்கமாக இருந்தது என்பதை சங்கப்பாடல்கள் விளக்குகின்றன. மலர்களை வைத்தே சங்கப் புலவர்கள் தம்முடைய கருத்தை, சூழலால் விளக்குகின்றனர். பொதுவாக மலர்கள் கோதை என்ற சொல்லால் குறிப்பிட்டு இருந்தனர். இச்சொல் சங்க இலக்கியத்தில்,*

குரூஉக்கட் பிணையல் கோதை மகளிர் ...

(மலை., 349)

*என்று கூறுகிறது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

கோதைக் குழலாள் அசோதைக்குப் போத்தந்த ...

(நா.தி.பி., 23)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**மாமலை**

*இயற்கை சூழலையும் சிறந்த பின்னணியையும் கொண்டு மலைகள் விளங்குவதை சங்கப்பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. பெரிய மலையைக் குறிக்க "மாமலை" என்ற சொல் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப் பட்டுள்ளது. அச்சொல் திவ்யப் பிரபந்தத்திலும் பயன்படுத்தப்பட்டு உள்ளது.*

மாமலையணைந்த கொண்மூப் போலவும் ...

(ப.பாலை., 95)

*என்று கூறுவதை திவ்யப் பிரபந்தமும்,*

நீசரவர் சென்றடையாதவனுக்கு இடம் மாமலையாவது

நீர்மலையே ...

(நா.தி.பி., 1086)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**விசும்பு**

*விசும்பு என்ற சொல் ஆகாயம் என்ற பொருளில் சங்க இலக்கியத்தில் பரவலாக இடம்பெற்றுள்ளது.*

அகலிரு விசும்பினானும்

பகல் விளங்குதியாற் பல்கதிர் விரித்தே ...

(புறம்., 8)

*என்று சங்க இலக்கியம் குறிப்பதை நாலாயிர திவ்யப்பிரபந்தமும்,*

அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும் ...

(நா.தி.பி., 2510)

*என்றும் இடம்பெற்றுள்ளது.*

**சோலை**

*சோலை என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

பூமலி சோலை அப்பகல் கழிப்பி ...

(குறிஞ்சி., 214)

*என்ற சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

வண்டறை சோலை மங்கையர் தலைவன் மானவேற்கலியன்
வாபொலிகள் ...

(நா.தி.பி., 1347)

*என்று குறிப்பிடுகிறது.*

*மனிதனுக்கு அடிப்படைத் தேவை உணவாகும். அவ் உணவு தோற்றம் பெறுகின்ற கழனியை, வயலை சங்கப் புலவர்கள் குறிப்பிடத் தவறவில்லை. சங்க இலக்கியத்தில் கழனி என்ற சொல்லானது,*

வித்திய வெண்முளை கள்வனறுக்குங் கழனியூரன் ...

(ஐங்., 29)

*என்று குறிப்பிடுவதை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்*

புரவிமுகம் செய்து செந்நெலோங்கி
விளை கழனிப் புதுவை ...

(நா.தி.பி., 337)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**வயல்**

*வயல் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

அங்கண் அகல்வயல் ஆர்பெயர் கலித்த ...

(நெடு., 21)

*என்று குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,*

வடிவுடை அன்னம் பெடையொரும் சேரும் வயல்

வெள்ளியங்குடியதுவே ...

(நா.தி.பி., 1346)

என்று இடம்பெற்றுள்ளது.

### உணவுப் பொருள்

சங்க இலக்கியப் பாடல்களில் உணவுப் பொருள்கள் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. அச்சொற்கள் நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளது.

### அவல்

அவல் என்ற சொல்,

அவலெறிந்த வுலக்கை வாழைச் சேர்த்தி ...

(ப.ப., 1)

என்று கூறுகிறது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

காயுடை நெல்லொரு கரும்பமைத்துக்

கட்டியரிசி அவலமைத்து ...

(நா.தி.பி., 510)

என்று இடம்பெற்றுள்ளது.

### அமுதம்

அமுதம் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,

பணைத் தேந்திளமுலை அமுதம் ஊறச் ...

(மதுரைக்., 601)

என்று இடம் பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில்,

சீதை வாயமுத முண்டாய்! எங்கள் சிற்றில் சிதையேல் என்று ...

(நா.தி.பி., 91)

என்று இடம்பெற்றுள்ளது.

**பலாப்பழம்**

*பலாப் பழம் பற்றிய செய்தியானது,*

கார்கோட் பலவின் காய்த்துணர் கடுப்ப ...

(மலை., 12)

*என்று குறிப்பிடுகிறது. அதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,*

இணை நன்றழகிய இக்கடிப்பு இட்டால்

இனியப் பலாப்பழம் தந்து ...

(நா.தி.பி., 142)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**வாழை**

*வாழை என்ற சொல்,*

கோட்டெங்கிற் குலை வாழைக் ...

(ப.பாலை, 16)

*என்று குறிப்பிடுவதை நாலாயிர திவ்யப்பிரபந்தம்,*

குந்தி வாழையின் கொழுங்கனி நுகர்ந்து தன்குருளையைத்

தழுவிப்போய் ...

(நா.தி.பி., 1266)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**கரும்பு**

*கரும்பு என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

கழைகண் ணுடைக்குங் கரும்பினேத்தமும் ...

(மலை., 341)

*என்று குறிப்பிடுகிறது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின்,*

கரும்பார் நீள்வயல் காய்கதிர் செந்நெலைக்

(நா.தி.பி., 228)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**புளிங்காய்**

*புளிங்காய் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

புளிங்காய் வேட்கைத் தன்று நின் ...

(ஐங்., 51)

*என்று குறிப்பிடுவதை நாலாயிர திவ்யப் பிரபந்தமானது,*

எண்ணெய் புளிப்பழம் கொண்டு இங்கு எத்தனை போதும் இருந்தேன் ...

(நா.தி.பி., 152)

*என்று குறிப்பிட்டுள்ளது.*

**செந்நெல்**

*செந்நெல் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

வெண்பூக் கரும்பொடு செந்நெல் நீடி ...

(ப.பாலை., 240)

*என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

செந்நெலொடு செங்கமலம் சேல் கயல்கள் வாளை ...

(நா.தி.பி., 1249)

*என்று குறிப்பிடுகிறது.*

**நீர்வாழ்வன**

*நீரில் மட்டுமே வாழக்கூடியதும், நெய்தல் நிலமக்களின் உணவுப் பொருளுமாகிய மீனைப் பற்றிய செய்தி சங்க இலக்கியத்தில் பரவலாகக் காணப்படுகிறது. மீன் என்ற சொல் கோள் என்ற பொருளிலும் இடம் பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில்,*

வரும் வைகல் மீன் பிறழினும் ...

(ம.கா., 108)

*என்று குறிப்பிடுகிறது. இச்சொல் பொருளளவில் மாற்றம் பெற்றாலும் சொல்லளவில் மாற்றம் பெறாமல் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில்,*

மீன் நோக்கும் நீள்வயல் சூழ் வித்துவக் கோட்டம்மா

(நா.தி.பி.. 690)

*என்று இடம் பெற்றுள்ளது.*

**முதலை**

முதலை என்ற சொல் சங்க இலக்கியத்தில்,

முதலைப் போத்து முழுமீனாகும் ...

(குறுந்., 5)

என்று இடம்பெற்றுள்ளது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இச்சொல்,

செம்புலாலுண்டு வாழும் முதலை மேல் சீறிவந்தார் ...

(நா.தி.பி., 899)

என்று இடம்பெற்றுள்ளது.

**விலங்குகள் பற்றிய செய்தி**

சங்க இலக்கியத்தில் விலங்குகள் பற்றிய செய்தி பரவலாக இடம்பெற்றுள்ளது. அவற்றிலும் யானையைப் பற்றிய பாடல்களே அதிகமுக்கியத்துவம் பெற்றுள்ளது. அதுபோன்றே சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள விலங்குகளின் பெயர்களே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளது,

**கன்று**

கன்று என்ற சொல் சங்க இலக்கியத்தில்,

கன்றெறி யொள்ளி கடும்பொடு மலைந்து ...

(மலை., 159)

என்று கூறுவதை நாலாயிர திவ்ய பிரபந்தம்

கன்றுகளோடச் செவியில் கட்டெறும்பு பிடித்திட்டால் ...

(நா.தி.பு., 153)

என்று இடம்பெற்றுள்ளது.

**வேழம்**

யானையைக் குறிக்கும் வேழம் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,

வென்றெழு கொடியோடு வேழஞ் சென்று புகக் ...

(நெடு., 87)

இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

**வெருவிப் புனம் துறந்த வேழம் ...**

(நா.தி.பி., 2121)

*இடம்பெற்றுள்ளது.*

**களிறு**

**களிறு என்ற சொல் சங்க இலக்கியத்தில்,**

**களிறு கடைஇயதாம் ...**

(புறம்., 7)

*என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

**கருவாய்ச் சின வெங்கண் களிற்றினுக்குக் ...**

(நா.தி.பி., 267)

*என்று இடம்பெற்றுள்ளது. களிறு என்ற சொல் யானையைக் குறிக்க பயன்பட்டது. ஆனால் இச்சொல் இன்று வழக்கொழிந்த நிலையில் காணப்படுகிறது.*

**யானை**

**வினைநவின்ற பேர் யானை ...**

(மதுரைக்., 47)

*யானை என்ற சொல் சங்க இலக்கியத்தில் பரவலாக இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

**பொற்றையுற்ற முற்றல் யானை போரெதிர்ந்து வந்ததை ...**

(நா.தி.பி., 803)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**கேழல்**

*கேழல் என்றசொல் பன்றி என்ற பொருளில் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது.*

**விளைபுன நிழத்தலிற் கேழல் அஞ்சிப் ...**

(மலை., 193)

*என்று கூறுகிறது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

கெண்டையும் குறளும் புள்ளும் கேழலும் அரியும்மாவும் ...

(நா.தி.பி., 1293)

என்று இடம் பெற்றுள்ளது. அதுமட்டுமல்லாமல் திருமால் எடுத்த பத்து அவதாரங்களுள் கேழல் ஒரு அவதாரமாக (வராக அவதாரம்) அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கது.

**புரவி**

சங்க இலக்கியத்தில், புரவி என்ற சொல்,

வடிமணிப் புரவியொடு வயவர் வீழப் ...

(ப.பா., 2-31)

என்று குதிரை என்ற பொருளில் இடம்பெற்றுள்ளது. இச்சொல் இதேப் பொருளில் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

வெள்ளைப் புரவிக்குரக்குவெல் கொடித் தேர்மிசை முன்பு நின்று ...

(நா.தி.பி., 334)

என்று இடம்பெற்றுள்ளது.

**பறவை**

பறவைகளைப் பற்றிய செய்திகளும், சங்ககால மக்கள் வாழ்வில் அவைகள் பெற்றிருந்த இடமும் அகப்புறப்பாடல்களின் வாயிலாக நாம் அறிய முடிகிறது.

**வண்டு**

ஆண்வண்டிற்கு சுரும்பு என்ற பெயரும் உண்டு, சங்கப்பாடல்களில் உள்ளுறையாக இது இடம்பெறுகிறது. இதனை,

சுரும்பிமிர் காலம் படினம் பரவுதும் ...

(கலி., 106)

என்ற பாடல்வரி எடுத்துக்காட்டுகிறது. நாலாயிர திவ்யப் பிரபந்தம் வண்டு என்ற பெயரிலேயே,

வண்டுகளித்திரைக்கும் பொழில் சூழ்
வருபுனல் காவிரித் தென்னரங்கண் ...

(நா.தி.பி., 212)

என்று குறிப்பிட்டுள்ளது.

**மயில்**

*இலக்கியங்களிலே மயில் பெண்களுக்கு உவமைப் படுத்துவதன் காரணமாக நிரம்ப இடம் பெறுவதுண்டு. அவ்வகையில் மயில் என்ற சொல்*

**கலிமயில் அகவும் வயிர்மருள் இன்னிசை ...**

(நெடு., 99)

*என்பது சொல்லளவில் மட்டும்,*

**புனமயிலே? போதராய் ...**

(நா.தி.பி., 484)

*என்று உருவகமாக நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளது.*

**காக்கை**

*காக்கையைப் பற்றிய செய்தி சங்க இலக்கியத்தில்,*

**பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை ...**

(குறுந்., 313)

*என்று இடம் பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

**காயாமலர் வண்ணன் கண்ணன் கருங்குழல்**
**தூய்தாக வந்து குழல்வாராய் அக்காக்காய் ...**

(நா.தி.பி., 168)

*என்று குழல்வார வருமாறு அழைப்பதாக இடம்பெற்றுள்ளது.*

*சங்க இலக்கியத்தில் குருகு என்ற சொல்,*

**கருங்கால் வெண்குருகு மேயும் ...**

(குறுந்., 325)

*என்று இடம் பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

**கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே ...**

(நா.தி.பி., 677)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**கிளி**

*கிளி என்ற சொல்லானது சங்க இலக்கியத்தில்,*

மென்றோட் கொடிச்சியைப் பெறற்கரிது தில்ல
பைம்புறப் படுகிளி யோப்பலர் ...

(ஐங்., 260)

*என்று இடம் பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

பைங்கிளி வண்ணன் சிரிதரனென்பது ஓர் பாசத்து
அகப்பட்டிருந்தேன் ...

(நா.தி.பி., 553)

*என்று கிளியின் நிறம் திருமாலுக்கு ஒப்பிடப்படுவதாக அமைந்துள்ளது.*

**கோழி**

*கோழியை பற்றிய செய்திகளும், சொற்களில் சங்க இலக்கியத்தில்,*

கோழியெறிந்த கொடுங்காழ் கனங்குழை ...

(ப.பா., 23)

*என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

கோழியும் கூகின்றதில்லை கூரிருளாயிற்றே ...

(நா.தி.பி., 1967)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**வாரணம்**

*வாரணம் என்ற சொல் கோழி என்ற பொருளில் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளது. ஆனால் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் யானை என்ற பொருளில் சொல்மாற்றம் பெறாமல், பொருள் மாற்றம் பெற்று இடம்பெற்றுள்ளது.*

பொறிமயிர் வாரணம் வைகறை இயம்ப ...

(ம.கா., 673)

*என்பது திவ்யப் பிரபந்தத்தில்,*

வாரணமாயிரம் சூழ வலஞ் செய்து ...

(நா.தி.பி., 556)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**புறா**

*புறாவைப் பற்றி சங்க இலக்கியத்தில்,*

புலம்புதருகுரல புறவுப் பெடை பயிலும் ...

(குறுந்., 79)

*என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

திருமணி நீர் கொழிக்கும் புறவின் குறுங்குடிக்கே

என்னை உய்த்திருமின் ...

(நா.தி.பி., 1791)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**அன்றில்**

*அன்றில் பறவை பற்றிய செய்தி சங்க இலக்கியத்தில்,*

ஏங்குவயிர் இசைய கொடுவாய் அன்றில் ...

(நெ.டு., 219)

*என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

அன்றிலின் கூட்டைப் பிரிக்க நிற்பவர் ஆர் கொலோ

(நா.தி.பி., 1962)

*என்று இடம் பெற்றுள்ளது.*

**பெண்கள் தொடர்பான சொற்கள்**

*பெண்களின் பற்களைக் குறிப்பிடும்போது முல்லைப்போன்ற பற்கள் என்று குறிப்பிட்டனர் சங்கப்புலவர்கள் என்பதை,*

முளைவாள் எயிற்ற வள்ளுகிர் ஞமலீ ...

(குறி.பாட்., 131)

*என்று குறிப்பிட்டனர். இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

முளைவா யெயிற்று மடவார் பயிற்று

மொழி கேட்டிருந்து முதிராத இன்சொல் ...

(நா.தி.பி., 1225)

*என்று சொல்லளவில் மாற்றமின்றி இடம்பெற்றுள்ளது.*

**சுடர்நுதல்**

*சுடர்நுதல் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

மாசறு சுடர்நுதல் நீவி நீரு நினைந்து ...

(குறி.பாலை., 182)

*என்று குறிப்பிடுகிறது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

திண்பூஞ்சுடர்நுதி நேமி அஞ்செல்வர் ...

(நா.தி.பி., 2486)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**ஒண்ணுதல்**

*மகளிரின் ஒளிபொருந்திய நெற்றியை சங்க இலக்கியமானது,*

ஒண்ணுதல் பசப்ப தெவன் கொலன்னாய் ...

(ஐங்., 219)

*என்று குறிப்பிடுகிறது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

ஒண்ணுதல் மாமை யொளியவாமை விரைந்து நந்தேர் ...

(நா.தி.பி., 2527)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**மழைக்கண்**

*பெண்களின் அழுத கண்களை சங்க இலக்கியமானது,*

நன்மலர் மழைக் கணிற் கெளியவாற் பனியே ...

(குறுந்., 329)

*என்று குறிப்பிட்டுள்ளதைப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தமும்,*

வியர்க்கும் மழைக்கண் துளும்ப வெவ்வுயிர்க்

கொள்ளும் மெய் சோரும் ...

(நா.தி.பி., 3049)

*என்று குறிப்பிடுகிறது.*

**பெருந்தோள்**

*பெருந்தோள் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

இரவுத் தலைப் பெயரு மேம வைகறை

மைபடு பெருந்தோள் மழவரோட்டி ...

(ம.கா., 685)

*என்று கூறுவதை நாலாயிர திவ்யப் பிரபந்தமும்,*

பெருந்தோள் நெடுமாலைப் பேர்பாடியாட ...

(நா.தி.பி., 1973)

*என்று சொல் மாற்றம் பெறாமல் இடம்பெறுகிறது.*

**பணைத்தோள்**

*பெண்களின் பசுமையான தோள்களை சங்க இலக்கியம்,*

வார்ந்த வாயர் வணங்கிறைப் பணைத்தோட் ...

(ம.கா., 414)

*என்று குறிப்பிடுகிறது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

பின்னின்று தாயிரப்பக் கேளான் பெரும்பணைத் தோள் ...

(நா.தி.பி., 2260)

*என்று குறிப்பிடப்பட்டுள்ளது.*

**மகளிர்**

*மகளிர் என்ற சொல் சங்க இலக்கியத்தில் பரவலாக இடம் பெற்றுள்ளது.*

தூங்கியல் மகளிர் வீங்கு முலை கருப்பப் ...

(நெ.ந., 120)

*என்று குறிப்பிட்டதை நாலாயிர திவ்யப் பிரபந்தமும்,*

புனமோ? புனத்தயலே வழிபோகும் அருவினையேன்
மனமோ? மகளிர்? நுங்காவல் சொல்லீர் ...

(நா.தி.பி., 2500)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**மடந்தை**

*மடந்தை என்ற சொல்,*

மொண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே ...

(ஐங்., 92)

*என்று குறிப்பிட்டதை நாலாயிர திவ்யப் பிரபந்தம்.*

மக்கள் பெறுதவம் போலும் வையத்து வாழும்மடவார் ...

(நா.தி.பி., 1881)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**மெல்லியல்**

மெல்லியல் என்ற சொல் பெண்களைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது.

மெல்லியல் மகளிர் நல்லடி வருட
நரைவிரா வுற்ற நறுமென் கூந்தல் ...

(நெ.ந., 151-152)

என்று குறிப்பிட்டதை நாலாயிர திவ்யப் பிரபந்தமானது,

மின்பற்றா நுண்மருங்குல் மெல்லியலென் மருகியையும்
வனத்திற் போக்கி ...

(நா.தி.பி., 737)

என்று எடுத்துக்காட்டுகிறது.

**மங்கையர்**

சங்க இலக்கியத்தில் மங்கையர் என்ற சொல்,

இலங்குவளை மடமங்கையர் ...

(மதுரைக்.159)

என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

மங்கை மார் சாலகவாசம் பற்றி ...

(நா.தி.பி., 254)

என்று இடம்பெற்றுள்ளது.

**பெண்டிர்**

பெண்டிர் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,

ஆந்தைப் பெண்டிர் இணைந்தனர் ...

(மதுரைக்., 166)

என்று இடம்பெற்றுள்ளது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இச்சொல்லானது,

பெண்டிர் வாழ்வார் நின்னொப்பாரைப் பெறுமென்று மாசையாலே ...

(நா.தி.பி., 134)

என்று இடம்பெற்றுள்ளது.

**ஆயம்**

*ஆயம் என்ற சொல் சங்க இலக்கியத்தில் தோழிகள் குழு என்ற பொருளில் இடம்பெற்றுள்ளது.*

**ஊர்சுடு விளக்கிற் றந்த ஆயமும் ...**

(மதுரைக்., 692)

*என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

**நீலநல் நறுங்குஞ்சி நேத்திரத் தாலணிந்து**
**பல்லாயர் குழும் நடுவே ...**

(நா.தி.பி., 260)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**வளையணிந்த முன்கை**

*பெண்கள் தங்கள் கையில் வளையல் அணிந்தவர்கள் என்பதைக் குறிப்பிடும் போது சொல் ஒற்றுமைக் காணப்படுகிறது.*

**வளையணி முன்கை வாலெயிற்றமர் நகை ...**

(ஐங்., 198)

*என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இச்சொல் நாலாயிரதிவ்யப் பிரபந்தத்தில்,*

**முன்றிலெழுந்த முருங்கையில் தேனாமுன் கைவளை**
**கவர்ந்தாயே ...**

(நா.தி.பி., 1933)

*என்று இடம் பெற்றுள்ளது.*

**தடக்கை**

*தடக்கை என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

**இரும்பிணர்த் தடக்கை இருநிலஞ் சேர்த்தம் ...**

(குறி. பாட்., 163)

*குறிப்பிடுகிறது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

**சார்ங்கம் வளைய வலிக்கும் தடக்கைச் சதுரன்**
**பொருத்தமுடையன்...**

(நா.தி.பி., 552)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**அங்கை**

*அங்கை என்ற சொல்,*

கோடற் குவிமுகை யங்கை யவிழத் ...

(முல்லை., 95)

*என்று குறிப்பிடுவதை,*

நெருக்கிய கைகளால் சப்பாணி நேமியங்கையனே ...

(நா.தி.பி., 82)

*என்று குறிப்பிடப்பட்டுள்ளது.*

**பொதுவான சொற்கள்**

*சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள சில பொதுவான சொற்கள் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் எவ்வித மாற்றமும் இன்றி இடம்பெற்றுள்ளன.*

**ஆரம்**

*ஆரம் என்ற சொல்,*

ஆரந் தாங்கிய அலர்முலை யாகத்து ...

(நெ.ந., 136)

*இடம் பெற்றுள்ளது. ஆரம் என்ற சொல் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் சிறுவர்கள் அணிந்திருக்கும் ஒரு அணியாக,*

அழகிய ஐம்படையும் ஆரமும் கொண்டு ...

(நா.தி.பி., 48)

*என்று குறிப்பிடப்பட்டுள்ளது.*

**கண்ணி**

*கண்ணி என்ற சொல்,*

தேம்பாய் கண்ணி நல்வலந் திருத்தி ...

(முல்லை., 71)

*என்று குறிப்பிட்டதை நாலாயிர திவ்யப் பிரபந்தமானது,*

ஏராந்த கண்ணி யசோதை யிளஞ்சிங்கம் ...

(நா.தி.பி., 474)

*என்று எடுத்துக்காட்டப்படுகிறது. கண்ணி என்ற சொல் மாலை என்றும் அழகிய கண்ணை உடையவள் என்ற பொருளிலும் இடம் பெற்றுள்ளது. ஆனால் இங்கு சொல்லளவில் மட்டும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.*

**கதிர்**

*சங்க இலக்கியத்தில் பல்கதிர் என்ற சொல் சூரியனுடைய கதிர் என்ற பொருளில் இடம்பெற்றுள்ளது.*

**பகலிற் தோன்றும் பல்கதிர்த் தீயினம் பல ...**

(ஐங்., 57)

*கதிர் என்ற இச்சொல்,*

**கழல் மன்னர் சூழக் கதிர்போல விளங்கி ...**

(நா.தி.பி., 101)

*என்று இடம் பெற்றுள்ளது.*

**சிலம்பு**

*சிலம்பு என்ற சொல் சத்தம் என்ற பொருளில் சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டதைப் போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. சிலம்பு என்ற சொல்,*

**உண்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே**
**சிலம்பிற் சிலம்புஞ் சோலை ...**

(ஐங்., 360)

*என்று இடம்பெற்றுள்ளதைப் போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தமும்,*

**புள்ளும் சிலம்பினகான் போதரிக் கண்ணினாய் ...**

(நா.தி.பி., 486)

*என்று குறிப்பிடுகிறது.*

**துகில்**

*துகில் என்ற சொல் ஆடை என்ற பொருளில் குறிஞ்சிப் பாட்டிலும், அகநானூற்றிலும் இடம் பெற்றுள்ளது. அதே பொருளில் தான் திவ்யப் பிரபந்தத்திலும் குறிப்பிடப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில்,*

அவிர் துகில் புரையும் அவ்வெள்ளருவித் ...

(குறிஞ்சி., 55)

என்று குறிப்பிட்டதை திவ்யப் பிரபந்தமும்,

அரிமலர்க்கண் நீர் ததும்ப அந்துகிலும் நில்லாவே ...

(நா.தி.பி., 1701)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**பச்சை**

பச்சை என்ற சொல் சங்க இலக்கியத்தில்,

உள்ளகம் புரையும் ஊட்டுறு பச்சை ...

(பெரும்., 6)

குறிப்பிடப்பட்டுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்

பச்சை மாமலை போல் மேனி ...

(நா.தி.பி., 873)

என்று திருமாலின் மேனி நிறத்தைக் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது.

**பள்ளி**

பள்ளி என்ற சொல் பெல்வேறு பொருள்களில் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது. ஆனால் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சொல்லளவில் மட்டும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில்,

ஒருகை பள்ளி யொற்றி யொருகை ...

((முல்லை., 75)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

அணியரங்கத் தரவணையில் பள்ளிகொள்ளும் ...

(நா.தி.பி., 649)

என்றும் இடம்பெற்றுள்ளது.

**பாவை**

பாவை என்ற சொல் சங்க இலக்கியத்தில் பரவலாகக் காணப்படுகிறது. பாவை என்பது கன்னிப் பெண்கள் இருக்கும் நோன்பையும் குறிக்கிறது. ஆனால் இங்கு சொல் அளவில் மட்டும் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

யவனர் இயற்றிய வினை மாண் பாவை ...

(நெ.ந.101)

*என்று சங்க இலக்கியம் குறிப்பிடுவதை நாலாயிர திவ்யப் பிரபந்தமும்,*

தம்மைச் சரணென்ற தம்பாவை யரைப் ...

(நா.தி.பி., 266)

*என்று குறிப்பிடப்பட்டுள்ளது.*

**பிறை**

*பிறை என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

இன்னம் பிறந்தன்று பிறையே அன்னோ ...

(குறுந்., 307)

*என்று குறிப்பிடுகிறது. இச்சொல் திவ்யப் பிரபந்தத்தில்,*

பிறையேறு சடையானும் பிரமனும் இந்திரனும் ...

(நா.தி.பி., 684)

*என்று பிறை சிவபெருமானின் தலையில் இருக்கின்றதாக குறிப்பிடப்பட்டுள்ளது.*

**மருதம்**

*திருமால் தன்னுடைய கண்ணன் அவதாரத்தில் மருதமரமேறி உதைத்த செய்தி சங்க இலக்கியங்களில் சில இடங்களில் காணப்படுகிறது. மருதம் என்ற சொல் மருதமரம் என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது. சங்க இலக்கியத்தில் இச்சொல்,*

கள்ளச் சகடும் மருதும் கலக்கழிய உதைசெய்த ...

(நா.தி.பி., 198)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**மஞ்சள்**

*மஞ்சள் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

காய்க் கமுகிற் கமழ் மஞ்சள் ...

(ப.பாலை., 17)

*என்று இடம் பெற்றுள்ளது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

பைய வாட்டிப் பசுஞ்சிறு மஞ்சளால் ...

(நா.தி.பி., 18)

என்று இடம்பெற்றுள்ளது.

**முத்தீ**

*வேள்வித்தீ பற்றிய செய்தி சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது. முத்தீ என்பது ஆகவனியம், காருகபத்தியம் தென் றிசையங்கி என்று புறநானூ எடுத்துக்காட்டுகிறது. திருமுருகாற்றுப்படை, பதிற்றுப்பத்து ஆகியவற்றிலும் முத்தீ பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. தீயானது அன்று முதல் இன்று வரை வழிபடப்பட்டு வருகிறது. முத்தீ என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

உருகெழு மரபிற் கடவுட் பேணியர்
கொண்ட தீயின் அடரெழு தோறும் ...

(ப.பத்., 5-6)

*என்று குறிப்பிட்டதை நாலாயிர திவ்யபிரபந்தமும்,*

ஒன்று இரண்டு தீயும் ஆகிய ஆயன் ஆய மாயனே ...

(நா.தி.பி., 758)

*என்று இடம் பெற்றுள்ளது.*

**யாக்கை**

*யாக்கை என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

புல்லென் யாக்கைப் புலவுவாய்ப் பாண ...

(பெரும்., 23)

*என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிரத்திவ்யப் பிரபந்தத்தில்,*

அந்நாள் நீதந்த ஆக்கையின் வழி உழல்வேன் ...

(நா.தி.பி., 2908)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**வலம்புரி**

*வலம்புரி என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

வலம்புரி வளையொடு கடிகை நூல் யாத்து ...

(நெ.ந., 142)

*என்று இடம் பெற்றுள்ளது போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

வாய்தீர்த்தம் பாய்ந்தாட வல்லாய் வலம்புரியே ...

(நா.தி.பி., 572)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**வதுவை**

*வதுவை என்ற சொல் திருமணம் என்ற பொருளில்,*

நல்லோர் நல்லோர் நாடி

வதுவை யயர விரும்புதி நீயே ...

(ஐங்., 62)

*என்று இடம்பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

நாளை வதுவை மணமென்று நாளிட்டு ...

(நா.தி.பி., 557)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**வையகம்**

*வையகம் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

வையகம் பனிப்ப வலனேர்பு கவளைஇப் ...

(நெ.ந., 1)

*என்று இடம் பெற்றுள்ளது. இச்சொல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

வாயுள் வையகம் கண்ட மடநல்லார் ...

(நா.தி.பி., 19)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**வேதம்**

*வேதம் என்ற சொல் சங்க இலக்கியத்தில்,*

கோதலந்தணர் வேதம் பாடச் ...

(மதுரைக்., 656)

*என்று இடம்பெற்றுள்ளதைப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தமும்,*

வேதப்பொருளே! என் வேங்கடவா ...

(நா.தி.பி., 207)

*என்று இச்சொல்லை எடுத்துக்காட்டுகிறது.*

இவ்வாறு சங்க இலக்கியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள யாப்பு, அமைப்பு முறை, தொடர், சொல் அகியவை நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் தொடர்ந்து செல்வாக்குப் பெற்றுவந்துள்ளது என்பதை இக்கட்டுரை எடுத்துக்காட்டுவதோடு சங்க இலக்கியப் புலவர்களைப் போன்றே, ஆழ்வார்கள் பக்தியை அடிப்படையாக கொண்டு பாடிய போதிலும் அவர்களது இயற்கையை வெளிப்படுத்தும் முறை பாசுரங்களின் வாயிலாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது.

## அடிக்குறிப்புகள்

1. மா.வரதராஜன், "திருவாய்மொழியில் யாப்பமைதி", தமிழ்ப்பொழில், ப.381.
2. சரளா இராஜகோபாலன், இலக்கியச் சிந்தனைகள், ப.90.
3. மேலது., ப.98.
4. மேலது., ப.15.

# 3.0. திணைச் செல்வாக்கு

சங்க இலக்கியங்களைப் போலவே நாலாயிர திவ்யப்பிரபந்தத்திலும் திணை ஒழுங்குமுறைகள் பேசப்பட்டுள்ளன. சங்ககால மக்கள் வாழ்வில் அகத்திணை, புறத்திணை இடம் பெற்றுள்ளது, போன்றே பக்தி இலக்கியமான நாலாயிர திவ்யப்பிரபந்தத்திலும் இடம் பெற்றுள்ளது. அதுமட்டுமல்லாமல் அன்பின் ஐந்திணைகளாகக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவையும் இடம் பெற்றுள்ளன. தலைவன், தலைவியின் வாழ்க்கை முறையும் களவு, கற்பு பற்றிய ஒழுங்கு முறைகளும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

**அகத்திணை**

தலைவன் தலைவியரிடையே இருக்கின்ற களவு வாழ்க்கையும், பிறரிடம் கூறமுடியாத செய்திகளும் அகம் எனப்படும். அகத்தை,

**தானே அறிதலின் அகம் என்றார்**

என்று இளம்பூரணரும் குறிப்பிடுகிறார். சங்க இலக்கிய அகப்பாடல்களில் பெற்றுள்ளது போலவே நலம்பாராட்டல், அலர்தூற்றல், மடல்ஏறல் பிரிவாற்றாமை (இதில் தலைவன் பொருள் தேடச் செல்லுதலும், வேந்தற்குற்றுழி பிரிவும் இடம் பெற்றுள்ளன) அறத்தொடு நிற்றல், திருமணமுறை, காமனை வழிபடல், பசலை நோய், வளை நெகிழ்தல், மாலைக்கால வருத்தம், வாடைக்காற்று வருத்தம், தலைவன் வரும்போது தலைவியின் அழகு வருதல், இரவு தூங்காமை, சிற்றில் சிதைத்தல், உடன்போக்கு, பரத்தையருக்காக ஊடல், வெறிவிலக்கு, தலைவனே மருந்து, ஆகியவையும் கூற்றுமுறைகளாக தலைவன், தலைவி, தோழி, செவிலி, கூற்றும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளன. ஒரு துறையை உருவாக்கச் சில இன்றியமையாத அழகுகள் பொருந்துகின்றன. அகப்பாடல் அகமாந்தரின் கூற்றாக வெளியிடப்படுகின்றது. எனவே அகப்பாட்டை உணர்ந்துகொள்ள பாட்டு (கூற்று) யார் (கூறுவோன்) யாருக்கு (கேட்போன்) எச்சூழலில் (களன்) என்ன பயன் கருதி (உட்கோள்) எதனை (செய்தி)

உரைக்கின்றது. என்பதைக் குறித்த தெளிவுதேவை"[1] என்று அகமரபை எடுத்துக் காட்டுகிறார்.

சங்க இலக்கியத்தில் தலைவன், தலைவி, தோழி, செவிலி என்று பொதுப்படையாகக் கூறப்படுகிறது. ஆனால் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் ஆழ்வார்கள் ஒவ்வொருவரும் தன்னைத் தலைவியாகவும் திருமாலை தலைவனாகவும் கொண்டு "நாயக நாயகி பாவம்" என்ற முறையில் பாடப்பட்டுள்ளது.

**நாயக நாயகி பாவம்**

சங்க இலக்கிய பாடல்களில் பெரும்பான்மையான பாடல்களைப் பாடியவர்கள் ஆண்களாக இருப்பினும் அவர்கள் பிரிவை பாடும்போது தலைவியாகவே தன்னை நினைத்துப் பாடுகிறார்கள். அதுபோலவே ஆழ்வார்களும் தன்னைத் தலைவியாகவும் திருமாலைத் தலைவனாகவும் பாவித்துப் பாடியது நாயக நாயகி பாவம் எனப்படுகிறது. இதனை காதலால் இறைவனை அடையத் துடிக்கும் ஆன்மா தன்னைப் பெண்ணாக பாவித்து அன்பு செலுத்துகின்றது. இதனையே நாயகன்-நாயகி மனோபாவமாக வைணவத் தத்துவம் கூறுகின்றது. முற்காலத்தில் அக இலக்கியங்களில் போற்றப்பெறும் காதல், ஆண், பெண் உடல் பற்றியதும் உயிர் பற்றியதும் ஆகும். ஆனால் சமய இலக்கியங்களில் காணப்பெறும் உறவோ முழுக்க முழுக்க உயிர்பற்றியதே ஆகும். இறைவனைக் கூடுவதிலுள்ள உயிர்த் துடிப்பினையே இவர்கள் பாடல்களில் காணலாம்"[2] என்று குறிப்பிடுகிறார். நாயகன் நாயகி பாவம் சங்ககால அகப்பொருள் மரபிலிருந்து சில அம்சங்களில் வேறுபடுகிறது. சங்ககால அகப்பொருள். மரபிலே தலைவன் பெயர் சுட்டப்படாது. ஆனால் இப்பாடல்கள் யாவும் சிவபெருமான் அல்லது திருமால் பெயரைச்சுட்டி இறைவன் பெருமை பேசுபவனாக அமைந்துள்ளன. அவ்வாறு அமையாவிட்டால் இப்பாடல்கள் பக்திப்பாடல்கள் என்ற தகுதியை இழந்துவிடும் எனலாம். சங்ககால அகத்திணைச் செய்யுட்களிலே தலைவன் கூற்றுக்களாக அமைந்த பாடல்கள் பல உள்ளன. தலைவன் பிரிவாற்றாமை பற்றியும் செய்யுட்கள் உள்ளன. "பல்லவர்காலபக்திப் பாடல்களில் இத்தகைய

செய்யுள்கள் இல்லை. இறைவன் நாயகனாகவும் ஆன்மா நாயகியாகவும் பாவனை செய்யப்படுவதால் நாயகியாகப் பாவனை செய்யும் அடியார் தலைவி கூற்றாகவும், தோழி, செவிலி முதலியோர் கூற்றாகவும் அமைந்துள்ள பாடல்களே காணப்படுகின்றன. இங்கு சங்ககால இலக்கிய மரபு தமிழ்ப் புலவர்க்குத் துணை வருகிறது"[3] என்று எடுத்துக் காட்டுகிறார். இவ்வாறு நாயக நாயகி பாவம் என்ற சங்க இலக்கியக்கூறு பக்தி இலக்கியமான நாலாயிர திவ்யப்பிரபந்தத்துட் சிறந்ததொரு வளர்ச்சி நிலையை அடைந்துள்ளது.

**நலம் பாராட்டல்**

தலைவியின் அழகை தலைவன் பாராட்டுவது நலம்பாராட்டல் எனப்படும். சங்க இலக்கியத்தில் நலம்பாராட்டல் இடம் பெற்றுள்ளது போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இடம் பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில்,

சுணங்குஞ் சில தோன்றினவே யணங்குதற்
கியான்ற னறிவல தானறியலளே
யாங்கா குவள் கொறானே
பெருமுது செல்வரோடு மடமகளே

(குறுந்., 337)

என்று பாராட்டப்படுகிறது. நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில்,

ஈர்வனவேலும் அஞ்சேலும் உயிர்மேல் மிளிர்ந்தவையே
பேர்வனவே வல்ல தெய்வ நல்வேள் நனைபேரொளியே
சேர்வன நீலச்சுடர் விருமேனியம்மான் விசும்பூர்
தேர்வன தெய்வ மன்னீர கண்ணோ? இச் செழுங்கயலே

(நா.தி.பி., 2491)

என்று பாடுவதாக இடம் பெற்றுள்ளது.

**காமனை வழிபடல்** ✓

சங்ககால பெண்கள் தாம் விரும்புகின்ற ஆண்மகனையே கணவனாக அடையவேண்டும் என்பதற்காகவும், தலைவனைப் பிரிந்த தலைவி காமதேவனை வழிபட்டால் மீண்டும் தலைவனுடன் சேர்ந்து வாழமுடியும் என்ற நம்பிக்கையில் காமதேவனை வழிபட்டு வந்தனர். அவ்வழிபாட்டை

பெரும்பாலும் இளவேனிற் காலத்தில் பெண்கள் நோன்பிருந்து செய்து வந்தனர். கன்னிப் பெண்கள் தைந்நீராடி நோன்பிருந்த செய்தியை,

"கன்னிமகளிர் ஐம்புலன்களை அடக்கித் தவத்தை பன்முறை இயற்றியதால், தம் தாய்மார்க்கருகே நின்று தைந்நீராடலாகிய தவத்தை எய்தினர்" என்று குறிப்பிடுகிறார்.[4] காமதேவனைப் பெண்கள் வழிபட்டனர் என்பது முல்லைக்கலியிலும் குறிப்பிடப் பெற்றுள்ளது.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் காமதேவனை ஆண்டாள் தன்னைத் திருமாலுடன் சேர்க்கும்படி கூறி வழிப்பட்டாள். இதனை நாச்சியார் திருமொழி,

தையொரு திங்களும் தரை விளக்கித்
தண்மண்டலமிட்டு மாசிமுன்னாள்
ஐய நுண்மணற் கொண்டு தெருவணிந்து
அழகினுக் கலங்கரித்த அணங்கதேவா ...

(நா.தி.பி., 504)

என்று எடுத்துக்காட்டுகிறது. மார்கழி நோன்பிருந்த பின்னரும் கண்ணனை அடைய முடியாமல் ஆண்டாள் பிறருதவி கொண்டு அவனை அடைய உறுதிகொண்டாள். உலகில் பிரிந்தாரைப் புணர்விக்கும் தலைமையுடையவன் மன்மதன் ஒருவனே அவனைத் தொழுது கண்ணனைத் தம்மொடு சேர்ப்பிக்குமாறு வேண்டுவது என முடிவு செய்தாள் ஆண்டாள். கற்புடைய பெண்டிர் பிறதெய்வம் தொழுவதில்லை, என்பது ஆன்றோர் வாக்காயினும் திருமணமாகாத பெண்கள் கற்புக்கடம் பூண்டவர்கள் அல்லர். ஆதலின் தங்களுக்கு நல்லதோர் கணவன் வாய்க்கப்பெற வேண்டுமென்று விரும்பினால் பிறைதொழுவது பண்டைய தமிழ் வழக்கம்."[5] மேற்கண்ட பாசுரத்தால் பண்டைக் காலத்தில் கன்னிப் பெண்கள் மார்கழி நோன்பிருப்பதனோடு மன்மதனுக்குரிய பருவமாகிய இளவேனிற் காலத்து வீதி பெருக்கிக் கோலமிட்டு அலங்கரித்து மணலால் சிற்றில் ஒன்றமைத்து அதில் மன்மதனுடைய மீன் கொடியை நட்டு தோரணங்கள் கட்டி அதிகாலையில் நீராடி வழிபட்டனர் என்பது புலனாகிறது. நுண்மணல் அலங்காரமானது இன்றளவும் இருந்து வருகின்றது.

## பாவை நோன்பு ✓

மார்கழி அல்லது தை மாதத்தில் அதிகாலைப் பொழுதில் பெண்கள் கூட்டமாகச் சென்று நீராடி அங்கிருக்கின்ற நுண்மணலால் பாவையுருவம் செய்து வழிபட்டனர். கன்னிப் பெண்கள் தங்களுக்கு நல்ல கணவன் அமைய வேண்டும் என்பதற்காக இந்த நோன்பை நோற்றனர். நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பாவை நோன்பு குறிப்பிடப்பட்டிருப்பினும் சங்ககால பாவை நோன்பிற்கும் பக்தி இலக்கியமான நாலாயிர திவ்யப் பிரபந்தம் குறிப்பிடும் பாவை நோன்பிற்கும் வேறுபாடு காணப்படுகிறது.

சங்க இலக்கியத்தில் பெண்கள் பாவை உருச் செய்து வழிபட்டனர். பாவை உருவமானது, ''மண் மரம் முதலியவற்றால் செய்த பாவையுருக்களில் பலவகை வண்ணங்களைப் பூசிச் சித்திர வேலைப்பாடுகள் தோன்ற அமைக்கும்போது அவை சித்திரப்பாவை எனப் பெயர் பெறும்''[6] என்று பாவையின் வகையைக் குறிப்பிடுகிறார். சங்க காலப் பெண்கள் பாவையை வழிபட்டு காத்தியாயினி என்ற பெண் தெய்வத்திற்கு நோன்பிருந்தனர். ஆனால் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் ஆண்டாளோ நேரடியாக கண்ணனையே நோன்பிருந்து வழிபட்டாள். மற்றுமொரு வேறுபாடு சங்க இலக்கியப் பெண்கள் தமக்கு நல்ல கணவன் வேண்டும் என்பதற்கு நோன்பு நோற்றனர். ஆனால் ஆண்டாள் கண்ணனை நப்பின்னையோடு சேர்த்து பாடியிருக்கிறார். சில வேறுபாடுகள் இருப்பினும் பாவை நோன்பின் அடிப்படை சங்க இலக்கியத்திலிருந்தே எடுக்கப்பட்டது என்பதை உணர முடிகிறது.

பாவை நோன்பை சங்க இலக்கியம்,

வாலிழை மடமங்கையர் வரிமணல் புனைபாவைக்குக்
குலவுச் சினைப் பூசிகொய்து தண்பொருநைப் புனல் பாயும் ...

(புறம்., 11)

என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம்

புள்ளின் வாய்கீண் டானைப் பொல்லா அரக்கனை
கிள்ளிக்களைந் தானைக் கீர்த்திமை யாடிப்போய்
பிள்ளை களெல்லாரும் பாவைக்களம் புக்கார் ...

(நா.தி.பி., 486)

என்ற பாடலின் எடுத்துக் காட்டுகிறது. பரிபாடல் இன்னும் சற்று தைந்நீராடலை அதிகமாக விளக்கிக் கூறுவதோடு பாவை நோன்பிருக்க வேண்டும் என்றால் அவர்கள் முற்பிறப்பில் தவம் செய்திருக்க வேண்டும் என்று எடுத்துக் காட்டுகிறது. "ஆண்டாளுக்குப் பாவை நோன்பென்பது வெறும் பெயரளவேதான். பாவை நோன்பின் பெயரால் அவள் முற்ற முழுக்கக் கண்ணனையே வழிபடுகிறாள். ஆண்டாளின் குறிக்கோள் கண்ணன் ஒருவனே. அந்தக் குறிக்கோளை அடைவதற்கு அவள் உபாயமாகக் கொண்டதும் கண்ணனையேயாம். இங்ஙனம் ஆண்டாளுக்குக் கண்ணனே உபாயமும் உபமேயமுமாக அமைந்து விட்டமையில் திருப்பாவை காத்தியாயினி வழிபாடாகவன்றிக் கண்ணன் துதியாக மாறிவிடுகிற புதுமையை நாம் காண்கிறோம்"[7] காத்தியாயினியைப் பற்றிய குறிப்பு நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் காணப்படவில்லை.

**பறவைகள் மகிழ்ந்திருத்தல்** ✓

அன்றில் பறவைகள் இணைந்து மகிழ்ச்சியுடன் இருக்கின்ற காட்சியானது தலைவனைப் பிரிந்த தலைவியின் மனத்தை துயருருத்துகிறது. இச்செய்தியை நாலாயிர திவ்யப்பிரபந்தம்,

விளரிக் குரலன்றில் மென் படைமேகின்ற முன்றில் பெண்ணை
முளரிக் குரம்பை இதுவிதுவாக முகில்வண்ணன் பேர்
கிளரிக்கிளரிப் பிதற்றும் மெல்லாவியும் நைவு மெல்லாம்
தளரிற் கொலோ? அறியேன் உய்யலாவது இத்தையலுக்கே
(நா.தி.பி., 2560)

என்று அன்றிலைப் பார்த்து புலம்புவதாகப் பாடப்பட்டுள்ளது.

**வளைகழல்தல்** ✓

பெண்கள் தங்கள் கைகளில் வளையணிதல் தொன்று தொட்டு வருகிற மரபாகும். சங்க இலக்கியத்தில் மகளிர் வளையல் அணிந்து இருத்தலையும் தலைவன் பிரிவினால் ஏற்பட்ட உடல் மெலிவால் அவ்வளையல்கள் நெகிழ்ந்த செய்தியும் குறிப்பிடப் பட்டுள்ளன. நாலாயிர திவ்யப்பிரபந்தமும் இச்செய்திகளை எடுத்துரைக்கின்றது. வளைகழல்தலை சங்க இலக்கியம்,

கோணே ரிலங்குவளை நெகிழ்த்த ...

(ஐங்., 136)

என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில்,

தாராய தண்துளவ வண்டு உழுதவரைமார்பன்
போரானைக் கொம்பு ஒசித்த புட்பாகன் என்னம்மான்
தேராரும் நெருவீதித் திருவாலி நகராளும்
காராயன் என்னுடைய கனவளையும் கவர்வானோ!

(நா.தி.பி., 1203)

என்று எடுத்துக் காட்டுகிறது. வளைகழல்தலைப் பற்றிக் குறிப்பிடும்போது “அவன் மறைந்தான் என் வளையையும் காணோம். என்றும் அவன் என் வளையைத் திருடிக் கொண்டு போய்விட்டான் என்றும், அவனுக்கு நான் வளைதோற்றேன் என்றும் சொல்லுவார்கள். இப்படிச் சொன்னாலே போதும், அந்த ஆசாமியிடத்தில் இந்தப் பெண்ணுக்குக் காதல் உண்டாகி விட்டது என்று மற்றவர்கள் அறிந்து கொள்ளுவார்கள். காதலை மறைபொருளில் நாசுக்காக வெளியிடுவதற்கும் இந்த வளை பெரிதும் உதவியிருக்கிறது. ஆண்டாளும் ரங்கநாதர் தம்கையில் சங்கமே போலாவோ? என்று கூறியிருப்பதை எடுத்துக் காட்டுகிறார்.[8] மேலும் வளைகழல்வதை தேனுடன் கூடிய மலரோடு தன்மையுங் கொண்ட நீர்நிலை சூழ்ந்த குறிஞ்சி நிலங்களைக் கொண்ட அல்லது காடுகளைக் கொண்ட திருக்குறுங்குடிக்கே என்னைக் கொண்டு சென்று விடுங்கள் என்று பெரியதிருமொழி (9-5-7) பாசுரத்திற்கு விளக்கம் கூறுகையில், தலைவனைப் பிரிதலைக் கூறும்முறை சங்கப் பாக்களைப் போலவே பின்பற்றப் பட்டதோடு அச்சம், நாணம், மடம் என்பவற்றோடு வளைகளும் கழன்றன. அவைகளே கழன்றால் வளைகள் கழல்வதைச் சொல்ல வேண்டுமோ? என்று ரங்கநாதபாதுகா குறிப்பிடுகிறது. இவ்வாறு சங்க இலக்கியம் போலவே நாலாயிர திவ்யப் பிரபந்தமும் வளைகழல்வதை சித்திரிக்கின்றது.

**மடல் ஏறல்**

சங்க இலக்கியப் பாடல்களில் மிக முக்கியமானக்கூறு மடலேறல் ஆகும். இது மடலேறல் என்றும் மடலூர்தல் என்றும் இருவகைப்படுகிறது. “தலைவியால் காதல் மறுக்கப்பட்டதலைவன் பனைக்கறுக்குக் குதிரையின்

மீதேறி தலைவியின் உருவத்தை வரைந்துக் கொண்டு, தலைவி இருக்கின்ற தெருவினைச்சுற்றி ஊர்வலம் வருதல் மடல் ஏறுதல் எனப்படும். மடலூர்தல் ஒரு தற்கொலை முயற்சியாகவே நூல்களில் மிக நுணுக்கமாகச் சுட்டப்பட்டுள்ளது. மடலூர்ந்தும் காதலியைப் பெறாத நிலையில் அது தற்கொலையாகவே முடியும். அது தான் மலைமேலிருந்து கீழே விழுதல், இதனை வரையாய்தல் என்பர். காதல் நிறைவேறாதபோது நஞ்சு குடித்துச் சாவதும் வேறுவகை சாவைத் தேடிக் கொள்வதும் உலகியலில் எக்காலத்தும் நடைபெறுவன. இத்தகு காதலர்க்குப் பழைய தமிழ் அகப்பொருள் நூல்களில் இடம் அளிக்கப்படவில்லை. இவர்களைத் தலைமக்களாக ஏற்காத தமிழ் இலக்கியங்கள் இவர்களின் தற்கொலை முயற்சிகளை ஆங்காங்கே சுட்டிச் செல்கின்றன"[9] என்று மடலூர்தலைக் குறிப்பிடுகிறார்.

"தமிழ் இலக்கணத்தில் மடலூர்தல் பெண்களுக்கில்லை என்று பேசப்படுகின்றது. தலைவனாகிய பரம்பொருளை அடைய தலைவியாகிய பரகால நாயகி மடலூரத் தலைப்படுகின்றார். இவ்வாறு மடலூர்தல் தமிழ் நெறிப்படி சரியில்லையாதலால் வடபுல நெறியைப் பின்பற்றி நான் மடலூர்கின்றேன் என்று பாடினார். இதனால் பற்ற வேண்டிய தெய்வம் கண்ணபிரானே. ஆதலால் இந்தவழி முறையைக் கைக்கொண்டார் பரகால நாயகியாகிய திருமங்கையாழ்வார்[10] என்று திருமங்கையாழ்வார் மடலூர்ந்ததை எடுத்துக் கூறுகிறார். "தலைவன் மடலேறித் துன்புறுவதைக் கூறாமல் மடலேற முயல்வதாகக் கூறுவது மடற்கூற்று எனப்பட்டது."[11] மடல் ஏறல் சங்க இலக்கியங்களில் கூறப்பட்டாலும் பெண்கள் மடலேறலை பன்னிரு பாட்டியலே எடுத்துக்கூறுகிறது. இதனை,

மடன்மா பெண்டிர் ஏறார் ஏறுவர்
கடவுளர் தலைவராய் வருங்காலை[12]

என்று எடுத்துக் காட்டப்படுகிறது, நம்பியகப்பொருள் மாறன் அகப்பொருள் போன்ற நூல்களில் மடல்கூற்றிற்கும் மடல்விலக்கிற்கும் உரிய துறைகள் இன்னும் விரிவு செய்யப்பட்டுள்ளன. நம்பியகப் பொருள் இத்துறைகளை ஏழாக்கியது.

1. மடலே பொருளென மதித்தல்
2. பாங்கிக்கு உலகின்மேல் வைத்துரைத்தல்
3. மடலேற்றினைத் தலைவன் தன்மேல் வைத்துச் சாற்றல்
4. பாங்கி தலைமகன் அவயவத் தருமை சாற்றல்
5. தலைமகன் தன்னைத் தானே புகழ்தல்
6. அலர்முல்லைப் பாங்கி அருளியல் கிளத்தல்
7. கொண்டுநிலை கூறல்[13]

என்று எடுத்துக் கூறுகிறது. மடலோலை சங்க இலக்கியம்,

மாவென மடலும் ஊர்ப பூவெனக்
குவிமுகிழ் எருக்கங் கண்ணியும் சூடுப
மறுகிளார்க கவும் படுப
பிறிது மாகுப காமங் காழ் கொளினே

(குறுந்., 17)

என்று பாடல் எடுத்துக் காட்டுகிறது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் மடல் ஏறல் சிறிது மாற்றம் பெற்று பெண் மடலேறுவதாகக் கூறப்பட்டாலும், அத்துறை வளர்ச்சியடைந்து பெரிய திருமடல் சிறிய திருமடல் என்று இருபெரும் பனுவல்களாக திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

தாரானை தாமரைபோல் கண்ணானை-எண்ணருஞ்சீர்ப்
போராயிரமும் பதற்றி-பெருந்தெருவே
ஊராரிகிழிலும் ஊரா தொழியேன் நான்
வாரார் பூம்பெண்ணை மடல் ...

(நா.தி.பி., சிறியதிருமடல்)

என்ற பாடலில் எடுத்தாள்கிறார். மடலேறல் மரபு மாறினாலும் மடலேறல் என்ற சங்க இலக்கிய மரபு போற்றப் பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இதனை செல்வாக்குக் கொள்கையின் ஒரு பகுதியாய் "ஏற்றல் கொள்கை" (Theory of Reception) என்பர்." திருமங்கையாழ்வார், இத்திருமடலில் கண்ணன் குடங்களை எடுத்தாடின கூத்திலே ஈடுபட்டு அவனை அடைய முடியாமையாலே மடலேறத் துணிந்த ஒரு தலைவி நிலையில் நின்று தன் இறையுணர்வை வெளிப்படுத்துகின்றார்."[14] அகப்பொருள் கூறுகளை மிகச்சிறந்த முறையில் பாடிய ஆண்டாள் தம் கலை எல்லையை மானசீகத்தால்

கடந்து கண்ணன் அவதரித்த காலத்துக்குச் சென்று தம்மைக் கோபியருள் ஒருத்தியாகக் கருதி கிருஷ்ணாநுபவம் பெறுகின்றாள். இராமாநுசரும் ஆண்டாள் பாசுரத்தை. ஓதி உளங்கரைந்து அதே அநுபவத்தைப் பெறுகின்றார். இதை உளவியலார் ஒட்ட உணர்தல் (Empathetic Feeling) என்று கூறுவர்."[15] இத்தகையச் சிறப்புபெற்ற ஆண்டாள் மடலூராமைக்கு உரையாசிரியர் காரணம் கூறுகிறார்.

"பெரியவாச்சான் பிள்ளை தமிழிலக்கண நெறிக்கு மாறாக மடலூர்தல் பெண்களுக்கும் அமையும் என்ற கருத்தில் ஆண்டாள் காதல் மீதூர்ந்த நிலையிலும் ஏன் மடலூர முன் வரவில்லை என்ற கேள்வியை எழுப்பிக் கொண்டு தாமே அதற்கு விடையையும் கூறுகிறார். ஆண்டாள் மடலூராமைக்கு இரண்டு காரணங்கள் உள என்கிறார். அவற்றுள் முதற் காரணத்தை அவர் ஓர் உவமைவாயிலாக விளக்குகிறார். அதாவது ஓர் அரசி ஐயமேற்க முற்பட்டால் அது அரசனுக்கு இழிவாய்த் தீரும். அதுபோல ஆண்டாள் மடலூர முன்வந்தால் கண்ணனுக்குக் கேவலமாக முடியும். கண்ணனுக்குத் தன்னால் இழுக்கு நேர்வது, அவன்பால் பேரன்பு வைக்கும் ஆண்டாளுக்கு உடன்பாடன்று. எனவே அவள் மடலூர்தல் குறித்து எண்ணவில்லை.

(இரண்டாவது காரணம் ஆண்டாள் கண்ணனது இயல்பை நன்கு அறிவாள். தான் மடலூர் வதைகாணும்போது கண்ணன் மனமிரங்கி தன் இச்சையை நிறைவேற்றி வைப்பான் என்பதில் அவளுக்கு உறுதியில்லை. இராமாவதாரம் போன்றதன்று கிருஷ்ணாவதாரம் என்பதையும், இராமன் தன் குணத்துக்கு மாசு தோன்றுவதைப் பொறுத்துக் கொள்ள மாட்டான். ஆனால் கண்ணனோ அதற்கு மாறாகத் தன் பெருமைக்குக் குறைவு நேருவதில் நாணமடைபவன் அல்லன் என்பதையும் அவள் நன்கறிவாள். தான் மடலூர்ந்தால் கண்ணனும் தனக்கு எதிராக மடலூர்வான் என்று எண்ணி அவள் அச்செயலைக் கைவிட்டாள்"[16]) என்று பெரிய வாச்சான் பிள்ளை தமது வியாக்கியானத்தில் எழுதியதைக் குறிப்பிடுகிறார். இவ்வாறு மடலூர்தல் பக்தி இலக்கிய காலத்தில் சிறந்த வளர்ச்சிநிலை அடைந்துள்ளது.

**ஏறுதழுவல்**

*தலைவன், தலைவி வீட்டில் வளர்கின்ற காளையை அடக்கி பிறகு தலைவியை மணம் புரிந்து கொள்ளும் முறை சங்க காலத்தில் இருந்தது. இதற்கு ஏறுதழுவல் என்று பெயர். ஏறுதழுவல் பெரும்பாலும் முல்லைத் திணைப் பகுதியில் தான் நடைபெறும். ஏறுதழுவல் மற்ற சங்க நூல்களில் இல்லாமல் கலித்தொகையில் மட்டும் காணப்படுகிறது. ஏறுதழுவலை,*

ஓஒ இவள்
பொருபுகல் நல்லேறு கொள்பவர் அல்லால்
திருமாமெய் தீண்டவர் என்று தருமமா
எல்லாரும் கேட்ப அறைந்தறைந்து எப்பொழுதும்
சொல்லால் தரப்பட்டவள் ...

(மு.கலி., 2)

*என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. இந்த ஆயர்களின் வாழ்க்கை முறையான ஏறுதழுவல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் கூறப்பட்டு உள்ளது. கண்ணன் ஆயர்குலப் பெண்ணான நப்பின்னையை மணத்தற்கு ஏறு தழுவினான் என்பதை,*

ஊனேறு செல்வத்து உடற்பிறவியான் வேண்டேன்
ஆனேறேழ் வென்றான் அடிமைத் திறமல்லால்

(நா.தி., 677)

*என்ற பாடலில் ஆனேறேழ் வென்றான் என்ற தொடர் குறிப்பிடுகிறது.*

**வெறியாடல்**

*களவுக் காலத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவின் காரணமாக அவள் நலமிழந்து பசலையுற்று காணப்படுகிறாள். எப்போதும் தலைவனையே நினைத்து வருத்தமுற்று நோயுற்றவளைப் போல காணப்படுகிறாள். தலைவியின் உடல் வேறுபாட்டைக் கண்ட செவிலி அதற்குக் காரணத்தை அறிய வேலனை அழைத்து வெறியாடச் செய்கிறாள். வெறியாடலை பற்றி "ஒருவன் வேலைக் கையிலே வைத்துக் கொண்டு முருகனைப் போற்றி அழைத்துக் கொண்டே ஆடுவான். வேலைக் கையில் வைத்துக் கொண்டு ஆடியதால் அவனுக்கு வேலன் என்னும் பெயர் அமைந்தது. இறைவன் தன்மூலம் வெளிப்படுவான் என்ற நம்பிக்கையில் வெறியாட்டு நடத்தினார்"[17]*

என்று குறிப்பிடுகிறார். இந்த வெறியாடலை மேலும் வெறியாடும் வேலன் முன்னிலையில் செவிலித்தாய் தலைவியின் கூந்தலில் உள்ள மலரை எடுத்துப் போட்டுத் தலைமகளின் நோய் தீரவேண்டும் என்று வேண்டிக்கொள்வாள்"[18] என்று குறிப்பிடுகிறார். வெறியாடலை சங்க இலக்கியம்,

பெய்ம்மணன் முற்றங்கவின் பெறவியற்றி
மலைவான் கொண்ட சினைஇய வேலன்
கழஞ்சினா னறிகுவ தென்றா
னன்றா லம்ம நின்ற விவணவனே ...

(ஐங்., 248)

என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்யப்பிரபந்தம்,

சின்மொழிநோயோ கழிபெருந் தெய்வம் இந்நோயினதென்று
இன்மொழிகேட்கும் இளந்தெய்வ மன்றிது வேல! நில் நீ
என்மொழி கேண்மின் என்னம் மனையீர்! உலகேழு முண்டான்
சொல்மொழி மாலையந்த ண்ணர் துழாய் கொண்டு சூட்டுமினே!

(நா.தி.பி., 2497)

என்ற பாடல் வாயிலாக எடுத்துக் காட்டுகிறது.

**சிற்றில் சிதைத்தல்**

தலைவன் தலைவி இருவரும் சிறுவர்களாக இருக்கும் போதே இந்நிகழ்ச்சி நடைபெறுகிறது. தலைவியாகிய சிறுமி மணலால் சிறுவீடுகட்டுவதும் அதைத் தலைவனாகிய சிறுவன் இடிப்பதுவும் சிற்றில் சிதைத்தல் எனப்படும். இந்தச் சிற்றில் சிதைத்தலில் ஈடுபட்டுள்ள சிறுவன் சிறுமியரே பிற்காலத்தில் அன்பு மிகுந்துள்ள தலைவன் தலைவியர் ஆயினர். இச்சிற்றில் சிதைத்தல் சங்க இலக்கியத்தில்,

தழுவுவழித் தழீஇத் தூங்குவழித் தூங்கி
மறையெனல் அறியா மாயமில் ஆயமொடு
...................................
குறித்து மணற்கொண்ட கல்லா விளமை

(புறம்., 243)

என்று குறிப்பிடுகிறது. நாளாயிர திவ்யப் பிரபந்தத்தில் சிற்றில் சிதைத்தல் என்பது நாச்சியார் திருமொழியின் ஒரு பதிகமாகவே இடம் பெற்றதோடு,

முற்றிலும் தூதையும் முன்கைம் மேல் பூவையூம்
சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களை
பற்றிப் பறித்துக் கொண்டு ஓடும் பரமன் தன்
நெற்றி இருந்தவா காணீரே! நேரிழையிர் வந்துகாணீரே!

(நா.தி.பி., 41)

என்று இடம் பெற்றுள்ளது.

**பறவையை வெறுத்துரைத்தல்** ✓

சங்க இலக்கியத்தில் மக்களுடைய வாழ்க்கையில் பறவைகள் மிகுதியான தொடர்பு பெற்றிருந்ததை அப்பாடல்கள் பறைசாற்றுகின்றன. மக்களுடைய இன்பியலிலும் துன்பியலிலும் பறவைகள் உத்தியாக சங்கக் கவிஞர்களால் பாடப்பட்டுள்ளன.

சங்க இலக்கியத்தில் பொழுது விடிந்ததை உணர்த்த சேவல் கூவுகிறது. இதனைத் தலைவி சபிப்பதாக,

கடுநவைப் படீஇயரோ நீயே நெடுநீர்
யாணர் ஊரன் தன்னொடு வதிந்த
ஏம இன்துயில் எடுப்பியோயே ...

(குறுந்., 107)

என்ற பாடல் தலைவி, பூனைக்கு இரையாகுமாறு சேவலை சபிப்பதாகப் பாடப்பட்டுள்ளது. இந்தச் செய்தி நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில், சிறிது மாற்றம் பெற்று இதே கருத்து இடம் பெற்றுள்ளது.

இன்னன்ன தூது எம்மை ஆளற்றப் பட்டிரந்தாள் இவளென்று
அன்னன்ன சொல்லாப் பெடையொடும் போய்வரும் நீலமுண்ட
மின்னன்ன மேனிப் பெருமானுலகில் பெண்தூது செல்லா
அன்னன்ன நீர்மை கொலோ? குடிச்சீரிமையிலன்னங்களே

(நா.தி.பி., 2506)

என்ற பாடலில் தலைவி தலைவனிடம் தூது செல்லாத அன்னத்தை வெறுத்துக் கூறுவதாக பாடப்பட்டுள்ளது.

### தலைவன் மலைக்கண்டே தாங்கள் உயிர்வாழ்வதாகக் கூறல்

*சங்க இலக்கியத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி தலைவன் இருக்கும் மலையைப் பார்த்தே பிரிவை ஆற்றியிருப்பதாகப் பாடப்பட்டுள்ளது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் தலைவி தலைவனின் இருப்பிடத்தைப் பற்றி பேசும் போதெல்லாம் மாறுபாடு அடைகிறாள் என்பதை பின்வரும் பாடல் எடுத்துக் காட்டுகிறது. சங்க இலக்கியத்தில்,*

குன்றக் குறவன் காதன் மடமகள்
அனிமயிலன்ன வசைநடைக் கொடிச்சியைப்
பெருவரை நாடன் வரையு மாயிர்
கொடுத்தென மாயினோ நன்றே
யின்னு மானாது நன்னுத துயரே ...

(ஐங்கு., 258)

*என்று இடம் பெற்றுள்ளது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

குரவை யாய்ச்சியரோடு கோத்ததும் குன்ற மொன்றேய்தும்
உரவுநீர்ப் பொய்கை நாகம் காய்ந்ததும் உட்பட மற்றும் பல
அரவிந் பள்ளிப் பிரான்தன் மாயவினைகளையே அலற்றி
இரவும் நன்பகலும் தவிர்நிலம் என்ன! குறைவு எனக்கே!

(நா.தி.பி., 3260)

*என்று இடம் பெற்றுள்ளது. இப்பாடலில் தலைவனாகிய திருமால் குரவையாடியதும், குன்றம் ஏந்தியதும், பொய்கையில் காளிங்கன் என்ற பாம்பின் மீது நடனமாடியதும் ஆகிய செயல்களை நினைத்தே இரவும் பகலும் உயிர்வாழ்வதாக தலைவி கூறுதல் சங்க இலக்கிய பாடலுக்குப் பொருந்துவதாக அமைந்துள்ளது.*

### தோழி தலைவன் வீட்டைக்காட்டி இரங்குதல்

*தலைவன் தலைவியை சந்திக்க வருவதை இரண்டு வகைப்படுத்துவர். அவை (1) பகற்குறி, (2) இரவுக்குறி ஆகும். அவற்றுள் பகற்குறியானது. தலைவன் திணைப்புனத்தைக் காவல் காக்கின்ற தலைவியை திணைப்புனத்தில் சந்திப்பதும் அவளது இல்லத்தருகே இருக்கின்ற சோலையில் பகற்பொழுதில் சந்திப்பதும் பகற்குறி எனப்படும். திணைக்கதிர் முற்றிய காலத்தில் இல்லத்தில் இருக்கின்ற தலைவியை பிறர் அறியாமல் சந்திப்பதற்கு இரவுப் பொழுதே*

உகந்தது என்பதால் இரவு நேரத்தில் தலைவன் தலைவியின் இல்லத்தருகே வந்து ஒலியெழுப்புவான் அது இரவுக் குறி எனப்படும். இது சிலநேரங்களில் அல்லகுறியாகவும் இருக்கும். இவ்வாறு தலைவியின் வீட்டை தோழி தலைவனுக்குக் காட்டுதல் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. ஆனால் திவ்யப் பிரபந்தம் சிறிது மாற்றி கூறியுள்ளது. சங்க இலக்கியம்,

இவளே நின்சொற் கொண்ட என்சொல்தேறி
பசுநனை ஞாழற் பல்சினை ஒருசிறைப்
புதுநலன் கிழந்த புலம்புமார் உடையள்
உதுக்காண் தெய்ய உள்ளல் வேண்டும்
நிலவும் இருளும் போலப் புலவுத்திரைக்
கடலும் கானலுந் தோன்றும்
மடல் தாழ் பெண்ணையெம் சிறுநல்லூரே

(குறுந்., 81)

என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இச்செய்தியானது,

மாடமாளிகை சூழ் மதுரைப்பதி
நாடிநம் தெருவின் நடுவே வந்திட்டு

(நா.தி.பி., 538)

என்று தலைவன் தம் தெருவழியாக வந்த செய்தி குறிப்பிடப்படுகிறது.

**ஓசைக்கு ஆற்றாத தலைவி இரங்கல்**

கடலில் ஒன்றையடுத்து ஒன்றாக அலை எழும்புவதும் அப்போது எழும் ஓசையும் இயற்கையாக இருப்பினும் பிரிவுகாலத்தில் இருக்கின்ற நெய்தல் நிலத் தலைவிக்குத் தன்னைப்போல் கடலும் புலம்புவதாக எண்ணுகிறாள் என்று சங்கப்பாடல் குறிப்பிடுகிறது. இதனை,

யாரணங் குற்றனை கடலே பூழியர்
சிறுதலை வெள்ளைத் தோடு பரந்தன்ன
மீனார் குருகின் கானலம் பெருந்துறை
வெள்வீத் தாழை திரையலை
நள்ளென் கங்குலுங் கேட்குநின் குரலே ...

(குறுந்., 163)

*என்று எடுத்துக் காட்டுகிறது. அதேப் போல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் பிரிவுற்ற தலைவி கடலிடம் புலம்புவதாகவும் திருமாலின் தேர்ச் சக்கரங்கள் பதிந்த சுவடுகளை உன் அலைகளால் அழிக்காமல் இருப்பாயாக என்று வேண்டுவதையும்,*

இருள் வரிந்தாலன்ன மாநீரித் திரைகொண்டு வாழியரோ
விருள் பிரிந்தா ரன்பர் தேர்வழிதூரல ரவனைமே
லிருள் விரிநீலக் கருஞாயிறுசுடர் கால்வது போ
லிருள் விரிசோதிப் பெருமானுறையும் மெறிகடலே

(நா.தி.பி., 2494)

*என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது.*

**தலைவன் பின் சென்ற தலைவியின் நெஞ்சு:-** ✓

*பொதுவாக களவு வாழ்க்கையில் ஈடுபட்டவர்கள் நெஞ்சானது இன்னொருவர் பின் செல்லுதல் இயல்பாகும். இந்நிலையில் தலைவியின் நெஞ்சம் தலைவனிடமும் தலைவனின் நெஞ்சம் தலைவியிடமும் ஈடுபட்டிருத்தலை சங்க இலக்கியம் கூறுவது போலவே பக்தி இலக்கியமான நாலாயிர திவ்யப்பிரபந்தமும் கூறுகின்றது. மலை நாட்டுத் தலைவன் பின் தன் நெஞ்சு சென்றதாகத் தலைவி,*

வருவது கொல்லோ தானே வாரா
தவணுறை மேவலி னமைவது கொல்லோ
புனவர் கொள்ளியிர் புகவரு மஞ்ஞை
இருவியிருந்த குருவி வருந்துறப்
பந்தாரு மகளிரிற் படர்தருங்
குன்று கெழு நாடனொடு சென்ற வென்னெஞ்சே

(ஐங்., 295)

*என்று குறிப்பிட்டுள்ளார். இதேப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் தலைவியின் நெஞ்சு தலைவனாகிய திருமாலிடத்து ஈடுபட்டதாக,*

பின்நின்ற காதல் நோய் நெஞ்சம் பெரிதருமால்

(நா.தி.பி., 3155)

*என்று நெஞ்சுக்குக் கூறுவதாக அமைந்துள்ளது. இதனால் நெஞ்சுக்குக் கூறல் என்ற சங்க இலக்கிய மரபும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் செல்வாக்குப் பெற்றிருத்தலை அறிய முடிகிறது.*

**மாலைக்கால வருத்தம்**

தலைவனைப் பிரிந்த தலைவி மாலைக் காலத்தைக் கண்டு துயறுருவதாக சங்க இலக்கியப் பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன. அவற்றிலும் கார்காலத்து மாலைநேரம் பிரிந்தவர்களுக்கு அதிக வருத்தத்தை உண்டு பண்ணுவதாக இருந்தது. கார்காலம் என்பது ஏறக்குறைய ஆவணியும் புரட்டாசியும் ஆகிய இருதிங்களுமாகும். கார்காலத்து மாலைநேரம் முல்லை நிலத்துக்குரிய சிறுபொழுதாகவும் கொள்ளப்படுகிறது. கார்காலத்திற்குள் திரும்பி வருவேன் என்று தலைவன் கூறி பிரிந்து செல்கிறான். அவ்வாறே தலைவியும் பொறுத்து இருக்கிறாள். குறித்த காலம் வந்தவுடன் தலைவனும் தலைவியும் தம்முடைய சொல்திறம்பாமல் வாழ்கிறார்கள். இதனால் முல்லை நிலம் கற்புக்கு உடையதாயிற்று''[19] என்று மு.வ. குறிப்பிடுகிறார். மாலைக்கால வருத்தத்தை சங்க இலக்கியம்,

படுசுடரடைந்த பகுவாய் நெடுவரை
முரம்புசேர் சிறுகுடிப் பரந்த மாலைப்

(நற்., 33)

என்று எடுத்துக் காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

ஆழ்வாழ்கின்ற ஆவியை அடுவது ஓர்
அந்தி வந்து அடைகின்றதே

(நா.தி.பி., 1692)

என்று அந்திப்போதினை நினைத்து தலைவி துயறுருவதாக பாடப்பட்டுள்ளது.

**தூது**

சங்க இலக்கிய தலைவியர் தலைவனைக் காணவேண்டும் என்பதற்காக அஃறிணைப் பொருள்களான வண்டு. கிளி, குயில், கடல்அலை ஆகியவற்றைத் தலைவனிடம் அனுப்பினர். இறுதியாக இவையணைத்தும் தோல்வியுற்றபின் தன் நெஞ்சினை அனுப்புவதாக சங்கப் பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

பேசமுடியாதவற்றையும் கேட்க முடியாதவற்றையும் காண முடியாதவற்றையும் தூதுவிடுதல் அக இலக்கிய மரபு. தன்னுணர்வினை, வெளிப்படையாகச் சொல்லமுடியாத நிலையில் அஃறிணைப் பொருள்களிடம்

சொல்லும் முகமாகத் தன் உணர்வுகளுக்கு வடிகால் அமைக்கிறாள் தலைவி''[20] நற்றிணையில் குருகினை தூது அனுப்பிப் பாடுகிறாள் தலைவி,

சிறுவெள்ளாம் குருகே சிறுவெள்ளாம் குருகே
துறைபோ கறுவைத் தூமடியன்ன
நிறங்கிளர் தூவிச் சிறுவெள்ளாம் குருகே ...

(நற்., 70)

என்ற வெள்ளிவீதியார் பாடல் விளக்குகிறது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் தலைவி மேகத்தை மேகவண்ணனாகிய திருமாலுக்குத் தூதாக அனுப்புகிறாள்

மின்னாகத் தெழுகின்ற மேகங்காள்! வேங்கடத்துத்
தன்னாகத் திருமங்கை தங்கிய சீர்மார்வர்கு

(நா.தி.பி., 380)

என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. தூதினைப் பற்றிக் கூறும்போது ''தூதுப் பொருள்களாகிய நாரை, வண்டு, கிளி, பூவை இவைகளை ஆழ்வார் பாடல்களில் என்னவாகக் கொள்ள வேண்டும்? ஞான அனுட்டானங்களைக் கொண்ட ஆசார்யர்களாகக் கருதி எம்பெருமானை அடைவிக்குமாறு அவ்வாச்சார்யர்களை வேண்டுவதாகப் பொருள் கொள்ள வேண்டும்''[21] என்று குறிப்பிடுகிறார். தலைவி அஃறிணைப் பொருள்களை தூதுவிடுதவற்கு தலைமகனைக் காணலுற்று வருந்தா நின்ற தலைமகள் தனது வேட்கை மிகவாற் கேளாதனவற்றைக் கேட்பவனாக விளித்து கூறாநிற்றல் என்று திருக்கோவையின் உரை கூறுகிறது. தூதுவிடுதல் சங்க இலக்கியம் போன்றே திவ்யப் பிரபந்தத்திலும் சிறப்புற்று காணப்படுகிறது.

## பசலைநோய்

தலைவனைப் பிரிந்ததால் தலைவியின் உடலில் ஏற்படும் மாற்றங்களை பசலை நோய் என்பர். தலைவியின் உடல்நிறம் இழுத்தல், வளைநெகிழ்தல், தலைவியின் கண்பசத்தல், அழகுஅழிதல், தோள் நெகிழ்தல் போன்றவை பசலைநோய் எனப்படும். பசலை நோய் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் பரவலாக இடம்பெற்றுள்ளது, போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இடம் பெற்றுள்ளது. பசலை நோயை,

நடுங்குவனம் எழுந்து நல்லடி தளிர்ந்தியாம் (குறிஞ்சி., 133)

என்று சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,

உலகுண்ட விளங்கனிபோல் உள்மெலியப் புகுந்து என்னை
நலங்கொண்ட நாரணற்கு...

(நா.தி.பி., 582)

என்று குறிப்பிடுகிறது.

### தலைவனே மருந்து

பிரிவுத் துயரால் நோயுற்ற தலைவிக்குத் தலைவன் தான் நோய்தீர்க்கும் மருந்து என்பதை சங்க இலக்கியம்,

பூழ்க்கா லன்ன செங்கால் உழுந்தின்
ஊழ்ப்படு முதுகாய் உழையினங் கவரும்
அரும்பனி அச்சிரந் தீர்க்கும்
மருந்து பிரிதில்லையவர் மணந்த மார்பே "

(குறுந்., 68)

என்று எடுத்துக்காட்டுகிறது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

மருந்தும் பொருளும் அமுதமும் தானே
திருந்திய செங்கண் மாலங்கே-பொருந்தியும்
நின்றுலக முண்டுமிழ்ந்தும் நீரேற்றும் மூவடியால்
அன்றுலகந்தா யோனடி

(நா.தி.பி., 2285)

என்று பாடல் எடுத்துக் காட்டுகிறது.

### பிரிவாற்றாமை

களவொழுக்கத்தில் ஈடுபட்ட தலைவன் தலைவியை விட்டு பிரிகிறான். அப்பிரிவு பொருள் தேடவும், பகைவயிற் பிரிவாகவும் ஓதற் பிரிவாகவும், தூதிற் பிரிவாகவும் சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. ஆனால் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பகைவயிற் பிரிவும், பொருள் வயிற்பிரிவும் பாடப்பட்டுள்ளன.

### பகைவயிற் பிரிவு

இது இரண்டு வகைப்படும் ஒன்று அரசன் தானே தன்னுடைய பகையை முடிக்கச் செல்வதாகும். மற்றொன்று அவ்வரசனுக்காக குறுநில மன்னரோ அல்லது பிறமுடியுடை மன்னரோ சென்று போர்புரிதல் ஆகும்.

தானே சேறலும் தன்னொடு சிவணிய
ஏனோர் சேறலும் வேந்தன் மேற்றே ...

(தொல்.அகம்., 27)

என்றும்,

மேவிய சிறப்பினேனோர் படிமைய
முல்லை முதலாச் சொல்லிய முறையாற்
பிழைத்தது பிழையா தாகல் வேண்டியும்
இழைத்த ஒண்பொருள் முடியவும் பிரிவே ...

(தொல்.அகம்., 28)

என்றும் பிரிவை விளக்குகிறது. வேந்தற்குற்றுழி பிரிவை சங்க இலக்கியம்,

கொற்றச் சோழர் கொங்கர்ப் பணிஇயர்
வெண்கோட் டியானைப் பேஎர் கிழவோன்
பழையன் வேல்வாய்த் தன்னநின்
பிழையா நன்மொழி தேறிய விவட்கே

(நற்., 10)

என்று எடுத்துக்காட்டுகிறது. இந்தச் செய்தியை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,

பேணமில்லா அரக்கர் முந்நீர பெரும் பதிவாய்
நீள்நகர் நீளெரிவைத்தருனா யென்று நின்னை விண்ணோர்
தாள் நிலம் தோயந்து தொழுவர் நீன்மூர்த்திபல் கூற்றிலொன்று
காணலு மாங்கொல்? என்றே வைகல் மாலையும்காலையுமே

(நா.தி.யி., 2569)

என்று எடுத்துக்காட்டுகிறது.

**கனவு**

களவு காலத்தில் தலைவி கனவு காண்பது இயற்கை. அவ்வாறு கனவு காண்பதை, தொல்காப்பியம், தலைவியின் காதல் காத்தற்கு அரிதாய்க் கனன்று எழுங்கால் கனவு கனன்று அரற்றுவாள் இதனைக்,

காதல் கைம்மிக்க கனவின் அரற்றலும்

(தொல்.பொருள்., 115)

என்று குறிப்பிடுகிறார். குறிஞ்சி, நெய்தல், மருதம், பாலை ஆகிய நிலத்து தலைவிகள் கனவு கண்டனர். முல்லை நிலத்து தலைவி மட்டும் கனவு காணவில்லை. இதற்குக் காரணம் கூறுகையில், “முல்லைத்திணைத் தலைவி

ஆற்றியிருப்பவள். உளத்தின் மையால் நெஞ்சத்து நினைவலைகளுக்கு எல்லை வகுத்து நிற்பவள். அவள் உணர்ச்சிப் பெருக்கில் சிக்கிக் கனவுச் சூழலில் அமிழ இயலாது எனக் கருதியே சங்கப்புலவர் முல்லைத் தலைவி கனவு காண்பதாகக் காட்டவில்லை"[22] என்று குறிப்பிடுகிறார். கனவை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஆண்டாள் பாடிய நாச்சியார் திருமொழிப் பாசுரம் ஒருபதிகம் முழுவதும் திருமண முறையாகக் காட்டுகிறது.

### அன்பு உறுதி

தலைவி தான் தலைவன் மேல் கொண்டுள்ள அன்பானது கடலை விட பெரியதாகவும், ஆழமானதாகவும் இருப்பதை சங்கப் பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. தலைவிதான் விரும்புகின்ற தலைவனைப் பிரிந்ததால் உயிர் வாழ விரும்பாமையும் அந்தத் தலைவனையே மணப்பதில் உறுதியாகவும் இருப்பது தலைவனை விட தன்னுடைய உயிரை சிறியதாக அந்தத் தலைவி நினைப்பதையும்,

பனிபுலந் துறையும் பல்பூங்கானல்
விரிநீர்ச் சேர்ப்பவன் நீர்ப்பினொருநம்
இன்னுயிரல்லது பிறிதொன்
றெவனோ தோழி நாமிழப்பதுவே ...

(குறுந்., 334)

என்ற பாடல் குறிப்பிடுகிறது. அதேப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் தலைவி திருமாலாகிய தலைவனைத் தவிர வேறொருவரை மணப்பது என்றால் உயிர் வாழமாட்டேன் என்பதை,

மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழ்கிலேன்
கண்டாய் மன்மதனே ...

(நா.தி.பி., 508)

என்ற பாடல் குறிப்பிடுகிறது.

### பொருள்வயிற் பிரிவு

தலைவன் தலைவியை மணப்பதற்கு முன்னும் பின்னும் பொருளீட்டச் செல்வது பொருள்வயிற் பிரிவாகும். களவாழுக்கத்தின் போது தலைவன்

பொருள் தேடச் செல்லுதல் "வரைவிடைவைத்து பொருள் வயிற் பிரிதலாகும். பொருள் வயிற் பிரிதலுக்குத் தொல்காப்பியம்,

"கொள்வதும் மிகை கொளாது கொடுப்பதும் குறைகெடாது நெறிப்பட வாணிகம் செய்யும் வணிகர் இப்பிரிவிற் குரியவராவர் இவருக்கு இப்பிரிவு சிறப்பேனும் பிற இனத்தவரும் இப்பிரிவிற்குரியரே ஆவர்"[23] என்று கூறுகிறார் இப்பொருள்வயிற் பிரிவு காலத்தில் தலைவி பெருகின்ற துன்பத்தை, சங்க இலக்கியம்,

புள்ளும் புலம்பின பூவுங் கூம்பின
கானலும் புலம்பு நனியுடைத்தே வானமும்
நம்மே போலும் மம்மர்த் தாகி
எல்லை கழியப் புல்லென்றன்றே
இன்னும் உளென தோழி இந்நிலை
தண்ணிய கமழு ஞாழல்
தண்ணந் துறைவர்க்குரைக்குநர்ப் பெறினே ...

(குறுந்., 310)

எடுத்துக்காட்டுகிறது. இந்தச் செய்தி நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

அடைக்கலத்தோங்கு கமலத்து அலர்அயன் சென்னி என்னும்
முடைக்கலத்து ஊண்முன் அரனுக்கு நீக்கியை ஆழி சங்கம்
படைக்கலம் ஏந்தியை வெண்ணெய்க்கு அன்று ஆய்ச்சிவன்
தாம்புகளால்
புடைக்கலந் தானை எம்மானை என் சொல்லிப் புலம்புவனே?

(நா.தி.பி., 2563)

என்ற பாடலில் ஆய்ச்சி தாம்பால் அடிக்கவும் அதற்கு வருந்தியவன் போல் காட்சி தந்த என் தலைவனான இத்திருமாலைக் குறித்து நான் என்ன சொல்லி புலம்புவேன் என்று கூறி புலம்புகிறாள் இவ்வாறு பிரிவிலும் சங்க இலக்கியத்தாக்கம் இருப்பது புலப்படுகின்றது. பொருள்வயிர் பிரிதலை நேரடியாக சுட்டவில்லையானாலும் பிரிவு என்ற பாடுபொருள் இடம்பெற்றுள்ளது என்பது தெளிவாகின்றது.

**அலர்தூற்றல்**

*அலர்தூற்றல் என்பது தலைவன், தலைவியின் களவொழுக்கத்தை அறிந்த பிறர் அதைப் பற்றிப் பேசி தூற்றுவது என்னும் பொருள்படும். சங்க இலக்கியத்தில் அலர் தூற்றல் இதே பொருளில் நிரம்ப இடம்பெற்றுள்ளது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் அலர்தூற்றல் சங்க இலக்கியப் பொருளிலே இடம் பெறுவதோடு பெரியாழ்வார் திருமொழியில் சிறிது மாற்றம் பெற்றும் இடம்பெற்றுள்ளது. அதாவது பெரியாழ்வார் திருமொழியில் பெரியாழ்வார் தன்னை யசோதையாகவும், கண்ணனை (திருமாலை) குழந்தையாகவும் பாவித்து நீராட்டுகிறார். கண்ணன் நீராடவில்லை என்றால் ஆய்ச்சியர்கள் அலர்தூற்றுவார்கள் என்று பாடியுள்ளார். ஆகவே அலர் தூற்றல் பெரியாழ்வார் திருமொழியில் புறம் பேசுதல் என்ற பொருளில் இடம் பெற்றுள்ளது. சங்க இலக்கியம் அலர்தூற்றலை,*

பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
இருங்கழி மருங்கினயிரை யாருங்
தண்ணந் துறைவன் தகுதி
நம்மோ டைமையா தலர் பயந்தன்றே ...

(ஐங்., 164)

*என்ற பாடலில் எடுத்துக் காட்டுகிறது. இச்செய்தியை;*

எல்லியும் நண்பகலும் இருந்தே ஏசிலும் ஏசுக ஏந்திழையார்
நல்லரவர் திறம் நாமறியோம் நாண்மடமச்சம் நமக்கிங்கில்லை

(நா.தி.பி., 1793)

*என்று நாலாயிர திவ்யப் பிரபந்தம் குறிப்பிடுகிறது.*

**புனல் தரு புணர்ச்சி**

*தலைவன் தலைவியின் அகவாழ்க்கையின் தொடக்கமாக அமைவது பூத்தரு புணர்ச்சி, புனல்தரு புணர்ச்சி, களிறுதரு புணர்ச்சி ஆகும். இம்மூன்றில் ஒன்றின் வழியாக ஈடுபட்டு தலைவனும் தலைவியும் களவு வாழ்க்கை வாழ்வர். களவினை செவிலிக்குத் தோழி அறத்தொடு நிற்கும்போது இதனை எடுத்துக்காட்டுவாள். அவ்வகையில் இம்மூன்றனுள் புனல்தரு புணர்ச்சியானது சங்க இலக்கியம் போன்றே நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ளது.*

தலைவியும், தோழியும் புனலாடும்போது எதிர்பாராத நேரத்தில் ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடும். அந்நேரத்தில் தலைவி நீரில் முழுகும் தருவாயில் தலைவன் எதிர்ப்பட்டு நீரிடைப்பாய்ந்து தலைவியை மீட்டுவருவான். தலைவியின் உயிரைக் காப்பாற்றியதால் தலைவிக்குத் தலைவன் மீது அன்பும், தலைவியிடத்து தலைவனுக்கு ஏற்பட்ட அன்பும் அவர்களது களவு வாழ்க்கைத் தொடங்க ஏதுவாக அமையும் இதனை சங்க இலக்கியம் புனல் தருபுணர்ச்சியாக,

காமர் கடும்புனல் கலந்தெம்மோ டாடுவா
டாமரைக்கண் புதைத்தஞ்சித் தளர்ந்ததனோ டொழுகலா
னீணாக நறுந்தண்டார் தயங்கப்பாய்ந் தரளினாற்
பூணாக முறத்தரீஇப் போதந்தா னகனகலம்
வருமுலை புணர்ந்தன வென்பதனா லென்றோழி
யருமழை தரல்வேண்டிற் றருகிற்கும் பெருமையளே ...

(கலி.குறி., 3)

என்ற பாடலில் குறிப்பிடுகிறது. இதனை திருமங்கையாழ்வார் தம் திருவிருத்தத்தில், தலைவிகூற்றாக

பெருங்கேழலார் தம்பெருங்கண்மலர்ப்புண்டரீகம் நம்மேல்
ஒருங்கே பிறழவைத்தார் இவ்வகாலம் ஒருவர் நம்போல்
வருங்கேழ்பவருளரே? தொல்லைவாழியம் சூழ்பிறப்பு
மருங்கேவரப் பெறுமே? சொல்லுவாழி மடநெஞ்சமே!

(நா.தி.பி., 2522)

குறிப்பிட்டுள்ளார்.

## அறத்தொடுநிற்றல்

தலைவன் தலைவியின் களவொழுக்கத்தைத் தோழி செவிலிக்குக் கூறல் அறத்தொடு நிற்றல் எனப்படும். தோழி செவிலிக்கும் செவிலி நற்றாய்க்கும், நற்றாய் தந்தைக்கும் அறத்தொடுநிற்றல் முறையாகும். சங்க இலக்கியத்தில் அறத்தொடு நிற்றல் பரவலாக இடம் பெற்றுள்ளது. தோழி தனக்குரிய ஒழுகலாற்றில் கவனம் கொண்டு பல்வேறு வகையில் ஐயுற்ற பொழுதும், செவிலி, களவு அலராதல் முதலிய காரணங்களால் தன்னிடத்து மிகுதியாகக் கவனம் செலுத்துமிடத்தும், அறத்தொடு நிற்கக் கருதுவர். செவிலி நற்றாயிடத்து

அறத்தொடு நிற்பள். நற்றாய் தந்தை தன்னையர்க்கு அறத்தொடு நிற்பள் தந்தையும் தன்னையரும் அதுகண்டு குறிப்பால் உய்த்துணர்ந்து கொள்வர் என்று கூறுகிறது.[24] அறத்தொடு நிற்றலை சங்க இலக்கியம்,

பால்வரைநி தமைத்த லல்ல தவர்வயிற்
சால்பளந் தறிதற் சியாஅம் யாரோ
வெறியாள் கூறவும் அமையாள் அதன்தலைப்
பைங்கண் மாச்சுனைப் பல்பிணியவிழ்ந்த ...

(குறுந்., 366)

என்றபாடல் கூறுகிறது. இச்செய்தி நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

கனமகரக் குழையிரண்டும் நான்கு தோளும்
எவ்வளவு வுண்டு எம்பெருமான் கோயில் என்றோடு
இதுவன்றோ எழிலால் என்றார்தாமே ...

(நா.தி.பி., 2073)

என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது.

## தலைவன் வரவைக் கூறியவர்க்குத் தலைவி பரிசளித்தல்

சங்க இலக்கியத்தில் தலைவனைப் பிரிந்த தலைவியிடம் தலைவன் தங்களைக் காண விரைந்து வந்து கொண்டிருக்கிறான் என்று கூறியதற்காக மகிழ்ந்த அத்தலைவி பாடலி நகரத்தை அவனுக்குப் பரிசளிக்கிறாள் என்பதை,

வெண்கோட்டியானை சோணை படியும்
பொன்மலி பாடலி பெறீஇயர்
யார் வாய்க் கேட்டனை காதலர் வரவே ...

(குறுந்., 75)

என்று எடுத்துக் காட்டுகிறார். இதேப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் தலைவி தலைவன் வரக் கூவுவாயானால் உனக்கு அறமும் பயனும் பெறுவாய் என்று குயிலிடம் தலைவி கூறுவதாக,

ஆழியுஞ் சங்கும் ஒண் தண்டும்
தாங்கிய கையவனை வரக்கூவில் நீ
சாலத் தருமம் பெறுதி...

(நா.தி.பி., 551)

என்று கூறுகிறாள்.

**ஊடல்**

*செல்வச் செழிப்பு காரணமாக தலைவன் பரத்தமையருடன் தொடர்பு கொள்கிறான். இதனால் தலைவிக்கும் தலைவனுக்கும் இடையே ஊடல் நிகழ்கிறது.*

*இவ்ஊடல் மருத நிலத்திலேயே நடைபெறுகிறது. இது சங்க இலக்கியங்களைப் போலவே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் பரத்தையருக்காக ஊடல் நடைபெற்றது. என்பதை பல பாசுரங்கள் விளக்குகின்றன. இங்கு பரத்தையர்கள் என்பது அவர்களது குலத்தொழிலைக் கூறாமல் கண்ணனோடு இன்புற்றிருந்த ஆய்ச்சியர்களைக் கூறுவதாக அமைந்துள்ளது. பரத்தையர் வீட்டுக்குச் சென்ற தலைவனை தலைவி ஊடுவதாக,*

கரைசேர் வேழம் கரும்பிற் பூக்கும்
துறைகேழூரன் கொடுமை நன்று
மாற்றுக தில்ல யாமே
தோற்க தில்லவென் தடமென் தோளே ...

(ஐங்., 12)

*என்ற பாடல் விளக்குகிறது. இதே, செய்தியானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

ஆங்கு விரைந்தொலைக் கூற்றியாகில்
அவனை நான் செய்வன காணே ...

(நா.தி.பி., 552)

*என்று இடம்பெற்றுள்ளது. திய்வப் பிரபந்தத்தில், கண்ணன் தன் காதலிக்கு வாக்களித்தபடி தக்க நேரத்தில் வந்திலன் நேரம் தவறி வந்தவன். கதுவருகில் நின்று புன்முறுவல் பூத்தான். அப்போது அந்த தலைவி ஊடலில் இருந்தாள். அதனால் கண்ணன் தலைவியின் பூவையோடும், கிளியோடும் விளையாட முற்பட்டான்... அதற்கும் அத்தலைவி கடிந்து கூறுகிறாள். அவன் மீண்டும் கண்ணனிடம் உனக்குத் தேவிகளாக அமையக் கூடிய அழகிகள் பலர் இம்மூவுலகத்திலுமிருப்பர். அவர்களுடன் சென்று விளையாடு என்று தலைவி கூறுவதாக, ஊடுவதாக திருவாய்மொழி பாசுரங்கள் கூறுகின்றன.*

**இரவுதூங்காமை**

*தலைவனைப் பிரிந்த தலைவி இரவு நேரத்தில் தலைவன் பற்றிய நினைவோடு உறங்காமல் விழித்திருக்கிறாள். இரவு நீண்டுக் கொண்டே இருக்கிறது. இதனால் துயருற்ற தலைவி தன் துயரம் வெளிப்பட பாடுவதாக சங்க இலக்கியப் பாடல்கள் எடுத்துக் காட்டியுள்ளன. நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலை தலைவி கூற்றாக ஆழ்வார்களால் இயற்றப்பட்டுள்ளன. சங்க இலக்கியத்தில்,*

முட்டுவேன் கொல் தாக்குவேன் கொல்
ஓரேன் யானுமோர் பெற்றிமேலிட்டு
ஆஅ ஒல்லெனக் கூவூவேன் கொல்
அலமரல் அசைவளி அலைப்ப வென்
உயவுநோ யறியாது துஞ்சும் ஊர்க்கே ...

(குறுந்., 28)

*என்ற பாடலானது இரவு நேரத்தில் விழித்திருப்பவரின் கொடிய நிலையைக் குறிப்பிடுகிறது. இச்சூழல் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

பட்டுடுக்கும் அயர்த்திரங்கும் பாவை பேணாள்
பனிநெடுக்கண் நீர்த்தும்பப் பள்ளி கொள்ளாள் ...

(நா.தி.பி., 2062)

*என்று பாடப்பட்டுள்ளது. ஆனால் இரவு தூங்காமல் பிரிவால் தலைவி துயருவதாக செவிலிபாடுவதாக திவ்யப் பிரபந்தத்தில் அமைக்கப்பட்டு உள்ளது.*

**முல்லைத் திணை**

*அன்பின் ஐந்திணையாகிய குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் பாலை ஆகியவற்றுள் முல்லை நிலத்திற்குத் திருமால் கடவுளாதலாலும், ஆயர்களின் வாழ்க்கை முறையை எடுத்துச் சொல்வதாலும் முல்லை நிலம் பற்றிய ஆய்வினை விளக்கமாக இவ்வியல் எடுத்துக்காட்டுகிறது. திணைக்கு இலக்கணம் வகுத்த தொல்காப்பியர் முல்லைத் திணைக்குத் திருமாலைக் கடவுளாக கூறியிருக்கிறார். ஏனெனில் திருமால் எடுத்த பத்து அவதாரங்களுள் கண்ணன் அவதாரமானது ஆயர்களது வாழ்க்கை முறையோடு மிகநெருங்கிய தொடர்புடையதாகியது.*

"திருமாலாகிய கண்ணனும் ஆயர்குலச் சிறுவனாகவே தன்னுடைய வாழ்வைத் தொடங்குகிறான். அதனால் முல்லைத் திணை ஏனைய திணைகளைவிட சிறப்புப் பெற்றதாக இருந்திருக்கலாம். அக்காலத்தில் அவ்வந்நில மக்களின் வாழ்க்கை முறைக்கேற்ப அவர்களது வழிபாடு இருந்தது என்பதை, மக்கள் வாழும் நிலத்தியல்பிற்கும், பருவச் சூழ்நிலைகட்கும் ஏற்பவே அந்நில மக்களின் மனத்தியல்பாகிய உள்ளத்துணர்ச்சிகளும் தொழில் முறைகளும் உருப்பெறுவனவாகும். இந்நுட்பத்தினை நன்குணர்ந்த முன்னைத் தமிழ்ச்சான்றோர் தெய்வக் கொள்கையினை அவ்வந்நிலத்துக் கருப்பொருள்களுள் ஒன்றாக வகுத்துரைத்தனர். இதனால் மக்கள் வாழும் நிலத்தியல்புக்கு. ஏற்பவே அவர்தம் மனத்தியல்பாகிய தெய்வக் கொள்கைகளும் வழிபாட்டு முறைகளும் தோன்றி நிலைபெறுவனவாயின என்னும் வரலாற்றுண்மை நன்கு புலனாதல் காணலாம்"[25] என்று அவர்களது வாழ்க்கையோடு இயைந்த வழிபாட்டுக் கடவுளை ஏற்படுத்தியமையைக் குறிப்பிடுகிறார்.

திருமால் தான் கண்ணனாக அவதரித்த போது ஆயர் இன மக்களைப் போலவே கன்றுகளை மேய்த்துக் கொண்டும், குழல் ஊதிக்கொண்டும் வாழ்ந்திருக்கிறான். கண்ணனின் குறும்புச் செயல்களை சங்க இலக்கியம் எடுத்துக்காட்டுவதைப் போலவே பக்தி இலக்கியமான நாலாயிர திவ்யப் பிரபந்தமும் எடுத்துக்காட்டுகிறது. இருப்பினும் ஆழ்வார்கள் பல அவதாரங்களைப் பாடியபோதிலும் திருமாலின் கிருஷ்ண அவதாரமே அவர்களால் பெரிதும் விரும்பப்பட்டதாக இருக்கவேண்டும். ஏனெனில் அவர்களது பாசுரங்களில் பெரும்பாலானவை கண்ணனின் சிறப்புக்களை எடுத்துக் காட்டுவதாகவே அமைந்துள்ளது. பக்தி இலக்கிய காலத்தில் கண்ணன் வழிபாடு மிகச் சிறந்ததாக இருந்திருக்க வேண்டும் என்பதை "தமிழ்நாட்டுப் பழங்குடியினராகிய முல்லைநிலத்து ஆயரிடையே முகிழ்ந்த மாயோன் தமிழ் வேதநெறிகள் கலப்பின் விளைவாகத் தன் வனவாசத்தை முடித்துக் கொண்டு முதல் தெய்வமாக வளர்ந்து பக்தி இயக்கக் காலத்தில் முழுமுதற் பொருளாகச் செங்கோலோச்சத் தொடங்கினான்"[26] என்று குறிப்பதிலிருந்து சங்க இலக்கிய

காலத்திலிருந்து பக்தி இலக்கியகால இடைவெளியில் கண்ணன் வழிபாடு மிகச்சிறந்த வளர்ச்சியடைந்துள்ளது எனலாம்.

“ஆயர்கள் காடும் காடுசார்ந்த இடங்களிலும் வாழக் கூடியவர்கள், அவர்களுக்கு ஆடுமாடுகளை மேய்த்தல் அவர்களது தொழிலாகும். தயிர்கடைதல் ஆயர் பெண்களுக்கு உரிய தொழிலாகும். இருப்பினும் ஆயர்கள் போர்செய்தலையும் சிறப்பாகக் கருதக் கூடியவர்கள். வீரத்தை அடிப்படையாகக் கொண்டே அவர்களது களவும், வாழ்க்கை முறையும் தொடங்குகிறது என்பதை முல்லைக் கலி எடுத்துக்காட்டுகிறது. ஆயர்கள் தங்கள் ஆநிரைகளை மேய்க்க கூட்டம் கூட்டமாகவே சென்றனர். ஆயர்கள் தங்கள் இனத்தோடு கூடிச் சென்றதே சமுதாயம் என்ற அமைப்பு எழுவதற்கு ஒரு அடிப்படையாக அமைந்தது எனலாம். ஆயர்களே பிற்கால அரசாட்சி முறைக்குக் காரணமாக இருந்தனர் என்பதை முல்லை நிலத்தில் பசுக்களை மேய்ப்பதற்கு உதவும் கருவியாகிய கோல் மக்களினத்தின் தலைவனுடைய ஆட்சிக்கு அறிகுறியாக அமைந்தது. அவன் ஏந்திய கோல் அவனுடைய குடிமக்கள் வணங்கும் கோலாக நின்றது”[27] என்று குறிப்பிடுகிறார். இதனால் நாகரிகம் முதன்முதலில் முல்லை நிலத்திலேயே தோன்றியது எனலாம். திருமால் மக்களைக் காப்பதனால் காக்கும் கடவுளாகவே இலக்கியங்களில் குறிப்பிடப் பெறுகிறார். அவரைக் கடவுளாகக் கொண்ட ஆயர்களும் தமது ஆநிரைகள் காப்பதில் முழுமையான ஈடுபாடு கொண்டவர்களாக இருந்தனர். என்பதை, “முல்லை நிலத்தில் வாழ்ந்த இம்மக்கள் தங்கள் ஆனிரைகளைப் பிறவுயிர்களால் தீங்குவராமல் அரணமைத்துக் காக்கும் தொழில் புரிந்து வந்த பயிற்சி வயத்தால் மக்களுள் தலைமையூண்டு அவர்களைக் காக்குந் தொழிலும் கைவரப் பெற்றனர் என்று அவர்கள் தலைமை பூண்ட செய்தியைக் குறிப்பிடுகிறார்.”[28]

ஆயர்களுக்கு மிகச் சிறந்த செல்வத்தை அளிக்கக்கூடிய தொழிலாக அமைந்தது ஆனிரைமேய்த்தலே ஆகும். அதனால்தான், “மாடு என்னும் சொல்லுக்குச் செல்வம் என்னும் பொருளும் உண்டாயிற்று”[29] என்று குறிப்பிடுகிறார்.

சங்க இலக்கியம் முல்லைத் திணையைக் குறிப்பிடும்போது தொல்காப்பியரின் கூற்றுப்படியே கார்காலத்தையும் மாலைப்பொழுதையும் இணைத்தே குறிப்பிடுகிறது. பெரும்பாலும் முல்லை, படவம், கோடல், கொன்றை போன்ற மலர்களாக அகநானூறு குறிப்பிடுகிறது. கண்ணன் ஆயர்குலத்தில் தோன்றியவன் என்பதை திவ்யப பிரபந்தத்தில் ஆண்டாள்,

கோமல, ஆயர் கொழுந்தே ... (நா.தி.பி., 531)

என்று குறிப்பிடுகிறார்.

முல்லை நிலத்தில், கார்காலத்தில் பெய்த மழையினால் செழுமையுற்று மலர்ந்த மலர்களின்மீது வண்டுகள் அமர்ந்து நுகர்ந்த செய்தியை

வண்பெயர்கு அவிழ்ந்த பைங்கொடி முல்லை
வீகமழ் நெடுவழி ஊது வண்டிரிய ...

(அகம்., 124)

என்று தலைவன் கூற்றாக அமைந்த பாடல் எடுத்துக்காட்டுகிறது. ஆனால் திவ்யப் பிரபந்தத்தில் ஆண்டாள் தன்னுடைய கூற்றாக அமைந்த பாடலில்,

போதலர் காவில் புதுமணம் நாறப் பொறிவண்டின் காமரம் கேட்டு ...

(நா.தி.பி., 547)

என்று வண்டுமலர்மீது அமர்ந்து இசைபாடும் செய்தியைக் குறிப்பிடுகிறார்.

மேற்கண்ட செய்திகளின் வாயிலாக சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள முல்லைநிலமானது அதற்குரிய முதற்பொருள் கருப்பொருள்களுடன் பக்தி இலக்கியமான நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெற்று திருமால் வழிபாட்டில் மிகச் சிறந்த வளர்ச்சியையுமடைந்தது என்பது விளங்கும்.

**அகத்திணை**

**தலைவன் கூற்று**

சங்க இலக்கியத்தில் தலைவன் கூற்று பல இடங்களில் காணப்படுகிறது. தலைவன் இயற்கைப் புணர்ச்சியில் இருந்து மீண்டவுடன் தலைவியின் நீங்கலருமைக் கூறும் இடத்தும், தோழியிடம் குறையுறவுரைக்குமிடத்தும், பிரிவாற்றாத தலைவியின் வேறுபாடு கண்டு தலைவன் உரைக்குமிடத்தும்,

*தலைவியின் மீது தான் கொண்டுள்ள அன்பை பாங்கனிடம் கூறுமிடத்தும். தலைவனுடைய கூற்றுக்கள் நிகழ்கின்றன என்று நாலாயிர திவ்யபிரபந்தம் கூறுகிறது.*

**தலைவன் தலைவியின் நீங்கலருமைக் கூறல்**

*இயற்கைப் புணர்ச்சியிலிருந்து மீண்ட தலைமகன் தோழியிடம் குறையிரந்து நிற்கிறான். அப்போது அவன் தலைவியிடம் தாம் கொண்டுள்ள அன்பைக் கூறி அவளது நீங்கலருமையை எடுத்துக்கூறுகிறான். சங்க இலக்கிய பாடல் ஒன்றில் தலைவன் தலைவியிடம் முருகனோடு வள்ளி சென்றதுபோல நீயும் எம்மோடு வந்து எம்சிறுகுடியில் தங்க வேண்டும் என்று கூறுகிறான் இதன் வாயிலாக தலைவன் கூறுகிற நீங்கலருமை புலப்படுகிறது. இதனை,*

நோயும் நெகிழ்ச்சியும் வீடச் சிறந்த
வேய்வனப்பு உற்ற தோளை நீயே
என்னுள் வருதியோ நல்நடைக் கொடிச்சி
முருகுபுணர்ந்து இயன்ற வள்ளி போலநின்
உருவுகண் எறிப்ப நோக்கலாற் றலனே ...

(நற்றி., 82)

*என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்யபிரபந்தம்,*

திண்பூஞ்சுடர் நுதி, நேமிஅஞ் செல்வர் விண்ணாடனைய
வண்பூமணிவல்லி ஆரேபிரிபவர்தளம்? இவையோ
கண்பூங்கமலம் கருஞ்சுடரடி வெண்முத்தரும்பி
வண்பூங்குவளை மடமான் விழிக்கின்ற மாயிதழே

(நா.தி.பி., 248)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது.*

**மதியுடம் படுக்கலுற்ற தலைவன் குறையுறவுரைத்தல்**

*தலைவியை அடையவேண்டும் என்பதற்காக தலைவன் அடையவேண்டும் என்பதற்காக தலைவன் தனது நிலையை தோழிக்கு உரைத்தல் குறையிரத்தல் ஆகும். இதனை சங்க இலக்கியம்,*

சுனைப்பூக் குற்றுத் தொடலை தைஇப்
புனக்கிளி கடியும் பூங்கட் பேதை

தானறிந் தனளோ இலளோ பானாட்
பள்ளி யானையி னுயிர்த்தென்
உள்ளம் பின்னுந் தன்னுழை யதுவே ...

(குறுந்., 142)

*என்ற பாடல் எடுத்தக் காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்யபிரபந்தம்,*

புனமோ? புனத்தயலே வழிபோகும் அருவினையேன்
மனமோ? மகளிர்? நுங்காவல் சொல்லீர்
புண்டரீகத்தங்கேழ்
வனமோரனைய கண்ணான் கண்ணன் வானாட
மரும் தெய்வத்
தினமோரனையீர்களாய் இவை யேநும் மியல்வுகளோ?

*என்றபாடல் எடுத்துக்காட்டுகிறது.*

**தலைவன் பாங்கன் உரையாடல்**

*இயற்கைப் புணர்ச்சியிலிருந்து மீண்டு வந்த தலைவனின் மாறுபாடுகளைக் கண்ட பாங்கன் காரணத்தை அறிகிறான். அதனால் தலைவனை நீ காமநோய் கொண்டு இவ்வாறு வருந்துவது பொருத்தமன்று என்று கூறி அவனைக் கடிந்துரைக்கிறான். இதனைக் கேட்ட தலைமகன் தான் கொண்டுள்ள நோய்க்கு மருந்து உன்னுடைய வேதத்திலும் இல்லை. அம்மருந்து தலைவியே என்று கூறி அவள்மீது தான் கொண்டுள்ள அன்பை விளக்குகிறான். இதனை,*

படிவ உண்டிப் பார்ப்பன மகனே
எழுதாக் கற்பினின்சொல் உள்ளும்
பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்
மருந்தும் உண்டோ மயலோ விதுவே ...

(குறுந்., 156)

*என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்யபிரபந்தம்,*

கற்றுப் பிணைமலர் (க்) கண்ணின் குலம் வென்று ஓரோகருமம்
உற்றுப் பயின்று செவியொடு உசாவி உலகமெலாம்
முற்றும் விழுங்கியுமிழ்ந்த பிரானார் திருவடிக்கீழ்
உற்றும் உறாதும் மிளிர்ந்த கண்ணாய் எம்மை யுண்கின்றவே

(நா.தி.பி., 2542)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது.*

**பிரிவாற்றாத தலைவியின் வேறுபாடுகண்டு தலைவன் உரைத்தல்**

*தலைவன் தன்னைப் பிரிந்ததால் தலைவிமிகுந்த துயருற்றாள் என்பதை அறிந்து தலைவன் துயரடைவான். சங்க இலக்கியத்தில் ஒரு பாடலில் இற்செறிப்பில் இருந்கின்ற தலைவியை நினைத்து தலைவன் தன்னுள்ளே கூறுகிறான். இதனை,*

பாவை அன்ன பலராய் வனப்பின்
தடமென் பணைத்தோள் மடமிகு குறுமகள்
சுணங்கணி வனமுலை முயங்கல் உள்ளி
மீன் கண் துஞ்சம் பொழுதும்
யான் கண் துஞ்சிலன் யாது கொல் நிலையே ...

(நற்., 319)

*என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. இதனை,*

அரியனயாம் இன்று காண்கின்றன கண்ணன் விண்ணனையாய்
பெரியனகாதம் பொருட்கோ பிரிவன ஆலெமெய்தற்கு
உரியன வொண் முத்தும் பைம்பொன்னுமேந்தி ஓரோ குடந்தைப்
பெரியன கெண்டைக்கும் இவையோ வந்து பேர்கின்றவே

(நா.தி.பி., 2488)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது.*

**தலைவன் தேர்ப்பாகன் உரையாடல்**

*தலைவன் வேந்தற்குற்றுழி பிரிவிலிருந்து மீண்டு வருகிறான். தன்னுடைய தலைவியின் நினைவு அவனுக்கு வருகிறது. தன்னைப் பிரிந்ததால் தலைவி அடைந்த துயரை நினைத்தும், தான் தலைவியிடம் செல்லும்போதும் ஏற்படுகின்ற மகிழ்வையும் நினைக்கிறான். தலைவிமீதுள்ள நினைவின் மிகுதியால் தனது தேரை ஓட்டிவருகின்ற தேர்ப்பாகனிடம் தேரை விரைந்து செலுத்துமாறு கூறுகின்றான். இதனை சங்க இலக்கியம்,*

அருள்கண் மாறலோ மாறுக - அந்தில்
அறன் அஞ்சலரே ஶி ஆயிழை! நமர் எனச்
சிறிய சொல்லிப் பெரிய புலப்பினும்
பனிபட நாசந்தார் குழைய நம்மொரு

துனிதிர் முயக்கம் பெற்றோள் போல

உவக்குநள் - வாழிய நெஞ்சே!...

(அகம்., 144)

என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்யபிரபந்தம்

ஒண்ணுதல் மாமை பொளிபயவாமை விரைந்து நந்தேர்

நண்ணுதல் வேண்டும் வலவ கடாகின்று தேன்நவின்ற

விண்முதல் நாயகன் நீள்முடி வெண்முத்தவாசிகைத்தாய்

மண்முதல் சேர்வுற்று அருவி செய்யா நிற்கும் மாமலைக்கே ...

(நா.தி.பி., 2527)

என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது.

**தலைவிகூற்று**

சங்க இலக்கியத்தில் தலைவி கூற்று நிகழும் இடங்கள் பரவலாகக் காணப்படினும் நாலாயிர திவ்யபிரபந்தத்திற்கும் பொருந்துமாறு சில கூற்றுக்கலே இருக்கின்றன. அவை தலைவனின் பிரிவாற்றாது வருந்துமிடத்தும், பிரிவின் போது தூது விடுமிடத்தும், பொருள் வயிற்பிரிந்த தலைவனை நினைத்து புலம்புமிடத்தும் குறித்த பருவத்தில் தலைவன் வாராமையால் வருந்துமிடத்தும், தலைவனைத் தேடிச் செல்ல நினைக்குமிடத்தும் தலைவி கூற்று நிகழ்த்துகிறாள். என்று திவ்யபிரபந்தம் எடுத்துக் காட்டுகிறது. இயற்கைப் புணர்ச்சியிலிருந்து மீண்ட தலைமகள் தலைவனை தோழியிடத்து நேரிடையாகக் கூறாமல் ~~கூறாமல்~~ குறிஞ்சிநிலத் தலைவனாக இருப்பின் மலைநாடன் என்றும் முல்லை, நெய்தல் நிலத் தலைவனாக இருப்பின் துறைவன் என்றும், மருதநிலத் தலைவனாக இருப்பின் ஊரன் என்றும் குறிப்பிடப் பட்டுள்ளது. அதேப் போல நாலாயிர திவ்யபிரபந்தத்தில் தலைவனைக் குறிப்பிடும்போது யமுனைத் துறைவன் என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. தலைவி அறத்தொடு நிற்கும் நிலை சங்க இலக்கியத்தில் காணப்படவில்லை. தோழியே அறத்தொடு நிற்பாள். ஆனால் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் தலைவி அறத்தொடு நிற்கின்றாள் என்று கூறப்படுகிறது. தலைவி தூதுவிடும் நிலை இரண்டிலும் பொதுவாகக் கூறப்படுகிறது.

**தனி உரையாடல்**

“அகத்திணைப் பாடல்கள் நூற்றுக்கு நூறு உளவியல் பற்றியவை. இதற்கு தலைவி என்னும் தலைமை மாந்தரே அடிப்படை ஆவாள். அவளது உணர்வுகளைச் சுற்றியே தலைவனின் எண்ணமும் பிற துணை மாந்தர்களின் எண்ணங்களும் படர்கின்றன. மாந்தரின் உணர்ச்சிகளும் அவற்றின் போராட்டமுமே அகப்பாடல்களின் கருவாகும். தலைவி தோழி என்ற இவ்விருவரின் கூற்றுக்களும் எல்லா நாடக மாந்தரின் பண்புகளையும் விளக்கும் சிறந்த உளவியல் பாடலாகும்”[30] என்று சங்க பாடல்களின் நாடகப் பாங்கினை எடுத்துக் கூறுகிறார்.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஆண்டாள் பாடிய திருப்பாவை உரையாடல் வடிவிலேயே அமைந்திருப்பதால் அதுவும் சங்க இலக்கியங்களைப் போலவே நாடகப் பாங்கு நிரம்பப் பெற்றுள்ளது எனலாம்.

**வேந்தற்குற்றுழி பிரிவு (தலைவி கூற்று)**

தலைவனது பிரிவை வகைப்படுத்தும்போது அரசனின் பொருட்டு போர்க்குச் செல்வது வேந்தர் குற்றுழி பிரிவு என்பர் தொல்காப்பியர். அவ்வகை பிரிவினை தலைவி கூறுவதை,

பொருபெரு வேந்தர்க்குப் போர்ப்புணையாகி
யொரு பெருங்காதலர் சென்றார் - வருவது
காணிய வம்மோ கனங்குழை கண்ணோக்கா
னணகர் முன்றின்மே னின்று...

என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்யபிரபந்தம்,

பேணமில்லா அரக்கர் முந்நீர் பெரும்பதிவாய்
நீள்நகர் நீளெரிவைத் தருளாயென்று நின்னை விண்ணோர்
தாள்நிலம் தோய்ந்து தொழுவர் நின் மூர்த்தியில்
கூற்றிலொன்று
காணலுமாங்கொல்? என்றே வைகல் மாலையும் காலையுமே
(நா.தி.பி., 2569)

என்ற பாடல் தலைவி கூற்றிலேயே அமைந்து எடுத்துக்காட்டுகிறது. தலைவன் பொருள்வயிற் பிரிதலைக் குறிப்பாலறிந்த தலைவி தோழிக்கு உரைத்தல்,

*தலைவன் பொருள்தேட முற்படுகிறான். அதனால் தலைவியை பிரியவேண்டிய சூழல் ஏற்படுகிறது. தலைவன் தலைவியிடம்தான் பொருள்தேடச் செல்லப்போவதை நேரிடையாகக் கூறினால் தலைவி வருத்தமுற்றுத் தடுப்பாளோ என்பதாலும் அவளிடம் நேரிடையாகக் கூறதுணிவில்லை யாதலாலும் அவளுடைய உயிர்த் தோழியிடம் அப்பொருப்பைக் கூறிவிடுகிறான், என்பதை சங்க இலக்கியம்,*

முனைபுலம் பெயர்த்த புல்லென் மன்றத்துப்
பெயலுற நெகிழ்ந்து வெயிலுறச் சாஅய்
வினையழி பாவையான் உலறி
மனை ஒழிந் திருத்தல் வல்லுவோர்க்கே ...

(அகம்., 157)

*என்ற பாடல் பிரிவுணர்த்திய தோழியிடம் தலைவி மறுமொழி கூறியதாக அமைந்துள்ளது. ஆனால் திவ்யபிரபந்தத்தில் தலைவன் பொருள் தேடச் செல்லுதலைக் குறிப்பால் அறிந்த தலைவி தோழிக்குக் கூறுவதாக,*

காண்கின்றனகளும் கேட்கின்றனகளும் காணில் இந்நாள்
பாண்குன்ற நாடர் பயில்கின்றன இதெல்லாம் அறிந்தோம்
மாண்குன்றமேந்தி தண்மாமலை வேங்கடத்து உம்பர்நம்பும்
சேண்குன்றம் சென்று பொருள் படைப்பான் கற்ற திண்ணனவே

(நா.தி.பி., 2485)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது.*

**தலைவி பிரிவாற்றாது வருந்திக் கூறல்**

*தலைவனைப் பிரிந்த தலைவி தலைவன் மீது கொண்டுள்ள அன்பினால் பிரிவாற்றாது வருத்துகிறாள். ஐந்திணைகளுள் முல்லையும், நெய்தலும் பாலையும் பிரிவைக் கூறினும் முல்லை தலைவி பிரிவாற்றாது வருந்துதலைக் கூறுகிறது. தலைவனைப் பிரிந்த தலைவியின் நிலையை, மாலைக்கு இரங்கல், என்று பலவகையாக எடுத்துக்காட்டுகிறது. சங்க இலக்கியம், அவ்வகையில்*

யாது செய் வாங்கொல் தோழிநோதக
நீரெதிர் கருவிய காரெதிர் கிளைமழை
ஊதையங் குளிரொடு போதுற்று மயங்கிய

கூதிர் உருவிற் கூற்றம்
காதலர்ப் பிரிந்த எற்குறித்து வருமே ...

(குறுந்., 197)

*என்ற பாடல் பருவம் கண்டும் வராமல் இருந்த தலைவனை நினைத்து தலைவி வருத்தமுறுவதைக் குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யபிரபந்தம்,*

தலைப்பெய்துயான் உன் திருவடிச்சூடும் தகைமையினால்
நிலைப் பெய்தவாக்கைக்கு நோற்ற இம்மாயமும் மாயம் செவ்வே
நிலைப்பெய்திலாத நிலைமையும் காண்தோறு அசுரர்குழாம்
தொலைப் பெய்த நேமிருயந்தாய்! தொல்லை யூழி சுருங்கலதே ...

(நா.பதி.பி., 2567)

*என்றபாடல் எடுத்துக்காட்டுகிறது.*

**இயற்பழித்த தோழிக்குத் தலைவி இயற்பட மொழிந்தது**

*பிரிவாற்றாளாகிய தலைவி பிரிவின் வருத்தத்தைப் புலம்புகிறாள். அதனைக் கேட்ட தோழி தலைவனை, அவன் நம்மை மறந்தான் என்றால் அவனது இயல்பு தவறுடையது என்று குறை கூறுகிறாள். அதனைக் கேட்ட தலைவி அவர் இப்போது பிரிந்து சென்றிருந்தாலும் குறித்த பருவத்தில் வந்துவிடுவார் என்று தலைவனை நல்லியல்பு உடையவனாகக் கூறல் தலைவி இயற்பட மொழிதலாகும்.*

பகல் தீ வேட்ட ஞாட்பினு மிகப்பெரி
தலருரழச் சென்றன ராயினு மலர்கவிழ்ந்து
மாமட லவிழ்ந்த காந்தளஞ் சாரலின்
ஞால் வாய்க் களிறு பாந்தட் பட்டெனத்
துஞ்சாத் துயரத் தஞ்சு் பிடிப்பூசல்
நெடுவரை விடரகத் தியம்புங்
கடுமான் புல்லிய காடிறந்தோரே ...

(நற்றி., 140)

*என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. இதனை திவ்ய பிரபந்தம்,*

வண்ணம் சிவந்துள வானாட மரும் குளிர்விழிய
தண்மென் கமலத்தடம்போல் பொலிந்தன தாமிவையோ

கண்ணன் திருமால் திருமுகந்தன் னொடும் காதல் செய்தேற்கு
எண்ணம் புகுந்து அடியேனொடு இக்கால மிருக்கின்றதே
(நா.தி.பி., 2540)

*என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது.*

**தலைவி தலைவனைத் தேடிப் போக விரும்புதல்**

*கார் காலத்தில் திரும்பி வருவேன் என்று கூறிய தலைவன் குறித்த பருவம் வந்தும் திரும்பிவாராமையால் துயருற்ற தலைவி தோழியிடம்தான் தலைவனைத் தேடிச் செல்ல விரும்புகிறேன் என்று கூறுகிறாள். இதனை சங்க இலக்கியம்,*

நெறிபடு கவலை நிரம்பா நீளிடை
வெள்ளி வீதியைப் போல நன்றும்
செலவு அயர்ந்திசினால் யானே பலபுலந்து
உண்ணா உயக்கமொடு உயிர்செலச்சாஅய் ...
(அகம்., 147)

*என்ற பாடல் விளக்குகிறது. இதனை நாலாயிர திவ்ய பிரபந்தம், தாய் கூற்றல்,*

மூவரில் முன் முதல்வன் முழுங்கார் கடலுள் கிடந்து
பூவலருந்தி தன்னுள் புவனம் படைத்துண்டுமிழ்ந்த
தேவர்கள் நாயகனைத் திருமாலிருஞ்சோலை நின்ற
கோவலர் கோவிந்தனைக் கொடியேரிடை கூருங்கொலோ?
(நா.தி.பி., 1828)

*என்ற பாடல் தலைவனை நாடிச் சென்ற தலைவியை நினைத்து புலம்புவதாக பாடப்பட்டுள்ளது.*

**தோழிகூற்று**

*சங்க இலக்கியத்தில் தோழி கூற்று நிரம்ப இடம்பெற்றுள்ளது. ஆனால் நாலாயிர திவ்யபிரபந்தத்தில் மிகக் குறைந்த அளவிலேயே தோழி கூற்று இடம்பெற்றுள்ளது. அவ்வாறு இடம்பெற்றுள்ள இடங்கள், இயற்கைப் புணர்ச்சியிலிருந்து மீண்ட தலைவியின் வேறுபாடு கண்ட தோழி வியந்துரைக்குமிடத்தும், கார்காலம் வந்தும் தலைவன் வாராமையால் நலிந்த தலைவியை தேற்றுமிடத்தும், தலைவரை வரைவுகடாதல் கூறுமிடத்தும்,*

தோழிதலைவனை நகையாடும் இடத்தும், தலைவனுக்கு நகர் காட்டும் இடத்தும், தலைவியின் ஆற்றாமை கண்ட தோழிதலைவனை வெறுத்துரைக்கும் இடத்தும், கூடலிழைத்து வருந்தும் தலைவி நிலையைப் பாங்கி தலைவற்கு உரைக்குமிடத்தும், தலைவனது பெருமையைத் தலைவிக்கு உரைக்குமிடத்தும் தலைவியின் ஆற்றாமையைத் தோழி தலைவனுக்குக் கூறுமிடத்தும் கூற்றுக்கள் நிகழ்கின்றன. தோழியை பாங்கி என்று சங்க இலக்கியத்தில் கலித்தொகை மட்டும் குறிப்பிடுகிறது. ஆனால் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் பாங்கி என்றும் தோழி என்றும் இருபெயர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தைப் போலவே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இசைக்கருவிகள் குறிப்பிடப் பெற்றுள்ளன. சங்க கால பாணர்களைப் போலவே திவ்யப்பிரபந்தகாலத்திலும் பாணர் இருந்ததாகவும் அவர் (திருமாலைக் குறித்து) திருவரங்கப் பெருமாளைக் குறித்து பாடியதாகவும் வரலாறு குறிப்பிடுகிறது. அதனாலேயே அவருக்கு "திருப்பாணாழ்வார்" என்ற சிறப்புப் பெயரும் வழங்கப்பட்டது.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஏழிசையின் இன்பத்தையும், இறைவழிப்பாட்டின்போது அவர்கள் இசைத்த இசைக் கருவிகளின் குறிப்பும் காணப்படுகிறது.

**தலைவியின் வேறுபாடுகண்ட தோழி கூற்று**

இயற்கைப் புணர்ச்சியில் ஈடுபட்ட தலைவியனது மாறுபாட்டைக் கண்ட தோழி அம்மாறுபாடுகளை மறைக்குமாறு தலைவியிடம் கூறுகிறாள். இயற்கைப் புணர்ச்சியில் தலைவி ஈடுபட்டது தோழிக்குத் தெரியாதாயினும் தோழி ஆராய்ந்து அறிகிறாள்.

ஏனல் காவலர் மாவீழ்த்துப் பறித்த
பகழியன்ன சேயரி மழைக் கண்
நல்ல பெருந்தோளோயே கொல்லன்
எறிபொற் பிதிரிற் சிறுபல் காய
வேங்கை வீயுகு மோங்குமலைக் கட்சி

மயிலறி பறியா மன்னோ

பயில் குரல் கவரும் பைம்புறக்கிளியே

(நற்., 13)

*என்ற பாடல் தலைவியின் வேறுபாட்டை எடுத்துரைக்கிறது. இதனை நாலாயிர திவ்ய பிரபந்தம்,*

செழுநீர்த்தடத்துக் கயல் மிளிர்ந்தாலொப்ப சேயரிக்கண்

அழுநீர் துளும்ப அலமருகின்றன வாழியரோ

முழுநீர் முகில் வண்ணன் கண்ணன் விண்ணாட்டவர் மூதுவராம்

தொழுநீரிணையடிக்கே அன்பு சூட்டிய சூழ்குழற்கே ...

(நா.தி.பி., 2479)

*என்று பாடல் எடுத்துக்காட்டுகிறது.*

**நகர் காட்டல்**

*சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படுகின்ற நகர் காட்டல் என்பது திவ்ய பிரபந்தத்திலும் பின்பற்றப்பட்டுள்ளது. தோழி குறையிரந்து நின்ற தலைவனுக்குத் தலைவியின் இல்லம் இருக்கின்ற நகரைக் காட்டுதல், நகர் காட்டல் எனப்படும். இதனை சங்க இலக்கியம்,*

இவளே நின் சொற்கொண்ட என் சொல் தேதி

பசுநனை ஞாழற் பல்சிணை ஒருசிறைப்

புதுநலன் இழந்த புலம்புமார் உடையள்

உதுக்காண் தெய்ய உள்ளல் வேண்டும்

நிலவும் இருளும் போலப் புலவுத்திரைக்

கடலும் காணலுந் தோன்றும்

மடல் தாழ் பெண்ணை யெம் சிறு நல்லூரே ...

(குறுந்., 81)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்ய பிரபந்தம்,*

நானிலம் வாய்க்கொண்டு நன்னீரற மென்று கோதுகொண்ட

வேனிலஞ் செல்வன் சுவைத்துமிழ்யிலை கடந்த பொன்னே

கால்நிலந்தோய்ந்து விண்ணோர் தொழும் கண்ணன் வெ.்.காவுது அம்பூந்

தேனிளஞ்சோலை அப்பாலது எப்பாலைக்கும் சேமத்ததே ...

(நா.தி.பி., 2503)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**கூடலிழைத்து வருந்தும் தலைவியின் நிலையை தோழி தலைவனுக்குக் கூறல்**

*இரவுக் குறியில் வந்த தலைவனது செய்கையால் தலைவிமாறுபாடு அடைகிறாள். அவள் வருந்துகின்ற நிலையை தோழி தலைவனுக்கு எடுத்துக்கூறி விரைவில் மணம் புரிந்துகொள்ளத் தூண்டுகிறாள்.*

அறுகாற் பறவை அளவில மொய்த்தலிற்
கண்கோளாக நோக்கிப் பண்டும்
இணையை யோவென வினவினள் யாயே
அதனெதிர் சொல்லாளாகி அல்லாந்து
என்முக நோக்கி யோளே அன்னாய்
யாங்குணர்ந் துய்குவள் கொல்லென மருத்த
சாந்த ஞெகிழி காட்டி
ஈங்கா யினவால் என்றிசின் யானே ...

(நற்., 55)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்ய பிரபந்தம்,*

சிதைக்கின்ற தாழி என்று ஆழியைச் சீறி தன் சீறடியால்
உதைக்கின்ற நாயகந் தன்னெடுமாலே! உனது தண்தார்
ததைக்கின்ற தண்ணந்துழா யணிவான் அதுவே மனமாய்ப்
பதைக்கின்ற மாதின்திறத்து அறியேன் செயற்பாலதுவே ...

(நா.தி.பி., 2511)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது.*

**ஏறுகோல் கூறி தோழி வரைவுகடாதல்**

*இரவுக்குறியில் வந்து மீளுகின்ற தலைவனை தோழி சந்தித்து தலைவியின் வருத்தநிலையை எடுத்துக் கூறி அவளை வரைந்து கொள்வதற்கு துணை செய்கிறாள். இதனை ஏறுகோள் கூறிவரைவு கடாதல் என்பர். இந்நிலை சங்க இலக்கியத்தில்,*

வேரல் வேலி வேர்க் கோட்பலவின்
சாரல் நாட செவ்வியை ஆகுமதி
யார.்.தறிந்திசினோரே சாரல்
சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கிவள்

உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே...

(குறுந்., 18)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. இச்செய்தி நாலாயிர திவ்ய பிரபந்தத்தில்,*

சூட்டுநன் மாலைகள் தூயன வேந்தி விண்ணோர்கள் நன்னீர்
ஆட்டி அந்தூபம் தராநிற்கவே அங்கு ஓர்மாமையினால்
ஈட்டிய வெண்ணெய் தொடுவுண்ணப்போந்தி மிலேற்றுவன்கூன்
கோட்டிடையாடினை கூத்து அடலாயர் தம் கொம்பினுக்கே

(நா.தி.பி., 2498)

*என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது.*

## கார்கண்டு ஆற்றாளாய் தலைவியின் ஆற்றாமை கண்டு தோழி இரங்குதல்

*தலைவன் கார்காலத்து மீண்டு வருவேன் என்று கூறி பிரிந்து செல்கின்றான். கார்காலம் வந்தது. பருவம் வந்தும் தலைவன் வாராமையால் தலைவி பிரிவுத்துயரால் நலமிழந்து வருந்துகிறாள். அவளது வருத்தத்தைக் கண்ட தோழி இது கார்காலம் அல்ல (பருவம் அல்ல) தலைவன் குறித்த பருவத்தில் வந்துவிடுவார். அதனால் அதுவரையில் பிரிவை ஆற்றியிரு என்று கூறுவதை சங்க இலக்கியம்,*

இதுவோ என்றசின் மடந்தை மதியின்று
மறந்துகடல் முகந்தே கமஞ்சூல் மாமழை
பொறுத்தல் செல்லாது இறுத்த வண்பையல்
காரென்று அயர்ந்த உள்ளமொரு தேர்வில
பிடிவுங் கொன்றையுங் கோடலும்
மடவ வாகலின் மலர்ந்தன பலவே ...

(நற்., 99)

*என்ற பாடலின் கருத்து நாலாயிர திவ்ய பிரபந்தத்திலும் தோழி கூற்றாகவே,*

கடல் கொண்டு எழுந்தது வானம் அவ்வானத்தை யன்றிச் சென்று
கடல் கொண்டொழிந்தவதனால் இது கண்ணன் மண்ணும் விண்ணும்
கடல் கொண்டெழுந்த அக்காலங்கொளோ? புயற் காலங்கொலோ?
கடல் கொண்ட கண்ணீர் அருவி செய்யா நிற்கும்மலையே

(நா.தி.பி., 2495)

*என்று எடுத்துக்காட்டுகிறார்.*

**தலைவியின் ஆற்றாமைக் கண்ட தோழி தலைவனை வெறுத்துரைத்தல்**

*பிரிவால் வருந்திய தலைவியின் உடல், மனநிலையை தோழி தலைவனுக்கு எடுத்துரைத்தல் இயல்பு. அவற்றிலும் தலைவியின் நிலையால் வெகுண்ட தோழி தலைவனை இகழ்ந்தும் கூறுவாள். இயற் பழித்தல் என்பது "மனத்தில் கனிவுடனும் சொல்லில் கடுமையை வெளியிடும் சொற்களைக் கூறுதல் செங்கடுமொழி என்பர். அகப்பொருள் இலக்கணம் இதனை இயற்பழித்து மொழிதல் என்று பெயர்சுட்டும். சங்க இலக்கியம் இதனை,*

பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
வரிவெண்டாலி வலை செத்து வெரூஉம்
மெல்லம் புலம்பற்றேறி
நல்ல வாயின நல்லோள் கண்ணே ...

(ஐங்., 166)

*என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்ய பிரபந்தம்,*

அருளார் திருச்சக்கரத்தால் அகல் விசும்பும் நிலனும்
இருளார் வினைகெடச் செங்கோல் நடாவுதிர் ஈங்கோர் பெண்பால்
பொருளோவெனும் இகழ்வோ? இவற்றின் புறத்தாளென்றெண்ணோ?
தெருளோம் அரவணையீர் இவள் மானம் சிதைக்கின்றதே

(நா.தி.பி., 2510)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது.*

**தோழி தலைவனது பெருமையைக் கூறி ஆற்றுவித்தல்**

*பிரிவாற்றாது வருந்துகிற தலைமகளிடம் தோழி தலைவனது சிறப்புகளையெல்லாம் கூறி, தலைவன் செல்கின்ற இடங்களில் எல்லாம் பார்க்கின்ற காட்சிகளும் நமது நினைவையே ஏற்படுத்தும் என்று கூறி அவளை ஆற்றுவிக்கிறாள் சங்க இலக்கியத்தில்,*

பண்ணழிபழம்பார் வெண்குருகு ஈனும்
தண்ணந் துறைவன் முன்னாள் நம்மொரு
பாசடைக் கலித்த கணைக்கால் நெய்தல்
பூவுடன் நெறிதரு தொடலை தைஇக்
கண்ணறிவு உடைமை அல்லது நுண்வினை

இழையணி அல்குல் விழவாடு மகளிர்
முழங்குதிரை இன்சீர் தூங்கும்
அழுக்கல் மூதூர் அறிந்தன்றோ இன்றே

(நற்., 138)

என்ற பாடல் தலைவன் சிறைப்புறத்தானாக தோழி தலைவிக்குக் கூறுகிறாள். இப்பாடலில், முன்பு உனக்கு தலைவன் மாலைசூட்டியதை ஊர் கண்டுவிட்டது. அதனால் தலைமகன் உன்னை விரைவில் திருமணம் புரிந்து கொள்வான் அதுவரையிலும் பிரிவை நீ ஆற்றியிருக்க வேண்டும் என்று தலைவியிடம் கூறுகிறாள். இதேக் கருத்தமைந்த பாடல் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில்,

கழல் தலமொன்றே நிலமுழுதாயிற்று ஒருகழல் போய்
நிழல்தர எல்லாவிசும்பும் நிறைந்தது நீண்டவண்டத்து
உழறலர் ஞானச்சுடர் விளக்காய் உயர்ந்தோரையில்லா
அழறலர் தாமரைக் கண்ணன் என்னோ இங்கு அளக்கின்றதே

(நா.தி.பி., 2535)

என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது.

**செவிலி கூற்று**

சங்க இலக்கியத்தில் செவிலி கூற்று என்பது மிகச் சில இடங்களிலேயே காணப்படுகிறது. செவிலி என்பவள் நற்றாயின் தோழி என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது. அத்தகைய சிறப்புப் பெற்ற செவிலி நாலாயிர திவ்ய பிரபந்த காலத்தில் ஓர் உயர்ந்த இடத்தில் இருக்கின்றாள். சங்க இலக்கியத்தில் தோழிபெற்ற இடத்தை நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் செவிலி பெற்றாள் என்றே கூறலாம். சங்க பாடல்களில் செவிலி தலைவனிடம் தலைவி பிரிவால் அடைந்த துயரைக் கூறுவதாகப் பாடல்கள் இல்லை. ஆனால் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் செவிலி தலைவனிடம் முறையிடுவதாக பாடல்கள் அமைந்துள்ளன. செவிலி கூற்றைப் பொறுத்தவரை சங்க காலத்திலிருந்து திவ்ய பிரபந்த காலம் வளர்ச்சியடைந்தது என்று கூறலாம். சங்க இலக்கியத்தில் செவிலி அறத்தொடு நிற்கும் இடத்திலும், தலைவனுடன் போகிய தலைவியை நினைத்து புலம்புமிடத்தும், உடன் போக்கிற் சென்ற தலைவியை நிலைத்து சுரத்தருமைக் கூறி புலம்புமிடத்தும் செவிலி கூற்று நிகழ்த்துகிறாள் ஆனால்

*இந்நிலை திவ்யபிரபந்தத்தில் வளர்ச்சியடைந்து காணப்படுகிறது. நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் செவிலி என்று கூறாமல் தாய் என்றே கூறப்பட்டுள்ளது.*

**சங்க இலக்கியத்தில் செவிலி கூற்றில் அமைந்த பாடல்கள்**

**தலைவனுடன் சென்ற தலைவியை நினைத்து புலம்பல்**

*இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர்த் தலைவனுடன் தலைவி உடன்போகிறாள். தலைவியின் பிரிவை நினைத்தும், அவளைத் தேடிச் சென்று பாலைநிலத்தில் வருத்தமுற்றும் செவிலி கூறுவதாக,*

காலே பரிதப் பினவே கண்ணே
நோக்கி நோக்கி வாளிழந்தனவே
அகலிரு விசும்பின் மீனினும்
பலரே மன்றவிவ் வுலகத்துப் பிறரே ...

(குறுந்., 44)

*என்ற பாடல் குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யபிரபந்தம்,*

ஒருமகள் தன்னையுடையேன் உலகம் நிறைந்த புகழால்
திருமகள் போல வளர்த்தேன் செங்கண்மால்தான்
கொண்டுபோனான்
பெருமகளாய்க்குடி வாழ்ந்து பெரும் பிள்ளை பெற்ற அசோதை
மருமகளைக் கண்டு கந்து மணாட்டுப்புறம் செய்யுங்கொலோ?

(நா.தி.பி., 300)

*என்ற பாடல் தலைவனுடன் போகிய தலைவியை நினைத்துப் புலம்புவதாக அமைந்துள்ளது.*

**சுரத்தருமைக் கூறி இரங்குதல்**

*தலைவி தலைவனுடன் சென்றதையறிந்த செவிலி அவள் போகின்ற பாலை நிலத்துக் கொடுமையைக் கூறி வருந்துகிறாள், இதனை சங்க இலக்கியம்,*

ஞாயிறு காயாது மரநிழற் பட்டு
மலைமுதற் சிறுநெறி மணன் மிகத்தாஅய்த்
தண்மழை தலையின் றாக நந்நீத்துச்
சுடர் வாய் நெடுவேற் காளையொடு

மடமா அரிவை போகிய சுரனே ...

(குறுந்., 378)

என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்யபிரபந்தம்,

கொடுங்கால் சிலையர் நிரைகோளுழவர் கொலையில் வெய்ய
கடுங்காலிளைஞர் துடிபடும் கவ்வைத்து அருவின்யேன்
நெடுங்காலமும் கண்ணன் நீள்மலர்ப்பாதம் பரவிப் பெற்ற
தொடுங் காலொசியுமிடை இளமான் சென்ற ஆழ்கடமே

(நா.தி.பி., 2514)

என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது.

**கண்டோர் கூற்று**

தலைவனும் தலைவியும் உடன் போக்குச் சென்றவுடன், அவர்களை செவிலித்தாய் தேடிச் செல்கிறாள். அப்போது எதிர்ப்பட்டோர்களைச் செவிலி தனது மகளையும், அவளுடன் காளை போன்ற ஒரு தலைவனும் சென்றதைப் பார்த்தீர்களா? என்று கேட்கும்போது அவர்கள் கூற்று நிகழ்த்துவார்கள். இது சங்க இலக்கியம் போன்றே திவ்யப் பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளது. கண்டோர் கூற்றினை சங்க இலக்கியம்,

இவனிவுளைம்பால் பற்றவும் இவளிவன்
புன்றல் யோரி வாங்குநள் பரியவும்
காதற் செவிலியர் தவிர்ப்பவுந் தவிரா
தேதில் சிறுசெரு வுறுப மன்னோ
நல்லி மன்றம்ம பாலே மெல்லியல்
துணை மலர்ப் பிணைய லன்ன விவர்
மணமகிழ் இயற்கை காட்டியோயே ...

(குறுந்., 229)

என்ற பாடல் தலைவன் தலைவி இருவரும் சிறுவயது முதலே விளையாடினர் இப்போது இவர்கள் அன்பு முதிர்ந்த தலைவனும் தலைவியும் ஆகி செல்கின்றனர் என்று கூறுவதாக அப்பாடல் அமைந்துள்ளது. நாலாயிர திவ்யபிரபந்தத்தில் கண்டோர்கூற்று திருமாலைமட்டும் கண்டவர்கள் கூறும் கூற்றாக அமைந்துள்ளாது.

## 2. புறத்திணை

புறம் என்பது வீரத்தை அடிப்படையாகக் கொண்டது. மனிதன் செய்யக் கூடிய செயல்கள் மற்றவர் அறியக் கூடியதாக இருக்கும்போது அது புறமாகிறது. மேலும் புறம் என்ன என்பதை "அறஞ்செய்தலும் மறஞ் செய்தலும் மற்றவர்க்குப் புலனாதலின் புறமென்றார்" இளம்பூரணர். இத்தகைய புறச்செய்திகள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ளன. மன்னர்களை வாழ்த்துவதாகவும் அவர்களின் வீரம். ஈகை கொடை பற்றியும் அவர்களின் ஆட்சி சிறப்புப் பற்றியும் புறநானூறும், பதிற்றுப்பத்தும், சில ஆற்றுப்படை நூல்களும் எடுத்துக் காட்டுகின்றன. அதைப் போன்ற சில புறப்பொருள் கருத்துக்கள் நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளன. "ஒருவனுடைய ஒழுக்கம், வீரம், புகழ், கொடை முதலியவற்றைப் புகழ்ந்து பாடுவது பாடாண் திணை தெய்வங்களின் மேற் பாடுவதும் பாடாண் திணையுள் அடங்கும்"[31] என்று சங்க இலக்கியத்தில் தெய்வங்கள் வைத்துப் பாடப்படும் நிலை குறிக்கப்பட்டுள்ளது.

### ஆநிரைக் கவர்தல்

### வெட்சித்திணை

சங்க இலக்கியத்தில் போருக்கு முதல் காரணமே ஒரு நாட்டு ஆநிரைகளை வேற்றுநாட்டரசன் கவர்ந்து போதலே ஆகும். அவ்வாறு கவர்ந்த ஆநிரைகளை மீட்பதும் ஆகிய செய்திகளைக் கூறுவது வெட்சி முதல் ஏழுதிணைகள் ஆகும். "அரசனின் ஆணைவழி நின்ற தானைத்தலைவர் பகைப்புலத்துச் சென்று பகைவர்களின் ஆனிரைகளைக் களவினால் கொண்டு வந்து பாதுகாப்பது வெட்சித்திணையின் பொது இலக்கணமாகும்."[32] மீட்டல் என்பது கரந்தைத் திணைக்கு உரியதாகும். ஆநிரையை மீட்டல் என்ற பொருளில்,

இன்னிசை கேட்ட துன்னரு மறவர்
வென்றிதரு வேட்கையர் மன்றங் கொண்மார்
பேரமருழந்த வெருவரு படற்ந்தலை
விழுநவி பாய்ந்த மரத்தின்

வாண்மிசைக் கிடந்த வாண்மையோன் றிறத்தே

(புறம்., 270)

என்ற பாடல் தலைவனின் வீரச்சிறப்பையும், மீட்டல் நிலையையும் கண்டோர் கூறுவதாக பாடப்பட்டுள்ளது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஆநிரை கவர்தல் என்பது, கண்ணன் கோகுலத்தில் ஆநிரை மேய்த்துக் கொண்டு இருக்கும்போது கல்மழை பெய்கிறது. அந்த கல்மழையிலிருந்து அவைகளைக் காப்பதற்காக கோவர்த்தன மலையைக் குடையாக பிடிக்கிறான் இது,

மேய்நிரைகிழ்புக மாபுரள-சுனை
வாய்நிறைநீர் பிளிற்ச் சொரிய இன
ஆநிரைப்பாடி அங்கே யொடுங்க அப்பன்
தீம ழைகாத்துக் குன்ற மெடுத்தானே

(நா.தி.பி., 3379)

என்று பாடப்பட்டுள்ளது. இது அழிவிலிருந்து ஆநிரையை மீட்டல் என்ற புறத்திணைக் கூறுக்கு ஏற்றதாக அமைந்துள்ளது.

சங்க இலக்கிய புறப்பாடல்கள் பெரும்பாலும் அரசனையே தலைவனாகக் கொண்டு பாடப்பட்டுள்ளன. ஆனால் பரிபாடல் எழுந்த காலத்தில் மன்னனை விட்டு இறைவனைத் தலைவனாகக் கொண்ட பாடல்கள் இயற்றப்பட்டன. இருந்தபோதிலும் சங்ககால புறத்திணைப் பாடல்கள் பெரும்பாலும் மன்னனை இறைவனுடன் ஒப்பிட்டு பாடியுள்ளமையை அறியலாம். நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் மன்னனை விட்டு இறைவனைத் தலைவனாகக் கொண்டு பாடல்கள் பாடிய முறை காணப்பட்டாலும் அவர்கள் மன்னனையேத் திருமாலாக நினைத்ததை,

திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேனே

என்று பாடுவதிலிருந்து அறியலாம்.

**காத்தல்**

தன்னுடைய குடிமக்களை அவர்கள் தேவைகளை நிறைவேற்றும் வகையில் காப்பதுவும், செங்கோல் வளையாமல் சிறந்த முறையில் ஆட்சி செய்வதுவும் ஒரு அரசனின் கடமையாகும். அரசன் குடிகளைக் காத்த நிலையை

நளியிரு முந்நீர் நாவா யோட்டி
வளிதொழி லாண்ட வுரவோன் மருக
களியியல் யானைக் கரிகால் வளவ

(புறம்., 66)

என்ற பாடல் விளக்குவதைப் போன்றே நாளாயிர திவ்யப் பிரபந்தமும்

பேய் இருக்கும் நெடுவெள்ளம் பெருவிசும்பின்மீது
ஓடிப் பெருகு காலம்
தாய் இருக்கும் வண்ணமே உம்மைத் தன்
வயிற்று இருத்தி உய்யக் கொண்டான்

(நா.தி.பி., 2007)

என்று எடுத்துக்காட்டுகிறது. இவ்வாறு சங்க இலக்கியத்தில் மன்னன் காத்தல் தொழிலைச் செய்தான் என்பது பக்தி இலக்கிய காலமான நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் திருமால் செய்ததாகக் குறிப்பிடப்படுகிறது.

**பூவைநிலைத் துறை**

சங்க இலக்கியத்தில் திருமாலை வாழ்த்திப் பாடுதல் பூவை நிலைத் துறை எனப்படும். "இந்த பூவை நிலைத்துறை அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாய் வரும் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்வகையில் சங்க இலக்கியத்துள் இடம்பெற்றுள்ள பல பாடல்களின் திருமால் காக்கும் கடவுளாகவும், பகைவர்களை அழிப்பவனாகவும் மன்னனுக்கு நிகராகப் போற்றப்படுகிறான். ஆனால் திவ்யப் பிரபந்தத்தில் திருமால் காக்கும் கடவுளாகவும், அசுரர்களை அழிப்பவனாகவும் இருந்தும் அவன் மன்னனை விட உயர்ந்தவனாகவும் மன்னனையே காக்கும் கடவுளாகவும் போற்றப்படுகிறான்.

**கொடி**

சங்ககால மன்னர்களுக்கு ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக, கொடியும், மாலையும், படையும் குறிப்பிட்டிருப்பதைப் போன்று திருமாலுக்கும் தனிக் கொடியும், மாலையும், படையும் குறிப்பிடப் பட்டுள்ளது. சோழனுக்குப் புலிகொடியும், பாண்டியனுக்கு மீன்கொடியும்,

சேரனுக்கு விற் கொடியும் இருப்பது போன்றே திருமாலுக்கு கருடகொடி குறிப்பிடப்பட்டுள்ளது. திருமால் கருடக் கொடியுடையவன் என்ற செய்தி.

இவ்வும் உவ்வும் அவ்வும் பிறவும்
ஏம மார்ந்தநிற பிரிந்து
மேவல் சான்றன வெல்லாம்
சேவ லோங் குயர் கொடியோயே

(பரி., 4, 33-36)

இடம் பெற்றுள்ளது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் திருமால் கருடக் கொடி உடையவனாகவே,

பையுடை நாகப்பகைக் கொடியானுக்குப் பல்லாண்டு கூறவனே

(நா.தி.பி., 8)

என்றும்,

கருளக் கொடி யொன்றுடையீர்! தனிப்பாகீர்

(நா.தி.பி., 1924)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

**மாலை**

சங்ககால மன்னர்கள் அவரவர்களுக்குரிய மாலைகளை அணிந்து உள்ளனர். சேரன், சோழ, பாண்டியர்கள், பனம்பூமாலையும், அத்திமாலையும் வேப்பம்பூ மாலையும் அணிந்திருந்தனர் என்ற செய்தி பாடல்களின் வாயிலாக அறியமுடிகிறது. அதுப்போல திவ்யப் பிரபந்தத்தில் திருமால் துளசிமாலை அணிந்தவனாகக் குறிப்பிடப்படுகிறான் பதிற்றுப் பத்திலும் திருமால் துழாய் மாலை அணிந்தவனாக,

தெள்ளுயர் வடிமணி யெறியுநர் கல்லென
உண்ணாப் பைந்நிலம் பனித்துறை மண்ணி
வண்டூடு பொலிதார்த் திருநெமர கலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ் குரற் துழாஅய்
அலங்கற் செல்வன் சேவடி பரவி
நெஞ்சுமலி யுவகையர் துஞ்சுபதிப் பெயர

(ப.ப., 5-10)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. நாலாயிர திவ்யப் பிரபந்தமும் இதே கருத்தினை

தூய்மை யோக மாயினாய்! துழாயலங்கல் மாலையாய்!
ஆமையாகி ஆழிகடல் துயின்ற ஆதிதேவ நின்
நாமதேயம் இன்னதென்ன வல்லமல்ல வாகிலும்
சாமவேத கீதனாய சக்ரபரணி யல்லையே

(நா.தி.பி., 765)

என்று எடுத்துக் காட்டுகிறது.

**படை**

சங்ககால மன்னர்களுக்குத் தனிப்படை இருந்தது போலவே திருமாலுக்கும் படை இருந்திருக்கிறது. திருமால் தன்னுடைய கைகளில் சங்கும், சக்கரமும் ஏந்தியிருக்கிறான் என்று பரிபாடல் கூறும் கருத்து திவ்ய பிரபந்தத்திலும் இடம் பெற்றுள்ளது.

வள்ளுரு நேமியான் வாய்வைத்த வளைபோலத்
தெள்ளிதின் விளங்கும் கரிநெற்றிக் காரியும்

(கலி., 105)

என்று கூறுவது.

கருமுகில் போல்வது ஓர்மேனி, கையள ஆழியும் சங்கும்

(நா.தி.பி., 1176)

என்று இடம்பெற்றுள்ளது. அது தவிரவும் திருமால் ஒண்தண்டு வாள்வில் போன்ற ஐம்படைகளை வைத்துக்கொண்டுள்ளதாக ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ளனர்.

**கழல் அணிதல்**

சங்க கால மன்னனும் வீரர்களும் தங்கள் கால்களுக்கு வீரக் கழல் அணிந்த செய்தி,

கையதுவேலே காலன புன்கழல்

(புறம்., 100)

என்று குறிப்பிட்டுள்ளது. திருமாலும் தன் கால்களின் கழல் அணிந்துள்ளதாகவும் அதனை வணங்க அழைப்பதாகவும் ஆழ்வார்கள்,

கழல் தொழுதும் வா நெஞ்சே

(நா.தி.பி., 2288)

.என்று குறிப்பிட்டுள்ளனர்.

**பகைவனை அழித்தல்**

சங்க கால மக்கள் வீரத்தையும், காதலையும் இருக்கண்களாக போற்றினர். அவர்களது வீரத்திற்கு அடிப்படையாக சில விளையாட்டு நிகழ்ச்சிகளும் நடப்பதுண்டு. அவர்கள் தங்களுடைய வீரத்தை நிலைநாட்டுவதற்காக பகைமன்னர்களுடன் அவ்வப்போது போரிட்டு வெற்றிபெறுவர். மகளிரும் வீரமிக்கவர்களாகவும், வீரத்தை மதிப்பவர்களாகவும் இருந்தனர் என்பதை மூதின் முல்லைத் துறை விளக்குகிறது. கரிகால் பெருவளத்தான் தன்னை அண்டியவர்களுக்கு நிலவு போன்று குளிர்ந்தவனாகவும் தன் பகைவர்களுக்கு சூரியன் போன்று சுட்டெரிப்பவனாகவும் சுட்டப்படுகிறான். அதேப்போன்று திருமாலும் தம் பகைவர்களாகிய அரக்கர்களை அழித்ததை சங்க இலக்கியம் எடுத்துக்காட்டுவதைப் போலவே நாலாயிர திவ்யப் பிரபந்தமும் எடுத்துக்காட்டுகிறது.

சங்க கால ஆடவர்கள் வீரத்தோடு இருந்த செய்தியை செவிலி கூறுவதாக

வெம்சின விறல்வேல் காளையொடு
அம்சில் ஓதியை, வரக் கரைந்தீமே

(ஐங்.19)

என்று பகைவர்மேல் கொடிய கோபத்தைக் காட்டுகிறவன்-வெற்றிபெறும் வேற்படையையுடையவன்-காளை போன்றவன் ஆகிய அவனுடன் அழகிய கூந்தலை யுடைய என் மகளையும் வீட்டுக்கு வந்து சேரும்படி கரைந்து அழைப்பாயாக என்று குறிப்பிடப்பட்டுள்ளது. திருமால் அரக்கர்களை அழித்தவன் என்ற செய்தி,

மல்லரை மறஞ்சாய்த்த மலர்த் தண்தரீ ரகலத்தோன்
ஒல்லாதார் உடன்றோட உருத்துடன் எறிதலின்
கொல்யானை அணிநுதல் அழுத்திய ஆழிபோல்
கல்சோம்பு ஞாயிறு கதிர் வாங்கி மறைதலின்

(கலி., 134)

என்றும்,

கணங்கொள் அவுணர்க் கடந்து பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னாள்

(ம.கா., 591-592)

என்றும் மல்லர்களை அழித்த செய்தி உவமையாகவும் நெய்தற்கலியில் ''பகை கொண்டு வந்த மல்லர்களாகிய கொல்லேறுகளின் மத்தகத்தின் மேல் வீசிய சக்கரப் படையானது அம்மத்தகங்களைப் பிளந்து செந்நிறமாக விளங்கியதுபோலக் கதிர்களை ஒடுக்கிக்கொண்டு மலை சேர்ந்த ஞாயிறும் செஞ்ஞாயிறாக விளங்கிற்று'' என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் மல்லர்களை திருமால் அழித்த செய்தியானது

மல்லரை அட்டுமாள, கஞ்சனை மலைந்து
கொன்று

(நா.தி.பி., 1303)

என்று இடம் பெற்றுள்ளது. மேலும் திருமால் கஞ்சன், வாணாசுரன் மகாபலி போன்ற அசுரர்களை அழித்த செய்தியும் குறிப்பிடப்பட்டுள்ளது.

சங்க கால அரசன் பல குறுநில மன்னர்களுக்கும். சிற்றரசர்களுக்கும் தலைவனாகப் போற்றப்படுகிறான். அவனுக்கு அவர்கள் திறைப்பொருள் செலுத்தியதையும் புறப்பாடல்கள் விளக்குகின்றன. ஆனால் திருமால் சிற்றரசர்களைப் போன்றிருக்கின்ற தேவர்களுக்குத் தலைவனாக, தேவாதி தேவனாக வணங்கி வழிபட தகுந்தவனாக சங்க இலக்கியம் போற்றுகிறது. அதையே எவ்வித மாற்றமும் இல்லாமல் நாலாயிர திவ்யப் பிரபந்தமும் ஏற்றுக் கொண்டு போற்றியுள்ளது.

மேலும் சங்க இலக்கியங்களில் மன்னனைப் பாடிய புலவர்களுக்கும். பாணன், பாடினி, விறலி ஆகியோர்க்கும் மன்னன் பரிசளித்து வாழச் செய்தான் என்பதை பரிசில் கடாநிலை என்ற துறை விளக்குகிறது.

ஆடுநனி மறந்த கோடுய ரருப்பின்
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
என்னிலை யறிந்தனை யாயினிந்நிலைத்

தொடுத்துங் கொள்ளா தமையலெனடுக்கிய
பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணமை முழவின் வயிரியர்
இன்மை தீர்க்குங் குடிப் பிறந்தோயே

(புறம்., 164)

என்று குறிப்பிடுகிறது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இறைவனை வழிபட கூடியவர்களுக்கு இறையருள் கிடைக்கும் அடுத்தடுத்து வரும் பிறவிப்பிணி தீர்ந்து முக்திநிலை கிடைக்கும் என்பதை எடுத்துக்காட்டுகிறது.

"சங்க காலத்தில் மன்னன் எவராலும் எளிதில் காணக் கூடியவனாக இருந்திருக்கிறான். எந்நேரத்திலும் புலவர்கள் அவனுடைய குறையை இடித்துணர்த்தவும் தவறியதில்லை அரசனும் அதனை ஏற்றுக்கொண்டுள்ளான். அத்தகைய எளிமையானவன் என்பதனை பல பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன.

பரிவுதப எடுக்கும் பிண்டம் நச்சின் யானைப்
புக்கப் புலம்போல தானும் உண்ணான்
உலகமும் கெடுமே

(புறம்., 184)

என்று கூறியதை ஏற்றுக்கொள்ளும் எளிய நிலையை காணமுடிகிறது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் திருமால் எளிதில் காணக் கூடியவனாக போற்றப்படுகிறான். இதனை,

மானமரு மென்னோக்கி வைதேவியின் துணையா
கான மரும் கல்லதர் போய்க் காடுறைந்தான் காணேடி
கானமரும் கல்லதர் போய்க் காடுறைந்த பொன்னடிக்கள்
வானவர்தம் சென்னி மலர்கண்டாய் சாழலே

(நா.தி.பி., 1992)

என்று எடுத்துக்காட்டுகிறார்.

**வஞ்சினக்காஞ்சி**

புறநானூற்றில் இடம் பெற்றுள்ள துறைகளில் வஞ்சினக் காஞ்சி என்பது சூளுரைத்தல் ஆகும். சூளுரைத்தல் பற்றிய செய்தி புறநானூற்றில்

*இடம்பெற்றுள்ளது போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இடம் பெற்றுள்ளது.*

மடங்கலிற் சினைஇய மடங்கா வுள்ளத்
தடங்காத் தானை வேந்த ருடங்கியைத்
தென்னொடு பெருது மென்பவவரை

(புறம்., 71)

*என்று ஒல்லையூர் பூதப்பாண்டியன் சூளுரைத்தது குறிப்பிடப்பட்டு உள்ளது. அதுபோன்றே தனக்குக் காட்சி தராமல் இருக்கின்ற திருமாலை நோக்கிக் குலசேகரர் சூளுரைப்பதை,*

செந்தழலே வந்து அழலைச் செய்திடினும் செங்கமலம்
அந்தரம்சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால்
வெந்துயர் வீட்டாவிடினும் விற்றுவக்கோட்டம்மா! உன்
அந்தமில் சர்க்கல் லால் அகம் குழைய மாட்டேன

(நா.தி.பி., 693)

*இவ்வாறு குறிப்பிட்டுள்ளார்.*

**தாபத நிலை**

*தாபத நிலை என்பது தலைவனைப் பிரிந்த தலைவியின் மாற்றங்களைக் கூறுவதாகும். இது தாபதவாகை என்றும் கூறப்பெறும்.*

ஓவத்தன்ன விடனுடைய வரைப்பிற்
பாவையன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளற் கண்டிரும்
கழைக்க ணெடுவரை யருவியாடிக்
கான யானை தந்த விறகிற்
கருந்தெறற் செந்தீ வேட்டுப்
புறந்தாழ் புரிசடை புலர்த்துவோனே

(புறம்., 251)

*என்று பாடுகிறார். நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் தலைவனைப் பிரிந்த தலைவி வருந்திப் பாடுவதாக பல பாடல்கள் இடம்பெற்றுள்ளன.*

**சூரியனை மீட்டல்**

*புறநானூற்றுப் பாடல் ஒன்றின் அசுரன் உலகங்களை கடலுள் ஒளித்து வைத்ததாகவும் அவற்றைத் திருமால் மீட்டுக் கொடுத்ததாகவும்,*

அணங்குடை அவுணர் கணங்கொண் டொளித் தெனச்
சேண் விளங்கு சிறப்பின் ஞாயிறு காணாது
இருள் கண் கொடுத்த பகுதி ஞாலத்து
இடும்பை கொள் பருவரல் தீரக் கடுந்திரள்
அஞ்சின உருவன் தந்து நிறுத்தாங்கு

(புறம்., 174)

*என்று குறிப்பிடுகிறது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இந்தச் செய்தியானது அசுரன் உலகை ஒளித்ததாகவும், திருமால் மீட்டதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது. "நான்முகன், சிவபெருமான் உள்ளிட்ட தேவர்கள் அணைவரையும் அசுரன் விழுங்குவதற்குமுன் சக்கரக் கையுடைய திருமால் மீட்டான்" (நா.தி.பி., 2004) என்று குறிப்பிடப்பட்டுள்ளது.*

**தூது செல்லுதல்**

*அதியமான் நெடுமான் அஞ்சிக்கும் தொண்டைமானுக்கும் போர் ஏற்படப்போகிறது என்பதை அறிந்த ஔவையார் தூதுசென்றதை புறநானூறு கூறுகிறது. அதுபோல கண்ணனும் பஞ்ச பாண்டவர்களுக்கும். நூற்றுவர்களுக்கும் இடையே தூதுசெல்கின்றான் கண்ணன் தூது சென்ற செய்தி*

போர்தலை மிகுந்த ஈரைம்பதின்மரொடு
துப்புத் துறை போகிய துணிவுடை யாண்மை
அகிரேன் அனைய, கைவண்மையையே

(ப.ப., 14)

*என்று குறிப்பிட்டுள்ளது. இந்த செய்தி நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்*

தூதுரைத்தல் செப்புமின்கள் தூமொழி வாய் வண்டினங்காள்

(நா.தி.பி., 3628)

*என்று படல்வரி எடுத்துக்காட்டுகிறது.*

**இராமாயணச் செய்தி**

*திருமால் இராம அவதாரத்தின்போது சீதையை மீட்கும் பொருட்டு கடலுக்கு அணைகட்டினான் என்ற செய்தி அகநானூற்றில்,*

வென்வேற் கவுரியர் தொன்முது கோடி
முழங்கிவரும் பௌவம் இரங்கு முன்றுறை
வெல்போர் இராமன் அருமறைக் குவித்த
வவ்வீ ழாலம் போல
ஒலியவிந் தன்றி விழுங்கலூரே

(அகம்., 70)

*என்ற பாடலில் கூறும் கருத்து (கடலுக்கு அணைகட்டியதுமட்டும்) நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில், "ஒலியெழுப்புக் கொண்டிருக்கின்ற கடலை தன்னுடைய அம்பால் அணையாகக் கட்டி மறுகரைக்கு இராமன் சென்றான் என்று எடுத்துக் கூறுகிறது (நா.தி.பி., 747).*

**எதிரிகளின் மீது நெருப்புப் போன்றவன்**

*ஒரு அரசனானவன் தன்னுடைய குடிமக்களிடம் திங்களைப் போன்று குளிர்ந்த அருட்பார்வையுடனும், தன்னுடைய பகைவனிடத்து கதிரவன் போன்று கொடிய பார்வையையும் உடையவனாக இருக்க வேண்டும். என்பதை, செவியறிவுறுஉ துறையில்,*

ஞாயிற்றன்ன வெந்திற லாண்மையும்
திங்களன்ன தண்பெருஞ்சாயலும் ...

(புறம்., 59)

*என்றபாடல் விளக்குகிறது. திருமாலும் தன்னுடைய பகைவர்களிடத்தில் (அசுரர்களிடத்தில்) கதிரவனைப் போன்று கோபப்பார்வையுடையவன் என்பதை,*

அழலாழிசங்க மவை பாடியாடும்
தொழிலாகம் சூழ்ந்து துணிந்து ...

(இ.திரு., 32)

*என்ற பாடல் விளக்குகிறது.*

ஞாயிறனையைநின் பகைவர்க்குத்
திங்களனையை யெம்மனோர்க்கே

(புறம்., 59)

*சங்ககால மன்னர்கள் எந்நேரத்திலும் புலவர்களும், மற்றவர்களும் பார்க்கக்கூடிய எளிமை நிலையில் இருந்தனர். மன்னனின் எளிமை*

தன்மையானது திவ்யப் பிரபந்தத்தில் திருமாலின் சௌலப்பிய குணத்திற்கு (எளிமைக்கு) ஒப்பிடக் கூடியதாக அமைந்துள்ளது.

**மன்னன்-இறைவன்**

சங்ககால மக்கள் மன்னனை நம்பியே வாழ்ந்தனர். அவன் முறை தவறினால் இடித்துக் கூறி திருத்துபவர்களாயினும் அவனுக்குக் கட்டுபட்டு வாழ்ந்தனர். மன்னவனும் மக்களின் நலமறிந்து நடந்தான் என்ற செய்தி புறநானூறு, பதிற்றுப்பத்து ஆகிய புற இலக்கியங்களின் வாயிலாக அறியமுடிகிறது. அரசனின் கடமையைக் கூறவந்த பாடல் ஒன்று,

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்
அதனால் யான்உயிர் என்பது அறிகை
வேல் மிகுதானை வேந்தற்குக் கடனே

(புறம்., 186)

என்ற பாடல் மன்னனுக்கு அடுத்தபடியாக மக்கள் வாழ்ந்தனர் என்பதை விளக்குகிறது. இதைப் போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தமும் மன்னனை நம்பி மக்கள் வாழ்வதை தான் கொண்ட இறைபக்தியோடு ஒப்பிட்டு ஒரு உவமையாக

மீன்நோக்கும் நீள்வயல் சூழ் விற்றவக் கோட்டம்மா! என்
பால் நோக்காயாகிலும் உன்பற்றல்லால் பற்றிலேன்
தான் நோக்காது எத்துயரம் செய்திடினும் தார்வேந்தன்
கோல்நோக்கி வாழும் குடிபோன்றிருந்தேனே

(நா.தி.பி.690)

என்ற இப்பாடல் எடுத்துக்காட்டுகிறது.

**முருகன்-திருமால்**

பரிபாடலில் இடம்பெற்றுள்ள முருகனுடைய வழிபாட்டுமுறை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ள திருமால் வழிபாட்டு முறைக்குப் பொருத்தமாக அமைந்துள்ளது.

கடம்ப மலர்மாலை அணிந்த முருகப்பெருமானிடம் அடியவர்கள் நாங்கள் பொன்னையும், செல்வங்களையும் உன்னிடம் கேட்கவில்லை நாங்கள் விரும்புவது எல்லாம் நின் அருளே என்று,

யாம் இரப்பவை
பொருளும் பொன்னும் போகமும் அல்ல நின்பால்
அருளும் அன்பும், அறனும், மூன்றும்
உருள் இணர்க் கடம்பின் ஒலிதாரோயே ...

(பரி., 5)

என்று எடுத்துக்காட்டியுள்ளது.

**மகாபாரதச் செய்தி**

சங்க இலக்கியங்களில் பெரும்பாலும் மகாபாரதச் செய்தியும், கிருஷ்ண அவதாரச் செய்தியும் பரவலாக இடம் பெற்றுள்ளது.

ஈரைம் பதின்மரும் பொருதுகளத் தவியப்
பேரமர் கடந்த கொடுந்து நெடுந்தே ராராவ் செருவினைவர்

(பெரும்., 415)

என்று அகநானூற்றிலும் (233), கலித்தொகையிலும் (101, 104, 152) இடம்பெற்றுள்ளது போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும்,

கோதைவேல் ஐவர்க்கு ஆய்மண் அகலம் கூறுஇடுவான்

(நா.தி.பி., 1998)

என்றும்

பார்மன்னர் மங்கப் படைதொட்டுவெம் சாமத்துத்

(நா.தி.பி., 1999)

என்றும் இடம் பெற்றுள்ளது.

சங்க இலக்கியத்தில் காணப்படும் புறச்செய்திகளில், திருமால் பற்றிய கருத்துக்களை, திருமால் மன்னனுக்கு நிகராதல், கொடி, படை, அரக்கர்களாகிய பகைவர்களை அழித்தல் தாபத நிலை, சூளுரைத்தல் போன்ற செய்திகள் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் செல்வாக்குற்று இருக்கின்றன இருந்த போதிலும் சேரமான் பெருஞ்சோற்று உதியலாதன் பாரதப் போர் நடந்போது அவ்வீரர்களுக்குப் போர் முடியும் காலம் வரையினும்

உணவளித்தான் என்ற செய்தியும் இராமன் இலங்கைச் செல்வதற்கு முன் தன்தம்பியுடனும், சுக்ரீவன் முதலியவர்களுடன் ஆலோசனை நடத்தும்போது அருகில் இருந்த ஆலமரத்தின் பறவைகள் ஒலியை பொறுக்காமல் கையசைத்தான். உடனே அப்பறவைகள் ஒலியெழுப்பாமல் அமைதியாக இருந்தன என்று கூறப்படும் அகநானூற்றுக் கருத்தும் நேரடியாக திவ்யப் பிரபந்தத்தில் இடம் பெறவில்லை எனலாம்.

## அவதாரங்கள் பற்றிய கருத்து

பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரில் பிரம்மதேவருக்கு பூமியில் வழிபாடே கிடையாது. சிவனுக்கு உருவ வழிபாடு இல்லாமல் இலிங்க வழிபாடே இருந்து வருகிறது. விஷுணுவாகிய திருமால் மட்டுமே பத்து அவதாரங்களை உலகில் எடுத்துள்ளர். அவர் அவதாரம் எடுத்ததன் நோக்கம் நல்லவர்களைக் காக்கவும் தீயவர்களை அழிக்கவும் பூமியில் அவதாரம் செய்தார் என்று கூறுவர். மீன், ஆமை, வராகம், வாமனம், நரசிங்கம் இராமன், பரசுராமன், பலராமன், கிருஷ்ணன், கல்கி ஆகியவை பத்து அவதாரங்களாகும். இவற்றுள் மிகச்சிறந்த அவதாரங்களாக இராம அவதாரமும், கிருஷ்ணாவதாரமும் எல்லோராலும் குறிப்பிடப்பட்டன. மச்சம், கூர்மம் போன்ற அவதாரங்களின் நோக்கம் உலகில் எந்த ஒரு உயிர்வாழினமும் தாழ்ந்ததல்ல என்பதை உணர்த்தவும் மக்களிடையே வேறுபாடு அகற்றி அனைவரும் சமம் என்னும் சொல்லால், மனத்தால், செயலால் வேறுபாடின்றி சமநோக்கு வேண்டும் என்பதை வலியுறுத்துவதே ஆகும். சங்க இலக்கியங்களில் மச்சாவதாரம், கல்கியவதாரம் பற்றிய குறிப்புகள் காணப்படாமையின் இவ்விரு அவதாரங்களும் மிகவும் பிற்பட்ட காலத்தில் சிந்தனை என்பர்."[33] திருமால் மச்சாவதாரம் தொடக்கமாக கிருஷ்ணாவதாரம் ஈறாக ஒன்பது அவதாரங்களையும் திருமால் எடுத்போதிலும் இறுதி அவதாரமாக கல்கியவதாரம் எடுப்பார் என்ற நம்பிக்கை மக்களிடையே இருந்துவருகின்றது. மேற்கூறிய அவதாரங்கள் தவிர, 1. கபிலர், 2. வியாசர், 3. தன்வந்திரி, 4. புருஷர், 5. அயக்கீரிவர், 6. தத்தாத்திரேயர், 7. தருமர், 8. மோகினி போன்றவர்களையும் அவதாரங்களாகக் கருதுவர்"[34] என்று அவதாரங்களின் சிறப்பை எடுத்துக்காட்டுகிறார். திருமாலின் ஒவ்வொரு

*அவதாரமும் உலகைக் காக்கும் பொருட்டும் பூமியின் பாரத்தைக் குறைக்கும்பொருட்டுமே அவதாரம் எடுத்ததாக குறிப்பிடுவது நாம் அறிந்ததாகும்.*

**கூர்ம அவதாரம்**

*அவதாரங்களைப் பற்றிய செய்திகளை மற்ற சங்க இலக்கியங்களை விட பரிபாடல் மிகத் தெளிவாகக் காட்டுகின்றது. திருமால் உலகைக் காக்கும் பொருட்டு ஆமையாக வடிவெடுத்த செய்தியை,*

திகழொளி முந்நீர் கடைந்தக்கால் வெற்புத்திகழ்பெழ
வாங்கித்தஞ் சர்ச்சிரத் தேற்றி
மகர மறிகடல் வைத்து நிறுத்து ...

(பரி.திர., 1, 64-66)

*என்னும் பரிபாடல் திரட்டு கூறுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் திருமழிசையாழ்வார்,*

கூசமொன்று மின்றி மாசுணம் படுத்து வேலைநீர்
பேசநின்ற தேவர்வந்து பாடமுன் கிடந்ததும்
பாசம் நின்ற நீரில் வாழும் ஆமையானகேசவா
ஏச அன்று நீ கிடந்தவாறு கூறுதோவே

(நா.தி.பி., 771)

*என்று குறிப்பிடுகிறார்.*

**வராக அவதாரம்**

*திருமால் பன்றியாக உருவெடுத்த அவதாரம் வராக அவதாரம் ஆகும். இதனை,*

கேழல் திகழ்வரகி கோலமொடு பெரிய ஊழ் ...

(பரி., 2, 16)

*என்று குறிப்பிடுகிறது. வராக அவதாரத்தை நம்மாழ்வார் தம் திருவாய் மொழியில்,*

ஏனமாய்நிலம் கீண்ட என்னப்பனே! கண்ணா!

(நா.தி.பி., 3188)

*என்று குறிப்பிடுகிறார்.*

**வாமன அவதாரம்**

*மகாபலிச் சக்கரவர்த்தியின் ஆணவத்தை அழிப்பதற்காக திருமால் எடுத்த குள்ளவடிவம் வாமன அவதாரம் ஆகும். வாமன் அவதாரத்தை சங்க இலக்கியம்*

நின் சேவடி தொழாரும் உளரோ? அவற்றுள
கீழ் ஏழ் உலகமும் உற்ற அடியினை ...

(பரி., 3, 20)

*என்று திருமால் மூவடியால் உலகளந்த செய்தியைக் குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் திருமங்கையாழ்வார்,*

தூய அரியுருவிற் குறளாய்ச் சென் மாவலியை
ஏயானிரப்ப மூவடிமண் இன்றேதா வென்று உலகேழும்
தாயின் காயாமலர் வண்ணன் சாளக் கிராமம் அடை நெஞ்சே ...

(நா.தி.பி., 993)

*என்று பாடுகிறார்.*

**நரசிங்க அவதாரம்**

*நரசிங்க அவதாரத்தைக் குறிப்பிடுவதில் பரிபாடலுக்கும் திவ்யப் பிரபந்தத்திற்கும் சிறு வேற்றுமைக் காணப்படுகிறது. பரிபாடல் திருமால் இரணியனை மார்பிலுதைத்துத் தன் நகத்தால் சீறப் பிளந்து எறிவதாகக் கூறுகிறது. ஆனால் திவ்யப் பிரபந்தத்தில் திருமால் அந்திப் போதில் இரணியனின் தலைமுடியைப் பிடித்து இழுத்து தன் மடிமீது இருத்தி நகத்தால் கொன்றார் என்பதனை, திருமங்கையாழ்வார்,*

முடியுடை அமரர்க்கு இடர் செய்யும் அசுரர்தம் பெருமானை அன்று அரியாய்
மடியிடை வைத்து மார்வை முன் கீண்ட மாயனார் மன்னிய கோயில்

(நா.தி.பி.1345)

*என்று குறிப்பிட்டுள்ளார்.*

**பரசுராம அவதாரம்**

*திருமால் பரசுராமனாக அவதாரம் எடுத்த செய்தியை சங்க இலக்கியம்,*

கடாஅ யானைக் குழூஉச் சம்மீ ததைய
மன்மருங்கு அறுத்த மழுவாள் நெடியோன்

முன்முயன்று அரிதினின் முடித்த வேள்வி ...

(அகம்., 220)

என்று குறிப்பிடப்படுகிறது. இச்செய்தி நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பெருமாள் திருமொழியில் குறிப்பிடப்பெறுகிறது. மழுவை ஆயுதமாக உடையவன் பரசுராமன். அவனுடைய ஆனவத்தை இராமன் அழித்ததை,

முன்னொருநாள் மழுவாளி சிலைவாங்கி அவன்தவத்தை

முற்றும் செற்றாய்

(நா.தி.பி., 738)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## இராம அவதாரம்

இராம அவதாரம் பற்றிய செய்தியைக் குறிப்பிடும்போது, இராவணன் சீதையை எடுத்துச் சென்றபோது சீதை எறிந்த அணிகலன்களை கிட்கிந்தையில் இருந்த குரங்குகள் அணிந்த செய்தியை,

நிலஞ்சேர் மதர் அணிகண்ட குரங்கின் ...

(புறம்., 378)

என்று குறிப்பிட்டுள்ளது. இராமாயணச் செய்தியை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் குலசேகராழ்வார்,

தளையவிழும் நறுங்குஞ்சித் தயரதன் குலமதலாய்

வளைய ஒரு சிலையதனால் மதிளிலங் கையழித்தவனே

(நா.தி.பி., 727)

என்று குறிப்பிடுகிறார்.

## பலராமன்

கண்ணனின் அண்ணனாக பாரதம் குறிப்பிடுகின்ற பலராமனும் திருமாலின் அவதாரம் என்பதை,

எல்லாம் வேறுவேறு உருவின் ஒருதொழில் இருவர்த்

தாங்கு நீள்நிலை ஓங்கிருங் குன்றம் ...

(பரி., 15, 65-66)

என்று குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஆண்டாள்,

பட்டி மேய்ந்தோர் காரேறு பலதேவற்கு ஓர் கீழ்க்கன்றாய் ...

(நா.தி.பி., 637)

*என்று கண்ணன் பலராமனின் தம்பி என்பதைக் குறிப்பிடுகிறார்.*

*பரிபாடலில் மச்சாவதாரம், பரசுராமவதாரம் இராமாவதாரம் கல்கியவதாரம் பற்றிய குறிப்பில்லை. பிற சங்க இலக்கியங்களில் மச்சாவதாரம், வராகவதாரம், நரசிம்மவதாரம், கல்கியவதாரம் ஆகிய நான்கு அவதாரங்கள் பற்றிய குறிப்பில்லை எனலாம்.*

**கிருஷ்ணாவதாரம்**

*சங்க இலக்கியங்களில் பெரும்பாலும் கிருஷ்ணாவதாரம் பற்றிய செய்திகளள் இடம்பெற்றுள்ளன.*

பொருமுரண் மேம்பட்ட பொலம்புனை புகழ்நேமித்
திருமறு மார்பன்போற் நிறல்சான்ற காரியு
மிக்கொளிர் தாழ்சடை மேவரும் பிறைநுதன்
முக்கண்ணா னுருவேபோன் முரண்மிகு குராலு
மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப்போர் ...

(கலி., 104)

*என்ற பாடல் இடம்பெற்றுள்ளது. இந்த செய்தியை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

தாழ்ந்த விளங்கனிக்குக் கன்றெறிந்து வேற்றுருவாய்

(நா.தி.பி., 2204)

*என்று கிருஷ்ணன் கன்றினால் விளங்கனி எறிந்த செய்தி குறிப்பிடப்படுகிறது.*

**திருமால் அன்னமாதல்**

*பூமியில் வெள்ளம் வந்தபோது வேதங்கள் அழியும் நிலை உருவாகியது. அப்போது திருமால் அன்னப்பறவையாக உருக்கொண்டு வந்து தன்சிறகால் வெள்ளைத்தைப்புலர்த்தி வேதங்களைக் காப்பாற்றிய செய்தி சங்க இலக்கியத்தில்*

மாவிசும்பு ஒழுகுபுனல் வறல் அன்னச்
சேவலாய்ச் சிறகர்ப் புலர்த்தியோய் ...

(பரி., 3, 12-14)

என்று குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் திருமங்கையாழ்வார்

அன்னமும் மீனும் ஆமையும் அரியும் ஆயஎம்மாயனே!

(நா.தி.பி., 1117)

என்று திருமால் எடுத்தவற்றுள் சில வடிவங்களை இப்பாடல் வரியில் குறிப்பிடுகிறார்.

**திருமால் உறவு பகை இல்லாதவர்**

சங்க இலக்கியங்களில் திருமால் பற்றிய செய்திகள் பரவலாகக் காணப்படினும் மிக அதிக அளவில் பரிபாடலே எடுத்துக்காட்டுகிறது. திருமாலை தனக்கு இவர் உறவு என்றும் இவர் பகைவர் என்றும் எண்ணாது சமநோக்குடையவனாகவே பாடப்பட்டிருக்கிறார். இதனை,

பகைவர் இவர் இவர் நட்டோர் என்னும்
வகையுமுண்டோ நின் மரபறிவோர்க்கே ...

(பரி., 3, 57)

என்று குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஆண்டாள் தம்முடைய நாச்சியார் திருமொழியில் சங்கை சுற்றமாக்கிப் பாடும்போது,

உன்னோடு உடனே ஒரு கடலில் வாழ்வாரை
இன்னார் இனையாரென்று எண்ணுவாரில்லைகாண் ...

(நா.தி.பி., 571)

என்று குறிப்பிடுகிறார். இதனால் திருமாலின் கையில் வீற்றிருக்கின்ற பாஞ்சசன்னியம் என்ற சங்கே உறவு பகை இல்லாததாகப் பாடப்பட்டு இருக்கிறது என்பது விளங்கும்.

**சிவன் திரிபுரம் எரித்த வரலாறு**

சிவபெருமான் பற்றிய செய்திகள் சங்க இலக்கியத்தில் சில பாடல்களில் மட்டுமே காணப்படுகின்றது. சிவபெருமான் சிவந்த நிறமுடையவன், கொன்றைமாலை சூடியவன், திரிபுரங்களை அழித்தவன் என்ற செய்திகள் இடம்பெற்றுள்ளன.

எரியெள்ளு வண்ண நிறத்தன் விலியிணர்க்
கொன்றையும் பைந்தா ரகலத்தன் பொன்றார்

எயிலெரி யூட்டிய வில்லன் ...

(பதி,பத்து.கடவுள் வாழ்த்து)

*என்று குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,*

திரிபுரம் மூன்று எரித்தானும் ...

(நா.தி.பி., 1118)

*என்று குறிப்பிடுகிறது.*

**சிவன்-திருமால் ஒற்றுமை**

*முருகன், அயன், அரன் என்னும் மூன்று பெயர்களும் திருமாலின் வேறு பெயர்களாக புலவர் பரிபாடலில் குறிப்பிட்டுள்ளார். அதனால் சிவனுக்கும் முருகனுக்கும் உரிய ஆலமும், கடம்பும் திருமாலுக்குரியவை என்பதை,*

ஆலமுங் கடம்பு நல்யாற்று நடுவும்
கால்வழக் கறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேய வேறு வேறு பெயரோய் ...

(பரி., 4, 67-69)

*என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் சிவபெருமானுக்குரிய தாழ்சடையும் நீள்முடியும் திருமாலுக்குரியதாக,*

தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்

(நா.தி.பி., 2344)

*என்று குறிப்பிடப் பெறுகிறது.*

**பாடாண் திணை**

*புறத்திணைகளுள் மிகவும் சிறப்புற்றது பாடாண்திணை எனலாம். ஏனெனில் இத்திணை பாடப்படும் ஆண்மகனது ஒழுக்கம், வீரம், ஈகை போன்ற சிறப்புக்குரிய செயல்களைப் பாடுவது பாடாண்திணை எனப்படும். பாடாண் திணையுள் நாலாயிர திவ்யப் பிரபந்த பாடல்கள் முழுவதுமே அமைந்திருக்கின்றன என்று கூட கூறலாம். ஏனெனில் அவை திருமாலின் ஈகை, வீரம், அருட்சிறப்பு ஆகியவற்றை எடுத்துக் கூறுகின்றன. சங்க இலக்கியத்தில் பாடாண்திணைக்கு எடுத்துக்காட்டாக,*

கவைக்கதிர் வரகினவைப்புற வாக்கல்
தாதெரு மறுகிற் போதொரு பொதுளிய ...

(புறம்., 215)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. இந்த பாடாண்திணை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

துண்ட வெண்பிறையன் துயர்தீர்த்தவன் அஞ்சிறைய
வண்டு வாழ்பொழில் சூழ் அரங்க நகர்மேய அப்பன்
அண்டரண்டபகிரண்டத்து ஒருமாநிலம் எழுமால் வரை முற்றும்
உண்டகண்டம் கண்டீர் அடியேனை உய்யக் கொண்டதே ...

(நா.தி.பி., 932)

*என்று திருமாலின் சிறப்பை திருப்பாணாழ்வார் பாடுகிறார்.*

## அடிக்குறிப்புகள்

1. குளோரியா சுந்தரமதி, சங்க இலக்கியத் திணை துறை அமைப்பில் எழும் ஒரு சிக்கல் (சங்க இலக்கியக் கட்டுரைகள்), ப.134.
2. கு.முத்துராசன், சங்க காலம், ப.281.
3. த.தனபாக்கியவதி, தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு, பக்.314-15.
4. இரா.சாரங்கபாணி, பரிபாடல் திறன், பக்.68-69.
5. த.தனபாக்கியவதி, தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு, ப.288.
6. ஆர்.வீரபத்திரன், பாவை நோன்பு வரலாறும் இலக்கிய மரபுகளும், ப.8.
7. மேலது., ப.60.
8. கு.அழகிரிசாமி, இலக்கிய விருந்து, பக்.2-3.
9. ம.பெ.சீனிவாசன், திருமங்கையாழ்வார் மடல்கள், ப.31.
10. வி.மு.உலகநாதன், கோதையின் காதல் ஓவியம், ப.53.
11. தமிழ் இலக்கியக் கொள்கை, 7.
12. பன்னிரு பாட்டியல், நூ.714.
13. நாற்கவிராச நம்பி, நம்பியகப்பொருள், நூ.145.
14. கு.முத்துராசன், திருமங்கையாழ்வாரின் சிறிய திருமடல், 9வது கருத்தரங்கு ஆய்வுக்கோவை, ப.488.
15. ந.சுப்புரெட்டியார், வைணவ உரைவளம், ப.35.
16. ஆர்.வீரபத்திரன், பாவை நோன்பு வரலாறும் இலக்கிய மரபுகளும், பக்.50-51.
17. ஆதி.பாலசுந்தரன், சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள், ப.52.
18. சிதம்பரம், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.88.
19. மு.வரதராசன், முல்லைத்திணை, ப.6.
20. சரளா இராஜகோபாலன், இலக்கியச் சிந்தனைகள், ப.72.
21. பெ.அரிகேசவன், வைணவம் அரிவோம் வாரீர், பக்.79-80.
22. ச.வே.சுப்பிரமணியன், இலக்கியக் கனவுகள், ப.
23. தொல்காப்பியர், தொல்காப்பியம், அகத்திணையியல், ப.9.
24. தொல். களவியல், முன்., பக்.10-11.

25. க.வெள்ளைவாரணன், சங்க இலக்கியத்தில் சமய நோக்கு (சங்க இலக்கியக் கட்டுரைகள்-கருத்தரங்கு), ப.158.
26. தெ.ஞானசுந்தரம், சங்க இலக்கியத்தில் திருமால் நெறி (சங்க இலக்கியக் கட்டுரைகள்-கருத்தரங்கு), ப.214.
27. மு.வரதராசன், முல்லைத்திணை, ப.5.
28. நா.ஆறுமுகம், முல்லை வாழ்க்கை, ப.6.
29. மேலது., ப.9.
30. ஆ.அமிர்தகௌரி, சங்க இலக்கியத்தில் உரையாடல், ப.46.
31. சாமி.சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.19.
32. தொல்காப்பியர், தொல்காப்பியம் புறத்திணையியல், ப.227.
33. க.த.திருநாவுக்கரசு, தமிழ்நாட்டில் வைணவம் தோற்றமும் வளர்ச்சியும், ப.
34. ப.அருணாச்சலம், வைணவ சமயம், ப.15.

# 4.0. வாழ்வியல் செல்வாக்கு

நம் முன்னோர்களின் வாழ்க்கையை எடுத்துக் காட்டும் காலக்கண்ணாடியாக சங்க இலக்கியங்கள் விளங்குகின்றன. சங்க கால மக்களின் காதல், வீரம், திருமணமுறை, சடங்குகள், வாழ்க்கை நிகழ்ச்சிகள் வளர்ச்சிநிலை ஆகியவை நாகரீகம், பண்பாடு ஆகும். சங்க மக்களின் நாகரீக பண்பாட்டினை சங்க இலக்கியம் விளக்குவதைப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தமும் விளக்குகின்றது. நாலாயிர திவ்யப் பிரபந்தம் ஒரு பக்தி இலக்கியமாக இருப்பினும் ஆழ்வார்களின் பாடுபொருள் சங்க இலக்கியத்து பாடுபொருளோடு இயைபு உடையதாக அமைந்திருப்பது அதன் செல்வாக்கை எடுத்துக்காட்டுகிறது.

"செல்வாக்கைப் பற்றிக் குறிப்பிடும்போது இந்திய மக்களின் சிந்தனைகள், உணர்வுகள், பழக்க வழக்கங்கள் பண்பாடு, நாகரிகங்கள் ஆகியவற்றை ஆராய்ந்த அறிஞர்கள் அவையனைத்தும் அம்மக்களிடையே தொன்றுதொட்டு பரம்பரையாக வந்துள்ள இறையுணர்வு சமயம்பற்று இவற்றினடியாகத் தோன்றிநிலைப்பெற்று வருகின்றன என்னும் உண்மையை கண்டறிந்து கூறியுள்ளார"[1] என்று குறிப்பிடுகிறார். இதனால் செல்வாக்கு என்பது காலந்தோறும் இருந்து வருவது என்ற உண்மை புலனாகிறது.

**திருமணமுறை**

தொடக்க காலத்தில் திருமணம் என்ற சடங்கு இல்லாமலேயே அவர்கள் கணவன் மனைவியாக, குடும்பம் என்ற அமைப்புடன் வாழ்ந்திருந்தனர். ஆனால் காலமாற்றத்தில் ஏமாற்று முறைகள் தோன்றின. அதனால் பாதிப்படைந்த குடும்பங்கள் எடுத்த ஒரு சில முடிவே திருமணம் ஏற்பட்டது எனலாம். ஆரம்ப காலத் திருமணச் சடங்கிலே புரோகிதம் இல்லை, மந்திரம் இல்லை, அக்கினி வளர்ப்பும் இல்லை, தாலி கட்டப்பட்டதாகவும் தெரியவில்லை, மாதர்களே முன்னின்று மணவினைகளை நடத்தி வைத்தனர் என்று கூறுகிறது.[2] திருமணம் தோன்றிய முறையை,

பொய்யும் வழுவும் தோன்றிய பின்னர்
ஐயர் யாத்தனர் கரணம் என்ப[3]

என்று குறிப்பிடுகிறது. பிற்காலத்தில்தான் தாலிகட்டும் வழக்கமும் வேதமுறைப்படி திருமணம் நடைபெற்றதையும் அகநானூறு கலித்தொகை ஆகியவற்றால் அறியலாம். அந்தணர்கள் அக்கினி சாட்சியாகத் திருமணம் புரிந்தனர் என்று கலித்தொகைக் கூறுகிறது. தொடக்க காலத்தில் ''தாலி அணித்ல்'' என்பதற்கு பதிலாக ஒரு ஆடவன் தான் வேட்டையாடிய புலிப்பலல்ல தன் காதலிக்கு ஒரு அடையாளமாக வழங்கினான். இந்த அடையாளப் பொருளே பிற்காலத்தில் தாலியாயிற்று என்று இலக்கியங்கள் கூறுகின்றன. தலைவன் தலைவியை திருமணம் செய்து கொள்வதற்கு அவள் வளர்த்த காளையை அடக்கவேண்டும். அவ்வாறு செய்து வெற்றிபெற்ற தலைவனையே அந்தத் தலைவி மணந்துகொள்வாள் என்பதை,

கொல்லேற்றுக் கோடஞ்சுவானை மறுமையும்
புல்லாளே ஆய மகள் ...

(கலி., 103)

என்று எடுத்துக்காட்டுகிறது. நாலாயிர திவ்யப்பிரபந்தமும் கண்ணன் நம்பின்னையாகிய ஆயமகளை மணப்பதற்கு அவள் வளர்த்த ஏழுகாளைகளை அடக்கினான் என்ற செய்தி,

மணமருவ மால் விடையேழ் செற்று ...

(நா.தி.பி.முதல் திருவந்தாதி, 62)

என்று எடுத்துக்காட்டப்படுகிறது.

### திருமணமுறை

''கரண (சடங்கு) வகை இதுவெனத் தமிழ் நூல் எதுவும் வரையறுத்திலது. காலந்தோறும் கொள்கைகள் மாறும் அவ்வழிக் கரணமும் பலதிறப்படலாம், எனினும் தொன்று முதற் சான்றோர் நன்றெனக் கொண்ட முளைப் பாலிகையும், மங்கல மடவார் மலரொடு வாழ்த்தும் மாலை மாற்றும் எங்கும் என்றும் தமிழர் திருமணங்களில் நின்று பயிலும் சிறப்புடையன. அம்மி மிதித்தலும் ஏழடி நடத்தலும் (சப்தபதி) மறையோர் (வேதியர்) மன்றலுக்கே (திருமணத்துக்கே) இன்றியமையாதன'' என்று வேதகால திருமண முறையைக் குறிப்பிடுகின்றார்.

கலித்தொகையில் கூறப்படும் அந்தணர் திருமணமுறையும் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் நாச்சியார் திருமொழியில் ஒரு பதிகமாகவே சுட்டப்படுகிறது.

இந்திரக் கோடியுடுத்தி மணமாலை
அந்தரி சூட்டக் கணாக் கண்டேன் தோழி நான்

(நா.தி.பி., 558)

என்று கூறப்படுவதில் மணமகள் திருமண ஆடையை உடுத்தியவுடன் கணவனின் சகோதரி மாலை சூட்டவேண்டும் என்பதும். ஆண்டாளாகிய மணப்பெண்ணுக்குத் திருமாலின் சகோதரியாகிய அந்தரி (சக்தி) மாலைசூட்டுவதாகத் தாம் கனவு கண்டதைக் குறிப்பிடுகிறார். இதனால் இன்றும் நடைபெறுகின்ற வைணவத் திருமணச் சடங்குகளில் திருமணம் முடிந்தவுடன் நாச்சியார் திருமொழியில் உள்ள இந்த பத்து பாசுரங்களும் பாடுதல்மரபாக நடைபெற்று வருகின்றது. அந்தரி திருமாலின் தங்கை என்பதும் அவளது கையால் மணமாலைசூட்டுதல் மரபு என்பதும் தெரியவருகிறது. அந்தரி என்ற சொல்லானது சிலப்பதிகாரத்தில் வேட்டுவ வரியில் (23) இடம்பெற்றுள்ளது. திருமணத்தன்று மணமகன் யானைமேலமர்ந்து ஊர்வலம் வரும் செய்தியும் (பு.கா 43-44) மணமக்கள் தீவலம் வரும் செய்தியும் (பு.கா.53-54) சிலப்பதிகாரத்திலும் பாடப்பட்டுள்ளன.

மேலும் திருமணத்தன்று மணப்பெண் அருந்ததியைப் பார்த்தனர் என்பதை,

வதுவை மகளிர் நோக்கினர் பெயர்த்து ...

(பதி., 9(17))

என்று குறிப்பிட்டுள்ளது. ஆனால் ஆண்டாளின் நாச்சியார் திருமொழி திருமணமுறையைக் குறிப்பிடும்போது அம்மி மிதித்தலைக் கூறி அருந்ததி பார்த்தலைக் குறிப்பிடவில்லை. ஆனால் தனியாகக் குறிப்பிட்டுள்ளது என்பதை,

இம்மைக்கும் ஏழேழ் பிறவிக்கும் பற்றாவான்
நம்மையுடையவன் நாராயணன் நம்பி
செம்மையுடைய திருக்கையால் தாள்பற்றி

அம்மி மிதிக்கக் கனாக்கண்டேன் தோழி! நான்

(நா.தி.பி., 563)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் களவுமணம் ஏற்றுக் கொள்ளப்பட்ட அந்நாளிலும் தலைவியை தமர் அறிந்து கொள்ளும் போது மணம் புரிதலே போற்றுமாறு இருந்தது. அவரவர்கள் தம் குலத்திலேயே மணம் புரிந்தனர் என்பதற்குக் கண்ணன் ஆயர்குலப் பெண்ணான நப்பின்னையை மணந்துகொண்டது சிறந்த எடுத்துக்காட்டாகின்றது.

சிறுவயதில் ஒன்றாக விளையாடிய சிறுவனும் சிறுமியும் பிற்காலத்தில் அன்புமுதிர்ந்து தலைவன் தலைவியாகி வாழ்வு நடத்தினர் என்பதை,

சுடர்த்தொடீஇ கேளாய் தெருவினா மாடு
மணற்சிற்றில காலிற் சிதையா வடைச்சிய
கோதை பரிந்து வரிப்பந்து கொண்டோடி
நோதக்க செய்யுஞ் சிறுபட்டி மேலோர்

(கலி., 51)

என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. அதேக் கருத்திணை பெரியாழ்வாரும். ஆண்டாளும் தம்முடைய பாசுரங்களில் எடுத்துக்காட்டியுள்ளனர். ஆண்டாளும் தாம் சிறுவயதிலிருந்தே கண்ணனை மணக்க நினைத்ததை,

அவரை பிராயம் தொடங்கிய

(நா.தி.பி., 507)

என்று குறிப்பிடுகிறார். இவ்வாறு திருமணம் செய்கின்ற முறையானது சங்க காலத்திலிருந்து படிப்படியான வளர்ச்சிமுறையை அடைந்து உள்ளது என்பதை நாலாயிர திவ்யப் பிரபந்த பாசுரங்கள் எடுத்துக்காட்டுகின்றன. மேலும் யசோதை கண்ணனை நீராட்டும் போது கண்ணன் நீராட மறுத்தால் முறைப்பெண்ணான நப்பின்னை சிரிப்பாள் என்பதை,

பூணித்தொழுவினில்புக்குப் புழுதியளைந்த பொன்மேனி
காணப்பெரிதும் உகப்பன் ஆகிலும் கண்டார் பழிப்பர்
நாணெத்தனையுமிலாதாய்? நப்பின்னைகாணில் சிரிக்கும்
மாணிக்கமே! என் மணியே! மஞ்சனமாடநீவாராய்!

(நா.தி.பி., 160)

என்று பெரியாழ்வார் தம் திருமொழியில் குறிப்பிட்டுள்ளார்.

**புதுமணல் பரப்புதல்**

*திருமணமுறை ஏற்பட்டபின் மணவறை அலங்கரிப்பது திவ்யப் பிரபந்தத்தில் வழிபாட்டு முறையில் இடம்பெற்றுள்ளது. "நல்லநாள், குளிர்ந்த பந்தல், பந்தலிலே புதுமணல் பரப்பபட்டிருந்தது. பூமாலைகள் புனைந்து தொங்கிக் கொண்டிருந்தன. இரவுகழிந்தது காலை நேரம் வந்தது," என்பதை அகநானூறுபாடல் எடுத்துக்காட்டுகிறது. இந்த அலங்கரிப்பு நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஆண்டாள் காமனை வழிபடும்போது வழிபாட்டு இடம் புதுமணல் பரப்பி அலங்கரிக்கப்பட்டது என்பதை,*

தையொரு திங்களும் தரை விளக்கித்
தண்மண்டலமிட்டு மாசிமுன்னாள்
ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து
அழகினுக்கலங்கரித்து அணங்க தேவா ...

(நா.தி.பி., 690)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. மேலும் மணநாள் பார்த்து மணப்பந்தலை அலங்கரித்தலை,*

நாளைவதுவை மணமென்று நாளிட்டு
பாளை கமுகு பரிசுடைப்பந்தற்கீழ் ...

(நா.தி.பி., 557)

*என்று குறிப்பிட்டுள்ளது.*

**மகளிர் கற்பு**

*சங்க காலத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவு ஆற்றியிருத்தலும் கற்பின் பாற்படும். கணவன் பிரிவினால் உள்ளத்திலே கவலை தோன்றுவது இயற்கை. அக்கவலையை வெளியிலே காட்டாமல் மறைத்துக் கொள்ளுவதே கற்பின் மாண்பாகும். கற்புடைய பெண்கள் பிரிவின் போது துன்பத்தை மறைத்துக் கொள்ளவேண்டும். அவ்வாறு இல்லாவிட்டால் குளிர்ந்த நீர்த்துறையை உடைய தலைவன் நாணமடையும்படி பகைவரால் இகழப்படும் பழி அவனுக்கு வரும் என்பதை,*

துறந்து ஓர்தேஎத்து இருந்து நனிவருந்தி ...

(நற்., 382)

என்ற பாடல் விளக்குகிறது. மேலும் தன்னுடைய கணவன் பரத்தையருடன் தொடர்பு கொண்டிருந்தாலும் கற்புடையப் பெண்கள் அவற்றைப் பொருத்து வாழ்ந்தனர். பிறர் அறிய கணவனுக்குப் பழிச்சொல் உண்டாக்க மாட்டாட்டர்கள் என்பதை இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன. நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இச்செய்தியை குலசேகராழ்வார்,

கண்டாரிகழ்வனவே காதலன் தான் செய்திடினும்
கொண்டாணையல்லால் அறியாக் குலமகள் போல்

(நா.தி.பி., 689)

என்று இறைவழிபாட்டிற்கு, திருமாலைத் தவிர வேறொருவரையும் வணங்கமாட்டேன் என்று கற்புடைய பெண்களை எடுத்துக்காட்டாகக் கூறுகிறார்.

## ஆயமகளிர் கற்பு

ஆயர்குலப் பெண்கள் தாம் காதலித்த கணவனைக் கைவிட்டு மற்றொருவனை மணத்தலாகிய இருமணம் புரிந்து கொள்ளுதல் அவர்களது குலப்பழக்கம் இல்லை என்பதை,

விரிநீர் உடுக்கை உலகம் பெறினும்
அருநெறி ஆயர் மகளிர்க்கு
இருமணம் கூடுதல் இல் இயல்பன்றே ...

(கலி., 114)

என்று எடுத்துக்காட்டுகிறது. ஆயமகளின் கற்பை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஆண்டாள்,

மானிடவர்க்கென்று பேச்சுப்படில்
வாழ்கில்லேன் கண்டாய் மன்மதனே

(நா.தி.பி., 508)

என்று குறிப்பிடுகிறார்.

## பூச்சூடல்

திருமணமாகி கணவனுடன் வாழ்கின்ற மங்கல மகளிரும் திருமணமாகாத பெண்களும் பூச்சூடியும் ஒப்பனை செய்து கொண்டும், வளையல் அணிந்து கொண்டும் மங்கல நிலையில் வாழ்ந்தனர். பெண்கள்

தங்கள் தலைகளில் பூச்சூடியிருந்தனர். அவர்களது கூந்தல் நறுமணத்துடன் இருந்தது. இதனை,

புனலாம்பற் பூச்சூடியும் ...

(ப.பா., 2, 66)

என்று எடுத்துக்காட்டுகிறது. இதே கருத்தை பெரியாழ்வார் தம் பாசுரத்தில்,

வண்டமர் பூங்குழல் ஆய்ச்சி மகனாக்க ...

(நா.தி.பி., 13)

என்று குறிப்பிடுகிறார். இதிலிருந்து பெண்களின் பூச்சூடல் என்பது தொன்று தொட்டு வரும் மரபு என்று அறிய முடிகிறது.

## பூச்சூடாமை

தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவுத்துன்பம் மேலிட்டதனால் தன்னை அழகு படுத்திக் கொள்ளாமல் நலமழிந்து இருந்திருக்கிறாள் தன் கூந்தலில் மலர்ச்சூடாமல் அவள் இருந்த நிலையினை,

நெய்யொடு துறந்த மையிருங் கூந்தல் ...

(புறம்., 147)

என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. இப்பாடல், தலைவன் பிரிவால் தலைவி கூந்தலை பேணவில்லை என்பதை எடுத்துக்காட்டுகிறது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஆண்டாள் நாச்சியாரும் பாவை நோன்பு (கண்ணனை அடைவதற்காக) நோன்பு இருக்கும்போது ஒப்பனை செய்யாமலும் மலர்ச்சூடாமலும் இருந்தனர் என்பதை,

மையிட்டெழுதோம் மலரிட்டு நாம்முடியோம் ...

(நா.தி.பி., 475)

என்று எடுத்துக்காட்டுகிறார்.

## மகப்பேறு வேண்டல்

இல்லறத்தில் வாழ்வோருக்கும் புத்திரப்பேறு ஒருவரமாகக் கருதப்படுகிறது. புத்திரப்பேறு இல்லாதவர்கள் சுவர்க்கத்திற்குச் செல்லமாட்டார்கள் என்ற நம்பிக்கையும் சங்க காலத்தில் இருந்தது. அதனால் அவர்கள் குழந்தைகளை செல்வமாகக் கருதினர். தலைவன் தலைவியின் ஊடலைப் போக்க குழந்தை ஒரு காரணமாக அமைகிறது என்பதை,

பள்ளி யானையின் உயிரா அசைஇப்

புதல்வன் தழீஇனன் விறலவன்

புதல்வன் தாய் அவன்புறம் கவைஇயினாளே ...

(குறுந்., 359)

என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. பக்தி இலக்கியமான நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் திருமாலுக்கு மகன் இருப்பது பாடப்பட்டுள்ளது. திருமாலுக்கு மகன் இருப்பது பரிபாடலிலும் கூறப்பட்டுள்ளது. இருந்தபோதிலும் இறைவனை கோயிலில் வைத்திராமல் தலைவனாகக் குடும்பநிலைக்குக் கொண்டுவந்தவர்கள் ஆழ்வார்கள் என்று கூறலாம். திருமாலுக்கு மகன் இருந்ததை, நேரடியாக சுட்டாமல் திருமால் யசோதைக்கு மகனாகப் பிறந்ததால் யசோதைக்கு சுவர்க்க உலகம் கிடைத்தது என்பதை

தாயைக் குடல் விளக்கம் செய்த தாமோதரனை ...

(நா.தி.பி., 478)

என்று குறிப்பிடுவதிலிருந்து அறியமுடிகிறது.

**ஐம்படைத்தாலி**

சங்ககாலத் தமிழர் தம் பிள்ளைகளுக்குத் தாலி அணிவித்தல் வழக்கம். அத்தாலி காத்தற் கடவுளான திருமாலின் ஐந்து படைகளின் வடிவங்களைப் பொன்னாற் செய்து குழந்தைகளின் கழுத்தில் கட்டும் ஒருவகை ஆபரணமாகும். அதனை ஆண்மக்களும், பெண்மக்களும் அணிந்திருந்தனர். தலையாலங்கானத்து செருவென்ற பாண்டியன் நெடுஞ்செழியனை இடைக்குன்றூர் கிழார் என்னும் புலவர் தாம்பாடிய பாடலில் தாலிகளைந் தன்றும் இலனே (புறம்., 77) என்கிறார்.

ஐம்படைத்தாலி என்பது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பெரியாழ்வார் திருமொழியில் குறிப்பிடப்பெறுகிறது. ஆனால் தாலி என்ற சொல் குறிப்பிடாமல்,

அழகிய ஐம்படையும் ஆரமும் கொண்டு ...

(நா.தி.பி., 48)

என்று கண்ணனை தாலாட்டும் பாசுரத்தில் குறிப்பிடுவதிலிருந்து சங்ககாலம் போலவே பக்தி இலக்கியமான திவ்யப் பிரபந்த காலத்திலும் சிறுவர்களும் ஐம்படைத்தாலி அணிந்திருந்தனர் என்ற செய்தியை அறியமுடிகிறது.

**உணவு படைத்தல்**

*சங்ககாலத்தில் உணவு படைத்தல் இருந்தது என்பதை புறநானூறும், குறுந்தொகையும் இயம்புகின்றன. நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் தெய்வத்திற்குப் படைக்கப்பட்ட செய்தி இடம்பெற்றுள்ளது. நோய்தீர தெய்வத்தைப் பிரார்த்தனை செய்தலும் அதற்குப் பூசை செய்வதும் சங்ககால மக்களின் பழக்கமாக இருந்தது என்பதை,*

சிறுதிணை முந்துவிளை யாணர் நாட்புதிதுண்மார் ...

(புறம்., 68)

*என்று குறிப்பிடுகிறது. இச்செய்தியை பெரியாழ்வார் திருமாலை* சோத்தம்பிரான் என்ற பெயரிட்டு வழங்கினர் என்பதிலிருந்து அறியமுடிகிறது.

**கிளி வளர்த்தல்**

*சங்ககால மகளிர் தம்வீடுகளில் கிளி வளர்த்தனர் என்பதை உடன்போக்கில் சென்ற தலைவியை நினைத்து செவிலி புலம்புவதாக அமைந்த பாடல்,*

இது எம்பாவைக்கினிய நன்பாவை

இதுஎம் பைங்கிளி எடுத்த பைங்கிளி ...

(ஐங்., 375 பாடபேதம் உள்ளது)

*என்று தெரிவிக்கிறது. அதேப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தமும், மகளிர், பாலும் சோறும் தந்து கிளிவளர்த்த செய்தியை,*

இன்னடிசிலோடு பாலமுதூட்டி எடுத்த என் கோலக் கிளியை ...

(நா.தி.பி., 549)

*என்று எடுத்துக்காட்டுகிறது.*

**மழைபெய்யும் நிகழ்ச்சி**

*மழையைப் பற்றிய செய்தி சங்க இலக்கியத்தில் பரவலாக இடம்பெற்றுள்ளது போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இடம் பெற்றுள்ளது. பெரும்பாலும் மழைபெய்தல் பிரிவில் இருப்பவர்களை துன்பப்படுத்துவதாகவே பாடப்பட்டுள்ளது.*

பொழி மழை துறந்த புகைவேய் குன்றத்துப்
பழு மரந்தேரும் பறவை போலக் ...

(பெரும்., 19)

*என்ற பாடல் மழையின் இன்றியமையாமையை விளக்குகிறது.*

மழையே! மழையே! மாண்புறம் பூசி உள்ளாய் நின்று
மெழு கூற்றினாற் போல் ஊற்றுநல் வேங்கடத்துள் நின்ற ...

(நா.தி.பி., 604)

*என்று ஆண்டாள் தம்முடைய நாச்சியார் திருமொழியில் பிரிவின்போது மழைபெய்தலையும் அதனால் ஏற்படுகின்ற துன்பத்தையும் விளக்குகிறார். மேலும் ஆழிமழைக்கண்ணா என்று தொடங்குகின்ற திருப்பாவை பாடலில் இடம்பெற்றுள்ள,*

ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து
தாழாதே சார்ங்க முதைத்த சரமழைபோல்
வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்தே லோரெம்பாவாய் ...

(நா.தி.பி., 477)

*என்ற பாடலில் உலகம் உய்யவேண்டும் என்பதால் மழைபெய்ய வேண்டும் என்று வேண்டுவதிலிருந்து கணியன்பூங்குன்றனின் யாதும் ஊரே யாவரும் கேளிர் என்ற உயர்ந்த நோக்கு ஆண்டாளுக்கும் இருந்தது என்பதைப் புலப்படுத்துகிறது.*

**பொழுது விடிதல்**

*சங்க இலக்கியத்தில் இயற்கை வருணனையை பாடியது போலவே பொழுதுவிடியும் காட்சியையும் பாடியுள்ளனர். என்பதற்குச் சான்றாக பலபாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. பொழுது விடிதலை கோழி உணர்த்துவதை,*

பொறிமயிர் வாரணம் வைகறை யியம்ப
யானையங் குருகின் சேவலொடு காமர்
அன்னங் கரைய அணிமயில் அகவ . . .

(மதுகா., 673-75)

*என்று எடுத்துக் காட்டுவதை நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் ஆண்டாள் நாச்சியாரும்,*

கீழ்வானம் வெள்ளென் றெருமை சிறுவீடு
மேய்வான் பரந்தன காண் . . .

(நா.தி.பி., 481)

*என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது.*

**ஆனைச்சாத்தன் ஒலி**

*பொழுது விடியும்போது அவ்விடியலை உணர்த்த ஆனைச் சாத்தன் என்ற பறவை ஒலியெழுப்பும். இச்செய்தி,*

நோன்சினை இருந்த விருந்தோட் புள்ளினம்
தாம்புணர்ந்த மையின் பிரிந்தோர் உள்ளாது
தீங்குரல் அகவக் கேட்டு நீங்கிய . . .

(குறுந்., 191)

*என்று எடுத்துக் காட்டுகிறது. ஆனைச்சாத்தனின் ஒலியை ஆண்டாள் தம் திருப்பாவையில்,*

கீசுகீசென்றெங்கும் ஆனைச்சாத்தன் கலந்து ...

(நா.தி.பி., 420)

*என்று எடுத்துக் காட்டுகிறார்.*

**சிறந்த ஊர்கள்**

*பண்டைத் தமிழ்ப் புலவர்கள் அவர்கள் வாழ்ந்த ஊர்கள் பலவற்றையும், மற்றும் சிறப்புற்றிருந்த ஊர்களையும் தங்கள் பாடலிலே குறிப்பிட்டிருந்தனர், என்பது,*

வேனிலா யினும் தண்புனல் ஒழுகும் தேனூர்

(ஐங்., 54)

*என்றும்,*

பகல்கொள் விளக்கொரு இராநாள் அறியா
வெல்போர்ச் சோழர் ஆமூர் . . .

(ஐங்., 56)

*என்றும் இடம் பெற்றுள்ளன. சங்க இலக்கியம் போலவே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் ஊர்கள் வருணிக்கப்படுகின்றன. அவை நூற்றியெட்டு வைணவத்திருப்பதிகளாக, தலங்களாக வழிபடப்பட்டு, பாடப்பட்டு உள்ளன.*

**செல்வம் நிலையாமை**

*பொருளீட்டுவதற்காக பிரிந்து சென்ற அக்காலத்திலேயே செல்வம் நிலையில்லாதது. அது இருக்கும்போதே அறச்செயல்கள் செய்ய வேண்டும் என்ற கொள்கையும் இருந்து வந்தது. செல்வமானது தான் சேர்ந்தவரை பெருமைக்குரியவர்களாக்கும். ஆனால் அவரை விட்டுப் பிரியும்போது மற்றவர்கள் இவர்கள் ஏழையர் என்று பரிகசிக்கும்படி சென்றுவிடும் என்பதை,*

மரீஇத் தாம் கொண்டாரைக் கொண்டாக்காற் போலாது
பிரியும்கால் பிறர்என்னப் பீடின்றிப் புறமாறும் திரு. . .

(கலி., 8)

*என்று குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யப்பிரபந்தம்,*

ஊனேறு செல்வத்து உடற்பிறவி யான் வேண்டேன்

(நா.தி.பி., 677)

*என்று கூறுகிறது.*

**ஆயர்கள் தொழில்**

*ஆநிரைகளை மேய்த்தலும், தயிர் கடைதலும் ஆயர்களின் தொழில்கள். திருமால் கண்ணனாக அவதரித்த குலமும் ஆயர்குலம். ஆயர்கள் முல்லை நிலத்தில் வசிப்பவர். முல்லை நிலக் கடவுளும் திருமால் ஆதலால் கண்ணன் முல்லைநிலம், ஆயர்கள் இவர்களோடு பொருந்தியிருப்பது சிறப்பான ஒன்றாகும்.*

சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்
உறுதுயர் அலமரனோக்கி யாய் மகள்
நடுங்கு சுவலசைத்த கையள் கைய
கொடுங்கோற் கோவலர் பின்னின்றுய்த்தர
இன்னே வருகுவர் தாய ரென்போள் . . .

(முல்., 12-16)

*என்ற பாடலில் கன்று தன் தாயைத் தேடுவதை அறிந்த ஆயர்குலப் பெண் உன் தாயாகிய பசு கோவலர் பின்தொடர உனைத்தேடி ஓடிவருவாள் என்று கூறுவதாக அமைந்துள்ளது. இதிலிருந்து ஆயர்கள் ஆநிரை மேய்த்தல் தங்களின் தலையாய கடமையாகக் கருதினர் என்பது விளங்குகிறது. இந்த ஆயர்களின் தொழிலை, ஆண்டாள் தன்னுடைய திருப்பாவையில்,*

கற்றுக் கரவைக் கணங்கள் பலகறந்து
செற்றார் திறலழியச் சென்று செருச் செய்யும்
குற்றம் ஒன்றில்லாத கோவலர் . . .

(நா.தி.பி., 484)

*என்று குறிப்பிடுகிறார். ஆயர்கள் குற்றமற்றவர்கள் என்றும் ஆநிரை மேய்த்தல் மட்டுமன்றி போர் செய்தலையும் போற்றக் கூடியவர்களாக இருந்தனர் என்பதை அறிவுறுத்துகிறது. கண்ணனின் குறும்புகளை தாங்க முடியாமல் யசோதை ''இவன் வீட்டில் இருந்தால்தானே தொந்தரவு காட்டில் கன்றின் பின் போக்கிவிட்டால் ஊரார் பழிச்சொல்லில் இருந்து தன்மகன் தப்பலாமே. குலத்தொழில் புரிந்தது போன்று இருக்கும் என தீர்மானித்து ஆனிரை மேய்க்க அனுப்பி வைக்கிறாள்''[4] என்று கூறுகிறார்.*

**அணிகலன்கள்**

*சங்ககால மகளிர் பொன்னாலும், மணியாலும், முத்தாலும் ஆன அணிகலன்களை அணிந்திருந்தனர் என்பதை சங்கப் பாடல்கள் எடுத்துக் காட்டுகின்றன. அவ்வணிகளுள் முத்து மிகவும் போற்றப்பட்டது. முத்து பற்றிய செய்தி நாலாயிர திவ்யப்பிரபந்தத்திலும் இடம் பெற்றுள்ளன. பாண்டிய நாடு முத்தினால் பெருமையுடையதாகப் போற்றப்பட்டுள்ளது. சங்ககால மகளிர் முத்தினால் ஆன வளையல்களை அணிந்து இருந்தனர். முத்துக்களிலேயே கொற்கை நாட்டு முத்து சிறப்புடையதாகக் கருதப்பட்டது.*

வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென்கடல் முத்தும் குணகடல் துகிரும்
கங்கை விரியும் காவிரிப் பயனும்

*(ப.பா., 187-190)*

என்று முத்தால் ஆன அணிகலன்களை விளக்குகிறது. முத்துப் பற்றி நாலாயிர திவ்யப்பிரபந்தம்,

முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னும்

(நா.தி.பி., 24)

என்று எடுத்துக் காட்டுகிறது. ஆண்டாளின் திருப்பாவையில் பெண்களின் அணிகலன்களாகிய சூடகமே, தோல் வளையே, தோடே, செவிப்பூவே, பாடகமே போன்ற அணிகலன்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. சங்க காலத்தில் முத்தை மக்கள் அணிகலன்களாகப் பயன்படுத்தினர். ஆனால் திவ்யப்பிரபந்த காலத்தில் முத்து மனிதர்களால் பயன்படுத்தப்படுவதோடு திருமாலுக்கும் அணிவிக்கப்பட்டதை எடுத்துக் காட்டுகிறது.

**அகில் சந்தனம் புகைத்தல்**

சங்க காலத்தில் மகளிர் தங்கள் கூந்தலுக்கு அகில் சந்தனம் முதலிய வாசனைப் புகைகளை இட்டனர் என்ற செய்தி சங்க இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகிறது.

இருங்காழ் அகிலொடு வெள்ளயிர் புகைப்ப

(நெ.ந.வா., 56)

என்று சங்க இலக்கியம் எடுத்துக் காட்டுவதை நாலாயிர திவ்யப்பிரபந்தம்,

அரிவிரவு முகிற்கணத்தால் அகிற்புகையால் வரையோடும்

(நா.தி.பி., 1669)

என்று எடுத்துக் காட்டுகிறது.

**நிமித்தம்**

சங்ககால மக்களின் வாழ்வோடு தொடர்புடையதாக நிமித்தமும் அமைந்துள்ளது. அவர்களின் மனநிலைக்கேற்ப நிமித்தம் அமைதல் அவர்களது நம்பிக்கையை எடுத்துக் காட்டுகிறது. நிமித்தங்கள் நாள் நிமித்தம், புள்நிமித்தம், ஏனைய நிமித்தங்கள், மாந்தர் தொடர்பான நிமித்தங்கள், தெய்வம் தொடர்பான நிமித்தங்கள் என்று பிரிக்கப்படுகின்றன. நிமித்தத்தைப் பற்றி தொல்காப்பியம்,

அச்சமும் உவகையும் எச்சமும் இன்றி
நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்

காலங் கண்ணிய ஓம்படை உளப்பட
ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பின்
காலம் மூன்றொடு கண்ணிய வருமே[5]

என்று குறிப்பிடுகிறது. புள் என்பது பறவைகளைக் குறிப்பிடும் சொல்லாகும். "பறவைகளின் குரலைக் கேட்டு நன்னிமித்தம் காணும் வழக்கம் இருந்தது காரணமாக புள் என்ற சொல்லிற்கு நன்னிமித்தம் என்ற பொருளும் சங்க காலத்திலே தோன்றியது."[6]

**கோள் நிமித்தம்**

வெண்மை நிறமுடைய கோள் வெள்ளியாகும். இது மாலை அல்லது காலையில்தான் காணப்படும். இது மழைக்கோளாகும். வெள்ளிமீனைப் பற்றி சங்க இலக்கியத்தில் பதிற்றுப்பத்து குறிப்பிடுகிறது. இதனால் "வெள்ளி என்றும் கோள்மீன் வடதிசைக்கண் இருப்பின் மழைபெய்யும் என நாட்டுமக்கள் நம்பினர் என்பது பெறப்படும்."[7] வெள்ளி என்ற கோளை ஆண்டாள் தம் திருப்பாவையில்,

வெள்ளியெழுந்து வியாழனுறங்கிற்று
(நா.தி.பி., 486)

என்று குறிப்பிடுவதிலிருந்து வெள்ளி என்ற கோள் விடியற்காலை பொழுதை உணர்த்துவதை வெளிப்படுத்துகிறது.

நிமித்தம் பார்க்கும் பழக்கமானது நீதி இலக்கிய காலத்திலும் இருந்திருக்கிறது. அவர்கள் நல்ல செயல்களை செய்வதற்கு நாள் பார்த்தனர் என்பதை சிறுபஞ்சமூலம் (44) எடுத்துக் காட்டுகிறது.

தலைவனைப் பிரிந்த தலைவி பிரிவுகாலத்தில் தலைவனின் வருகையை எதிர்நோக்கி இருக்கும்போது பல்லி அழைத்தல் போன்ற செய்திகள் தலைவன் வருகையை அறிவுறுத்துகிறது என்பது கருத்தாகும். பல்லி அழைத்தலை சங்க இலக்கியம்,

பல்லியும் பாங் கொத் திசைத்தன
நல்லெழில் உண்கணும் ஆடுமாலிடனே
(கலி., 10)

என்று குறிப்பிடுவதை நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில்,

கொட்டாய் பல்லிக் குட்டி
குடமாடி உலகளந்த
மட்டார் பூங்குழல் மாதவனை வர
கொட்டாய் பல்லிக் குட்டி

(நா.தி.பி., 1945)

என்று பல்லியை திருமாலாகிய தலைவன் வரவேண்டும் என்று அழைக்க வேண்டிய பாசுரமாக இடம் பெற்றுள்ளது. "ஆண்டாள் திருமாலைப் பிரிந்ததால் மீண்டும் திருமாலை அடைவதற்காக கூடல் என்ற முறையை நம்பிக்கையின் பொருட்டு ஏற்படுத்தியுள்ளார்"[8] என்று கூடலிழைத்ததையும் ஒருநிமித்தமாக எடுத்துக் காட்டுகிறார்.

கூடலிழைத்தல் என்பது தலைவன் தலைவியரின் களவு வாழ்க்கையில் தலைவியால் செய்யப்படும் நிகழ்ச்சியாகும். தலைவி தான் விரும்பிய தலைவனை அடையமுடியுமா என்று இதன் வாயிலாக அறிவாள். "பெண்கள் தங்கள்முன் மணலைப் பரப்பி கண்களை மூடிக்கொண்டு வலக்கை ஆள்காட்டி விரலால் மணலில் ஓரிடத்தில் சுழிக்கத் தொடங்கிச் சிறுசிறு சுழிகள் வருமாறு வட்டமாகப் போட்டுக் கொண்டே செல்வர். போடும் முதற்சுழி இறுதிச்சுழியுடன் பொருந்தக் கூடினால் காரியம் கைகூடும் என்று களிப்படைவர். கூடாமல் தவறினால் காதல் தோல்வி என்பது பொருள். இவ்வாறு குறிபார்க்கும் செயல் கூடலிழைத்தல் என்று வழங்கப் பெறும்"[9,10] என்று கூடலிழைத்தலை விளக்குகிறார். இதிலிருந்து கூடலிழைத்தலும் பெண்களின் நம்பிக்கையாகவும் நிமித்தமாகவும் இருந்ததை அறியலாம்.

**சங்ககால மக்கள் பயன்படுத்திய மலர்கள்**

மனிதனின் வாழ்க்கையில் நெருங்கிய தொடர்புடையது மலர்களாகும். சங்க இலக்கியத்தில் ஐந்திணைப் பாடல்களுக்கு ஏற்ப அங்கிருக்கும் மலர்கள் கருப்பொருளாகவும், வருணனையாகவும் பாடப்பட்டுள்ளன. சங்க காலத்தில் குறிப்பிடப்பட்ட மலர்கள் பல நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் குறிப்பிடப் பட்டுள்ளன. அவற்றுள் சில மலர்கள் இன்று இல்லாமலும் இருக்கின்றன எனலாம்.

செறுத்த செய்யுள் செய் செந்நாவில்
வெறுத்த கேள்வி விளங்கு புகழ் கபிலன்

(புறம்., 53)

என்று போற்றப்படும் கபிலரால் இயற்றப்பட்ட குறிஞ்சிப்பாட்டில் ஏறக்குறைய தொண்ணூறு மலர்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. அவற்றுள் துளசியும் ஒரு மலராகப் போற்றப் பட்டுள்ளது.

**கொன்றை மலர்**

கொன்றை மலர் பற்றிய செய்தியானது, முல்லைப் பாட்டு, குறிஞ்சிப் பாட்டு போன்ற இலக்கியங்களில் குறிப்பிடப் பட்டுள்ளது. மேலும்,

கண்ணி கார்நறுங் கொன்றை காமர்

(மதுரைக்., 277)

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கொன்றை கொத்தாகப் பூக்கும். இக்கொத்தும் ஒரே தொகுப்பான கொத்து அன்று. மேலே மலரும், கீழ்கீழே போது, முகை, அரும்பு நனை என்றும் அடுக்குமாக நீண்டிருக்கும். இக்கொன்றை மலரை சிவபெருமான் சூடியிருப்பதாக நாலாயிர திவ்யப்பிரபந்தம்,

தாதுலாவு கொன்றை மாலை துன்னு செஞ்சடைச்சிவன்

(நா.தி.பி., 760)

என்று குறிப்பிடுகிறது.

மேலும், தாமரை, நெய்தல், வள்ளிதழ், முல்லை, குவளை, கோங்கம், ஆம்பல், காந்தள், சண்பகம், ஞாழல், காயாமலர், புன்னை, நாகமலர், தாழை, செருந்தி, வாகை, அலரி, குறிஞ்சி, வேம்பூ, கோடல், அணிச்சம், வெட்சி, கூவிளம், வாகை குடசம், செருவிளை, கருவிளை, பாதிரி, செருந்தி, சரந்தை குல்லை, பிடவம், மௌவல், ஆத்தி, பலாசம், பிண்டி, வஞ்சி, பித்திகம், சிந்து, வாரம், தும்பை, தூஅய், நந்தி, நறவம், புன்னாகம், குருக்கத்தி போன்ற மலர்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளன. இவற்றைத் தவிர சங்க இலக்கியத்தில் மல்லிகை மலர் பற்றிய குறிப்புகள் காணப்படவில்லை எனலாம். ஆனால் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் மல்லிகை மலர் குறிப்பிடப் பெற்றுள்ளது. பெரியாழ்வார் திருமொழியில் கண்ணனைக் குழந்தையாகவும், தன்னை யசோதையாகவும், பாவித்து பூச்சூடல் என்ற ஒரு பதிகத்தையே

பாடியுள்ளார். இதைத்தவிர பல இடங்களில் மலர்கள் குறிப்பிடப் பெற்றுள்ளன. அவை,

புன்னை செருந்தியோடு புனவேங்கையும் கோங்கும் நின்று

(நா.தி.பி., 351)

என்று கோங்க மலரைக் குறிப்பிடுகிறது. கோங்க மலர் பொன்னிறம் வாய்ந்தது. காந்தள் மலரைப் பற்றித் திவ்யப்பிரபந்தம்,

காந்தல் விரல் மென்கலை நன்மடவார்

(நா.தி.பி., 1358)

என்று காந்தள் மலரானது பெண்களின் கைவிரலுக்கு உவமையாகச் சுட்டப்படுகிறது. நாலாயிர திவ்யப்பிரபந்தம் பாதிரி மலரை,

பச்சைத்த மனகத்தோடு பாதிரிப்பூ சூடவாராய்

(நா.தி.பி., 184)

என்று பாதிரிப் பூவைக் குறிப்பிடுகிறது.

| | |
|---|---|
| *முல்லை மலர்* | *(நா.தி.பி., 255)* |
| *தாமரை* | *(நா.தி.பி., 1777)* |
| *ஞாழல்* | *(நா.தி.பி., 1772)* |
| *குவளை* | *(நா.தி.பி., 1788)* |
| *சண்பகம்* | *(நா.தி.பி., 182)* |
| *குருக்கத்தி* | *(நா.தி.பி., 186)* |
| *ஆம்பல்* | *(நா.தி.பி., 220)* |
| *நெய்தல்* | *(நா.தி.பி., 1749)* |

ஆகியன இடம் பெற்றுள்ளன. புன்னை மரம் பெரும்பாலும் கடற்கரையோரங்களில் வளரக்கூடியது. ஞாழல் மரத்தின் தழைகளைக் கொய்து இளமகளிர் தழையாடையாக உடுப்பர். காயாமலர் நீலநிறம் போன்றது. பூவை என்ற சொல் நாகனவாய்ப் பறவையையும், காயாவையும் குறிக்கும். பிடரிமலர் முல்லை நிலத்தில் பூக்கும். தளாமலர் கார்காலத்தில் மாலை நேரத்தில் செம்மை நிறத்தில் அரும்பி மலர்ந்திருக்கும். குருத்து மலர் பாம்பின் தலைபோன்ற வடிவத்துடன் காணப்படும். பித்தி, பித்திகை, பித்திகம் என்னும் சொற்களால் குறிக்கப்படும். “இப்பூவை பிச்சிப்பூ என்று இக்காலத்தில் வழங்கப்படுகிறது. இக்காலத்தில் தாவர இயற்பெயர்களால் இதனைக்

குறிப்பிடுகின்றனர்."[11] இதனால் மலர்கள் சங்க இலக்கியக் காலத்தில் பெற்றிருந்த சிறந்த இடத்தை அறிய முடிகிறது.

**திருமால் பெயரில் அமைந்த சங்கப் புலவர்கள்**

1. அச்சுதனார்
2. இறையனார்
3. கண்ணனார்
4. கேசவனார்
5. கோவர்த்தனார்
6. தாமோதரனார்
7. பேயனார்
8. பூதனார்

இவர்களுள் பேயனார், பூதனார் இவ்விருவரது பெயர்களும் ஆழ்வார்களது பெயர்களாகவும் இருந்தது என்பதால் பெயர்களும் செல்வாக்குற்று இருந்ததை அறிய முடிகிறது.

**சங்ககால ஊர்களுள் திவ்யப்பிரபந்தத்திற்குப் பொருந்துவன**

1. கோட்டியூர் - திருக்கோட்டியூர்
2. தங்கால் - பாண்டி நாட்டிலுள்ள திருத்தண்காலென இக்காலத்து வழங்கும் திருமாலின் நூற்றெட்டு திருப்பதிகளுள் ஒன்று. வில்லிபுத்தூருக்கு அருகில் உள்ளது.
3. மதுரை -
4. கச்சிப்பேடு - காஞ்சிபுரத்தைச் சார்ந்த ஊர். திருக்கச்சிப்பேடு என திவ்யப்பிரபந்தத்துள் குறிப்பிடப் பெற்றது.
5. ஆலி - சோழ நாட்டின் உள்நாடுகளுள் ஒன்றாகிய ஆலிநாலி என்பதன் தலைநகர். இது திருமங்கையாழ்வார் அவதரித்த தலமென்பர். இது திருஆலி என வழங்கப்படுகிறது.

**பெற்றோரோடு தொடர்ந்த பெயர்கொண்ட புலவர்**

"1. அண்டர் மகன் குறுவழுதியார்

2. அஞ்சியத்தை மகள் நாகையார் என்று பெற்றோரோடு தொடர்ந்து பெயர்கொண்ட புலவர்கள் 30 பேர் இருக்கின்றார்கள். எந்த ஓர் ஆண்பாற் புலவர்க்கும் முன்னால் தாயின் பெயர் வாராமையும், தந்தையின் பெயரே வருகின்றமையும் குறிப்பிடத் தக்கனவாகும். நாகையார் என்ற பெண்பாற் புலவருக்கு முன்னால் அஞ்சியத்தை என்ற அவர் தாயின் பெயர் காணப்படுகிறது."[12] இவர்களைப் பின்பற்றி ஆண்டாளும் 'பட்டர்பிரான் கோதை' என்று தன்னைக் குறிப்பிடுகிறார்.

ஐம்பெரும் பூதங்களை ஆண்டவனாகக் கண்ட சங்கப் புலவர்கள் பூதம் என்னும் பெயரையே தம் இயற்பெயரோடு இணைத்துக் கொண்டனர். "இளம்பூதனார் முதல் வெண்பூதனார் ஈறாகப் பதினெண்மர் இப்பட்டியலில் இடம் பெற்றுள்ளனர். இன்றும் கண்ணுக்கும், கருத்துக்கும் எட்டாமல் காலத்துக்கும் கரையானுக்கும் இறையாகிப்போன பூதர்கள் கணக்கிலிடங்கார் என்பது வெள்ளிடையர்."[13] பிற்காலத்தில் தோன்றிய பூதத்தாழ்வாரும் இதிலடங்குவர்.

**வைணவம்**

இந்தியாவில் இருந்த பழம்பெரும் சமயங்கள் வைணவமும் சைவமும் ஆகும். சைவ சமயம் சிவபெருமானை அடிப்படையாக வைத்துப் பாடப்பட்டுள்ளது. சைவப் பாடல்களைப் பாடியவர்கள் நாயன்மார்கள் ஆவர். இவர்கள் அறுபத்துமூவர் என்று சேக்கிழார் பெரியபுராணம் குறிப்பிடுகிறது. தற்போது கிருபானந்தவாரியாரைச் சேர்த்து அறுபத்து நான்காக நாயன்மார்கள் குறிப்பிடப் பெறுகின்றனர்.

திருமாலை அடிப்படையாக வைத்துப் பாடப்பட்டது வைணவமாகும். வைணவப் பாடல்களைப் பாடியவர்கள் ஆழ்வார்கள். இவர்கள் பன்னிருவர். சைவத்திற்கு ஒரு காரைக்காலம்மையாரைப் போல, வைணவத்திற்கு ஒரு ஆண்டாள் நாச்சியார். இவர் ஒருசமயம் திருமாலுக்கென்று சூடவைத்திருந்த

பூமாலையை தான் சூடி அழகுபார்த்துவிட்டு திருமாலுக்குச் சூட கொடுத்தார். திருமாலும் அவளது உண்மை அன்பை, பக்தியையறிந்து அதனை ஏற்றுக்கொண்டார். அதனால் அவர் சூடிக்கொடுத்த சுடர்க்கொடி என்று அழைக்கப்பட்டார். பன்னிரு ஆழ்வார்கள் பாடியதே நாலாயிர திவ்யப் பிரபந்தமாகும். சைவசித்தாந்தத்தைப் போன்றே வைணவத் தத்துவங்களும் சிறப்புடையதாக விளங்குகின்றன.

வைணவத் தத்துவங்கள் வடமொழியில் தோன்றியதால் வைணவர்கள் இருபிரிவாயினர் என்பதை, "வைணவத் தத்துவங்கள் வடமொழியில் எழுதப்பட்டதால் எதிர்பாராத விளைவு ஒன்று ஏற்பட்டது. வடமொழியைச் சிறப்பாகப் போற்றும் வைணவர்கள் தமிழ்நாட்டில் பெருகினர். வடமொழியையும், தமிழையும் சமமாகக் கலக்கும் மணிப்பிரவாள நடையை வைணவருள் ஒரு சாரார் போற்றினர். வைணவ சமயத்தில் சிறப்பு வடமொழிக்கா, தமிழ் மொழிக்கா என்ற பிரச்சினை தோன்றியது. தமிழ்நாட்டு வைணவர்கள் இரண்டுபட்டனர். வடமொழி நூல்களுக்கு முக்கியத்துவம் வழங்கியோர் வடகலை வைணவரென்றும் தமிழ் பிரபந்தங்களுக்கு முக்கியத்துவம் வழங்கியோர் தென்கலை வைணவரென்றும் அழைக்கப் பட்டனர்"[14] என்று வைணவர்களின் இருபிரிவைக் குறிப்பிடுகிறார். வைணவம் என்ற சொல் யஜூர் வேதத்திலிருந்து தோன்றியது. இருக்கு வேதமோ ஆதித்தனை விஷ்ணு என்று குறிப்பிடுகிறது. வைணவம் என்ற சொல் வழக்கில் வந்ததைப் பற்றி, "சமஸ்கிருத மொழியிலேயே வைணவம் எனும் சொல் மிகப் பிற்பட்ட காலத்தில்தான் வழக்கிற்கு வந்தது என்று கருதுவர். தமிழில் வைட்டணவன் என்னும் சொல்லைப் பெரியாழ்வார்தான் தம் திருமொழியில் முதன்முதலில் கையாளுகிறார்"[15] என்று குறிப்பிடுகிறார். வைணவன் என்பவன் "பிற உயிர்கள் துன்பப்படுவதைக் கண்டால் அந்தத் துன்பம் தனக்கு வந்ததாகக் கருதுபவன், அவனே இந்து"[16] என்றும் வைணவன் என்றும் குறிப்பிடப் பெறுகின்றனர்.

இவ்வாறு வைணவம் சமணத்தையும், பௌத்தத்தையும் வலுவிழக்கச் செய்வதற்காக மறுமலர்ச்சி அடையினும் ஆழ்வார்களால் சிறந்ததொரு

வளர்ச்சியை அடைந்து தமிழ் மொழியையும் வளர்ச்சியடைய செய்துவிட்டது எனலாம்.

**அந்தணர்கள்**

தமிழகத்தில் ஏறத்தாழ இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அந்தணர்கள் வாழ்ந்து வந்தனர். அந்தணர்கள் பற்றிய குறிப்பு சங்க இலக்கியங்களில் காணப்படுகிறது. அந்தணர்களில் சிலர் துறவுபூண்டு, சந்நியாசியாக வாழ்ந்து வந்தனர். அவர்களை திரிதண்டர், ஏகதண்டர் என்று குறிப்பர். பக்குவப்பட்டு துறவு பூணுதல் திரிதண்ட சந்நியாசிகள் என்றும் இளம் வயதிலேயே இல்வாழ்க்கையைத் துறந்து பின்னாளில் மனப்பக்குவப் படுதல் ஏகதண்ட சந்நியாசிகள் எனப்படுவர். திரிதண்ட சந்நியாசியையே முக்கோற்பகவர் என்று தமிழிலக்கியங்கள் குறிப்பிட்டன.

அந்தணர்களைப் பற்றிக் குறிப்பிடும்போது, "ஒருவன் உபநயனம் செய்விக்கப்பட்ட பின்னரே வேதங்களைக் கற்க உரியன் ஆவான். உபநயனமே அவனுக்கு இரண்டாம் பிறப்பு. அப்போது காயத்ரி தாய் ஆசிரியன் தந்தை. நான்கு வேதங்களைக் கற்றல் வேண்டும். இல்லையேல் மூன்று, இரண்டு வேதங்களையேனும் இல்லையேல் ஒன்றையேனும் கற்றல் வேண்டும். ஒவ்வொரு வேதத்தையும் கற்கப் பன்னிரண்டு ஆண்டே காலம் என தர்மசாஸ்திரங்கள் குறிப்பிடுவதாகக் கூறுகிறார்."[17] அந்தணர்களின் தொழிலை,

அறம்புரி அருமறை நவின்ற நாவின்
திறம்புரி கொள்கை அந்தணர் . . .

(ஐந்., 387)

என்று அந்தணர்கள் வேதம் ஓதுதலையே தொழிலாகக் கொண்டவர்கள் என்பதை எடுத்துக் காட்டுகிறது. இதனை நம்மாழ்வார்,

வேதம் வல்லார்களைக் கொண்டு வின்கணார்
பெருமான்

(நா.தி.பி., 3069)

என்று குறிப்பிடுகிறார். வைணவர்கள் திவ்யப்பிரபந்தத்தை வேதமாகவே போற்றியும் பாராயணம் செய்தும் வருகிறார்கள். "வேதத்தில் தெளிவுபடாத

இடங்களுக்குத் திவ்யப்பிரபந்தம் தெளிவுபெறும்படி செய்கிறது என்பர். தெளியாத மறைநலங்கள் தெளிகின்றோமே"[18] என்று கூறுவதனால் இது புலனாகும் என்று வேதத்தைப் போன்றே நாலாயிர திவ்யப்பிரபந்தம் உயர்வானதாக இருப்பது விளங்குகிறது.

## ஆழ்வார்கள் - பொருள்

திருமாலைத் தன்னுடைய தலைவனாகவும், காக்கும் கடவுளாகவும் பாடி பக்தியில் திளைத்தவர்கள் ஆழ்வார்கள் என்றழைக்கப்பட்டனர். ஆழ்வார்கள் என்பதற்குப் பலர் பலபொருள்களைக் கூறுகின்றனர். "ஆழ்வார் என்னும் சொல்லுக்கு இறைமைக் குணங்களில் ஆழ்ந்து ஈடுபடுவோர் என்பது பொருள். வேறொன்றில் கண்வையாதே பகவத் குணங்களிலே ஆழங்காற்பட்டிருந்தமையால் இவர்களுக்கு ஆழ்வார்கள் என்று பெயராயிற்று"[19] என்றும், "ஆழ்வார்கள் பக்திப் பூங்கோயிலை எழுப்பினவர்கள் என்றும் ஆசாரியர்கள் அப்பூங்கோயிலுக்கு ஞானக்கோட்டை கட்டினவர்கள் என்றும் சிறப்பித்துக் கூறுவதுண்டு."[20] "ஆசாரியர்களோ ஆழ்வார்களின் அடிச்சுவட்டைப் பின்பற்றி வைணவ சித்தாந்தத்தை வளர்த்த மெய்யன்பர்கள் ஆவார்"[21] என்று ஆழ்வார்களின் உயர்தன்மையைச் சுட்டுகிறார். மேலும் "ஆழ்வார்கள் திருமாலடியார்கள். திருமாலின் மங்கள குணத்தில் ஆழ்பவர்கள். இக்காரணத்தில் ஆழ்வார்கள் என்னும் திருநாமம் ஏற்பட்டது"[22] என்று ஆழ்வார் என்ற சொல்லின் பொருளைக் குறிப்பிடுகிறார். இவற்றிலிருந்து ஆழ்வார் என்பது அவர்கள் திருமால்மீது கொண்டிருந்த அளவற்ற பக்தியும் ஆழ்ந்த பக்தியும் புலப்படுகிறது.

## நம்மாழ்வார் சிறப்பு

கவிச்சக்கரவர்த்தி கம்பர் இராமகாதையைப் பாடப் புகுந்தபோது நம்மாழ்வாரையே போற்றிப் புகழ்ந்து பாடியுள்ளார். "கம்பநாட்டாழ்வார் இராமாயணத்தின் ஆறு காண்டங்களையும் பக்திநயத்துடன் பாடி முடித்து அதனைத் திருவரங்கத்தில் அரங்கேற்றச் சென்றார். அப்பொழுது அரங்க மாநகரத்து அச்சுதன் அவரது கனவிலே எழுந்தருளி எம்மை நீ பாடினாய் அன்றி நம் சடகோபனைப் பாடினாயோ - அவனையும் நீ பாடினால்தான் உனது

இராமாயணத்தை நாம் ஏற்போம் என்று திருவாய் மலர்ந்தார். அக்கனமே கம்பர் ஆசாரியார்மீது நூறு கட்டளைக் கலித்துறைப் பாக்களால் சடகோபர் அந்தாதி இயற்றினார். அதன்பிறகே அவருடைய இராமாயணம் அரங்கேற்றம் செய்யப்பட்டது"[23] என்று குறிப்பதிலிருந்து நம்மாழ்வார் மற்ற ஆழ்வார்களை விட இறையன்பு மிகுந்தவர் என்றும் புலனாகிறது. அது மட்டுமல்லாமல் நம்மாழ்வாரைத் தவிர ஏனைய பதினொரு பேரும் உடலாகவும் நம்மாழ்வார் மட்டுமே உயிராகவும் விளங்கினார் என்பது அறியத் தக்கது. அது மட்டுமல்லாமல் நூற்றியெட்டு திருமாலின் திவ்யத் தலங்களை மற்ற ஆழ்வார்கள் சென்று பாடினர் என்றும் அத்திருத்தலங்கள் அனைத்துமே நம்மாழ்வார் அமர்ந்திருந்த இடத்திலேயே அவரது பார்வையில் பட்டு அவர் பாடியபின் மறைந்தன. இருந்த இடத்தில் இருந்தே நம்மாழ்வார் மட்டும் அனைத்துத் திருபதிகளையும் பாடினார் என்று கூறுவர். இதிலிருந்து நம்மாழ்வாரின் சிறப்புப் புலப்படுகிறது.

### குலசேகரர் சிறப்பு

இராமகாதையைப் பாடுவதில் சிறந்தவரான குலசேகர ஆழ்வார் சேரநாட்டு அரசன் ஆவார். அவரைப் பற்றிக் குறிப்பிடும்போது, "மக்களுக்கு பெருமகிழ்ச்சி வழங்குவன மக்களுணர்ச்சிகள் அவற்றைப் புலவன் உடலோடு காட்டுழி அம்மகிழ்ச்சி சொல்லிலடங்காத் திறத்ததாம். அதன்பின்னர் வருவனவே இயற்கையுருவின்கண் ஈடுபாடுகள். மேற்கூறிய கருத்துக்களை உளத்துட்கொண்டு குலசேகரப் பெருமானின் பெருமாள் திருமொழியை நாம் படித்தால் அதன் ஒப்புயர்வற்ற புலமைத் திறத்தை உணரலாம்"[24] என்று அவரது பாசுரங்களின் சிறப்பைக் கூறுகிறார். "குலசேகர ஆழ்வாரின் பெருமையை, இராமனின் போர்களக் காட்சியை இராமாயணத்தில் வியாக்கியானித்துக் கூறும்போது உணர்ச்சி வசப்பட்டு இராமனுக்குத் துணைநிற்கத் தமது படைகளைத் திரட்டிப் போர்க்களம் செல்லுமாறு உத்தரவிட்ட சவிநிருதயர் குலசேகரர்"[25] என்று அவரது இராமபக்தியைக் குறிப்பிடுகிறார். கண்ணனது பால சேஷ்ட்டிதங்களைக் காணப்பெறாத தேவகியின் புலம்பலும், தனயன் கானேகத் தயரதன் புலம்பலும் நெகிழ வைக்கக் கூடியதாக பாடியுள்ளார்.

**மதுரகவியாழ்வார் சிறப்பு**

மதுரகவியாழர்வார் நம்மாழ்வாரின் சீடராவார். அவர் திருமாலை பாடுவதோடு நம்மாழ்வாரையும் பாடினார். மேலும், ஒருமுறை மதுரைத் தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த சில புலவர்களுக்கும் மதுரகவியாழ்வார்க்கும் வாக்குவாதம் நிகழ்ந்தது. கண்ணன் கழலினை நண்ணும் நாணமே என்னும் நம்மாழ்வார் பாசுரத்தை மதுரகவியாழ்வார் தமிழ்ச் சங்கத்திடம் கேட்டார். நம்மாழ்வாரின் பாசுரத்திற்குப் பொருள் புரியாது புலவர்கள் திகைத்தனர். அவர்கள் அப்பாசுரத்தை சங்கப் பலகையில் வைத்து அவர்களும் அதில் ஏறி அமர்ந்தனர். சங்கப் பலகை செருக்குற்ற புலவர்களைக் கீழே தள்ளியது. ஏட்டை மட்டும் சுமந்து நின்றது. நம்மாழ்வார் மீது செருக்குறா புலவர்கள் அகந்தையடக்கி ஒடுக்கி அவரது அடிபணிந்து போற்றினர். பைந்தமிழ் பாக்களால் அவரது மலரடி தொழுது ஏற்றிப் புகழ்ந்தனர்''[26] என்று நம்மாழ்வாரின் பெருமையையும், மதுரகவியாழ்வார் நம்மாழ்வார் மீது கொண்டுள்ள பக்தியையும் விளக்குகிறார்.

சங்ககால மக்களுக்கு இறைநம்பிக்கை இருந்தது என்பது சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. திருமால், சிவன், முருகன் பற்றிய பாடல்களால் அறிய முடிகிறது. இவற்றுள் திருமால் காக்கும் கடவுளாகவே போற்றப்பட்ட செய்தி அன்று முதல் இன்றுவரை யாவரும் அறிந்த செய்தியாக விளங்குகிறது.

“தெய்வபக்தி உள்ளவர்கள் ஒன்றாகக்கூடி இசைக் கருவிகளுடன் இறைவனைப் பற்றிய பாடல்கள் பாடினர்''[27] என்றும் “இம்மையில் செய்யும் பாவபுண்ணியங்கள் மறுமையிலும் தொடரும்''[28] என்றும் நம்பினர். இந்த நம்பிக்கையே பிற்காலத்தில் தேவாரம், திருவாசகம், நாலாயிர திவ்யப்பிரபந்தம் போன்ற பக்தி இலக்கியங்கள் தோன்றி வளர்வதற்குப் பெரும் காரணமாக இருந்தது எனலாம்.

ஆண்டாளின் திருப்பாவையில் பரிபாடல் குறிப்பிடும் கூட்டுவழிபாட்டு முறை காணப்படுகிறது. அவர் குறிப்பிட்ட “சங்கத் தமிழ்

மாலை முப்பதும் தப்பாமே" என்ற திருப்பாவையின் இறுதிப்பாடலில் இடம் பெற்றுள்ள தொடரானது கூட்டமாகச் சென்று வழிபட்டனர் என்ற பொருளில் அமைந்திருப்பது குறிப்பிடத் தக்கது.

இறைவன் உலகில் உள்ள எல்லா உயிர்களிடத்தும் நீக்கமற நிறைந்திருப்பதோடு ஏற்றத்தாழ்வில்லாமல் இருப்பவன் என்பதை அவன் எடுத்த அவதாரங்களே எடுத்துக் காட்டுகின்றன. இறைவன் உலகப் படைப்பிற்குமுன் சூக்குமமாக இருக்கும் தன்மையை முதற்காரணமாகவும், இறைவன் உலகம் படைக்க எண்ணுவது நிமித்த காரணமாகவும் இறைவனுடைய ஞானம் சக்தி ஆகியவைகளை துணைக் காரணமாகவும் கொண்டு படைப்பதால் இறைவன் உலகப் படைப்பிற்கு மூன்று காரணங்களாக உள்ளான் என்பது மெய்பொருளியலாரின் முடிபாகும்." திருமாலை காக்கும் கடவுளாகக் கூறினும் பரிபாடல் கவிஞர்களும், ஆழ்வார்களும் படைத்தும், காத்தும் அழிக்கவும் கூடியவன் திருமாலே என்றும் தம் பாடல்களாலும் பாசுரங்களாலும் குறிப்பிடுகின்றனர். உலகிற்கு இறைவன் எப்படி இருக்கிறான் என்பதை, "உலகிற்கு இறைவன் மூன்று காரணமாக உள்ளான் என்பது வைணவ சித்தாந்தம். உயிரில்லாத உலகப் பொருள் அனைத்திற்கும் மூலப்பகுதி, பிரகிருதி காரணமாகும். ஒரு பொருள் உண்டாவதற்கு மூன்று காரணங்கள் கூறுவதுண்டு. மண் - சக்கரம் - குயவன், இம்மூன்று காரணங்களாகவும் உலகத்தோடிஷத்திற்கு இறைவன் இருக்கிறான் என்பது வைணவசமயக் கொள்கை"[30] என்று குறிப்பிடுகிறார்.

ஒரு மனிதனுடைய வாழ்வில் அவன் கொண்டது எச்சமயமாக இருப்பினும் அதுவே அவனை நெறிப்படுத்துகிறது எனலாம். புயலால் மோதப் பெற்ற ஒரு மரக்கலத்தை நங்கூரம் எப்படி நிலை நிறுத்துகிறதோ அப்படியே துன்பச் சூழலில் சிக்குண்ட ஒருவனைச் சமயம் நிலைநிறுத்திக் காக்கிறது"[31] என்று குறிப்பிடுகிறார்.

**சமயம்**

சமுதாயத்தை ஒழுங்குப்படுத்தி சீரமைப்பதற்காக மனிதர்களால் தோற்றுவிக்கப்பட்ட அமைப்பே சமயம் ஆகும். சமயத்தைப் பற்றி "மக்களின்

அன்றாட வாழ்க்கை ஒழுங்குபெற நடத்துவதற்கு அமைத்துக் கொண்ட நன்னெறிகளின் தொகுதியே சமயம்''[32] என்று குறிப்பிடுகிறார். தமிழிலக்கியங்களின் வளர்ச்சிக்கு சமயங்கள் ஒரு காரணமாகக் கூட இருக்கலாம். ஏனென்றால் சமயத்தின்மீதும் அவ்வச் சமயம் சார்ந்த இறைவன் மீதும் கொண்ட பக்தியே பாடல்களாக, இலக்கியங்களாக வளர்ச்சியடைந்தன எனலாம்.

"இறைவனால் கவரப்பட்டு அவனை அடைந்தவர்க்கு அவன் அருள் செய்கிறான். அருளும்போது ஞானம் காட்டியே நன்னெறி காட்டுகின்றான்'' என்று இறைவனின் தன்மையை குறிப்பிடுகிறார்.

புத்த சமயமும், சமண சமயமும் தமிழகத்தில் வளர்ச்சி அடையத் துவங்கியவுடன் தமிழகத்திலேயே முன்பிருந்த சைவமும், வைணவமும் மீண்டும் சிறந்த வளர்ச்சியடைந்து தழைத்தன. சைவ அடியார்கள் அதாவது நாயன்மார்கள் எழுதியவை தேவாரம், திருவாசகமாகவும் வைணவ அடியார்கள் அதாவது ஆழ்வார்கள் எழுதிய பாடல்கள் நாலாயிர திவ்யப்பிரபந்தமாகவும் தொகுக்கப்பட்டன. வைணவச் சமயத்தின் கொள்கைகளைத் "தத்துவம், 'இதம் புருஷார்த்தம்' என்று வரையறை செய்து இடமுண்டு''[34] என்று வைணவத்தின் கொள்கையைக் குறிப்பிடுகிறார்.

**கோயில்**

தெய்வங்களின் கோயில்கள் தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே இருந்திருக்க வேண்டும். கோயில் வழிபாட்டு முறையும் மன்னர்கள் கோயில்களின் அறப்புறங்களைப் பாதுகாத்து வந்ததையும் தொல்காப்பியம் அகத்திணையியல் (50) குறிப்பிடுகிறது.

முதன் முதலில் முல்லை நிலத்துக்குரியவையாயிருந்த திருமால் கோயில்கள் பிற்காலத்தில் குறிஞ்சி, மருதம் முதலிய நிலங்களிலும் வரலாயிற்று. இவற்றிலும் கண்ணபிரான் வழிபாடே பெரிதம் வழக்குப் பெற்றிருந்தது''[35] என்று கூறலாம். ஆண்டாள் பாடிய திருப்பாவை பாசுரம்

ஒன்று கோயிலின் அமைப்பைக் கூறுவதாக அமைந்துள்ளது. கோயிலானது, கொடிமரம், வாயில், கதவு ஆகியவற்றைக் குறிப்பிடுவதை,

கோயில் காப்பானே! கொடித் தோன்றும் தோரண
வாயில் காப்பானே! மணிக்கதவம் தாள்திறவாய்

என்று குறிப்பிடுகிறார்.

கோயில் அமைப்பு - உடல் அமைப்பு
உள் வெளிச்சுற்று - உடல்
அர்த்தமண்டபம், மகாமண்டபம் - உடலில் கண் போன்ற அவயங்கள்
கருவறை - இதயம்

என்று கோயிலின் அமைப்பு மனித உடலமைப்போடு ஒப்பிடக் கூடியதாக அமைந்துள்ளது.

**வழிபாடு**

பழைய கற்காலத்திலிருந்தே மனிதன் தான் அச்சம் கொண்டுள்ள பொருள்களை கடவுளாகக் கொண்டு வழிபட்டு வந்தான். அவ்வகையில் பாம்பு, யானை, தீ முதலியவை இன்றும் தொடர்ந்து வழிபடப்பட்டு வருகின்றன. மனிதன் நாகரிகம் அடையத் தொடங்கியதும் கடவுளுக்கு உருவமைத்து கலையுணர்வுடன் வழிபட்டான். சங்க காலத்தில் திருமால், முருகன், சிவன், கொற்றவை ஆகிய கடவுள்கள் வழிபடப்பட்டு வந்தனர். முல்லை நிலத்திற்குத் திருமாலும், குறிஞ்சிக்கு முருகனும், பாலைக்குக் கொற்றவையும் உரியவர்கள். அவர்களது வழிபாட்டு பாடல்களே பக்திப் பாடல்கள் எனப்படும். வழிபாட்டினைக் குறிப்பிடும்போது சங்க இலக்கியங்களில் இரண்டு விதமான கடவுள் வழிபாட்டு முறைகள் இருந்தன என்பதை அறியலாம். ஒன்று பண்டைய தமிழர்கள் வழிபாடு செய்த தனிப்பட்ட வழிபாட்டு முறை. மற்றொன்று வைதிக நெறியோடு சார்ந்த வழிபாட்டு முறை"[36] என்று இருவகையாகக் குறிப்பிடுகிறார்.

பல கடவுளர்களை வழிபட்டப் போதிலும் பரிபாடல் பதிற்றுப்பத்து ஆகிய இலக்கியங்களில் திருமாலை பிறப்பறுத்து முக்தியை அளிக்கக் கூடியவன்

என்ற நம்பிக்கையுடன் வழிபட்டனர் என்பதை அவர்களின் அவதாரப் பாடல்களே எடுத்துக் காட்டுகிறது.

பிறவா பிறப்பில்லை பிறப்பித்தோரில்லையே

என்ற பரிபாடல் வரிகள் திருமாலின் அவதாரங்களைக் குறிப்பிடுகிறது.

இறைவனுடைய அருள் இருந்தால்தான் அவனை வழிபட முடியும் என்று சங்ககால மக்கள் நம்பினர் என்பதை,

நின்னடி தொழுதனெம்
பன்மாண் அடுக்க இறைஞ்சினேம், வாழ்த்தினேம்
முன்னும் முன்னும் யாம் செய் தவத்தால்
இன்னும் இன்னும் எம் காமம் இதுவே

(பரி., 13)

என்று குறிப்பிடுகிறது. இதே கருத்தானது நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் வயது முதிர்ந்தபிறகு வழிபட முடிகிறதோ இல்லையோ என்ற ஐயத்தால் இளமைக் காலத்திலேயே உன்னை வழிபட்டு விடுகிறேன் என்று

அப்போதைக்கு இப்போதே சொன்னேன்

என்று குறிப்பிடுகிறார்.

சங்ககால மக்களைப் போன்று திவ்யப்பிரபந்த காலத்தில் பலியிட்டு வழிபடும் முறை காணப்படவில்லை. இருந்தபோதிலும் முருகனுக்குரிய குறிஞ்சி நிலப்பகுதியில் திருமாலுக்குரிய வழிபாட்டு தலங்கள் அமைந்தன என்பதும் நில எல்லைக் கடந்து திருமால் வழிபாடானது எங்கும் பரவியிருந்தது என்பதும் குறிப்பிடத் தக்கது. பண்டைத் தமிழ் மக்கள் தங்கள் பழக்க வழக்கங்களை ஒட்டியே தாங்கள் நம்பிய கடவுள்களையும் வழிபட்டு வந்தனர். தமிழகத்தில் மட்டுமன்று எந்நாட்டிலும் இப்படித்தான்"[37] என்று தமிழக மக்களின் கடவுள் நம்பிக்கையை வாழ்க்கையோடு தொடர்புபடுத்துகிறார்.

## அந்திநேர வழிபாடு

இறைவனை மூன்றுகால வழிபாட்டிலும், ஆறுகால வழிபாட்டிலுமாக மக்கள் வழிபட்டு வந்தனர். அவற்றுள் பொழுது விடிகிற விடியற்காலை

வழிபாடும், அந்திநேர வழிபாடும் சிறப்புப் பெற்று இருந்தது. அந்திநேரத்தில் வீடுகளில் விளக்கு ஏற்றி வழிபட்டனர் என்பதை,

அந்தி மாட்டிய நந்தா விளக்கின்

(ப.பா., 247)

என்ற வரி எடுத்துக் காட்டுகிறது. அந்திநேர வழிபாட்டை பெரியாழ்வார்,

உருக்காட்டும் அந்திவிளக்கு இன்றொளிகொள்ள
ஏற்றுகேன் வாராய்

(நா.தி.பி., 200)

என்று குறிப்பிடுகிறார்.

இறைவன் மீது உண்மையான பக்தி கொண்டவர்கள் மெய்யடியார்கள் என்று அழைப்பர். ஆனால் திருமால் வழிபாட்டில் சிறந்து விளங்கிய பெரியோரைப் பண்டைத் தமிழ் மக்கள் பாகவதர் என்ற பெயரால் வழங்கி வரலாயினர். "நாராயண சமயத்தோர் பாகவதரே என்றும் திவாகரம் குறிப்பிடுகிறது."[38] இவ்வாறு இறையடியார்களும் தனிப்பெயரால் சுட்டப்பட்டிருக்கின்றார். ஐம்பூதங்களும் வழிபாட்டிற்குரியன என்ற போதிலும், "ஞாயிறும் தீயும், திங்களும் இறைவனை வாழ்த்தும் வாயில்களாக"[39] இருந்திருக்கின்றன. சங்க காலத்தைப் போன்றே காப்பிய காலத்திலும் ஞாயிறும், திங்களும் போற்றி வழிபடக்கூடியதாக இருந்திருக்க வேண்டும். அதனால்தான் இளங்கோ அடிகள் "ஞாயிறு போற்றுதும்" என்றும் "திங்களைப் போற்றுதும்" என்றும் வாழ்த்து முறையில் பாடியுள்ளார்.

## திருமால் வழிபாடு

மனிதனை மையமிட்டு பாடிய பாடல்கள் சங்க இலக்கியங்கள் என்ற போதிலும் கடவுளரை மையமிட்டு பாடியம் முறையும் தொல்காப்பியர் காலத்திலிருந்தே தொடங்கியது என்பதை,

ஏனை யொன்றே
தேவர் பராஅய முன்னலைக் கண்ணே

என்ற நூற்பா விளக்குகிறது. இதை அடிப்படையாக வைத்தே சங்கப் புலவர்கள் தாங்கள் பாடலியற்றும் முன் தெய்வத்தைப் பற்றிக் காப்புச் செய்யுள்களாக

பாடினர். "இசையில் வல்ல பாணர்கள் இத்தேவ பாணியைப் பாடி வந்தனர் என்பதனை மலைபடுகடாம் காட்டுகிறது. அவர்கள் தம் இசைத் திறத்தை அவைக்கட் புலப்படுத்தத் தொடங்கு முன்னர்த் தெய்வப் பாடலையே முதன்மையாகப் பாடுவது வழக்கம்"[40] என்று கூறுகிறார். இதனை,

அருந்திறற் கடவுட் பழக்கிய பின்றை
விருந்திற பாணி கழிப்பி

(மலை., 538-539)

என்ற பாடல் எடுத்தக் காட்டுகிறது. நாலாயிர திவ்யப்பிரபந்தத்திலும் வழிபாட்டுச் செய்யுளாக,

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா
உன் செவ்வடி செவ்வித் திருக்காப்பு

(நா.தி.பி., காப்புச் செய்யுள்)

என்று பெரியாழ்வார் திருமாலையே காப்பு தெய்வமாகப் பாடியுள்ளார். "முனிவர்க்குக் குலதெய்வமாகிய திருமால் முனிவராகிய தமக்கும் வழிபடும் தெய்வமாகலின் அச்சிறப்பைப் பற்றி முன்னர்க் கூறியிருத்தல் வேண்டும்"[41] என்று திருமாலை தொல்காப்பியர் முதன்மைப்படுத்திக் கூறியதற்கு இவர் காரணம் கூறுகிறார். திருமால் வழிபாட்டைக் குறிப்பிடும்போது, "திருமால் வழிபாடும் வைணவ நெறியும் மிகவும் தொன்மையானவை. அநாதியாக நாம் கொண்டாடும் வேதத்திலேயே வைணவ மதக் கொள்கைகள் காணப்படுகையில், வைணவம் ஒரு காலத்தில் தோன்றி படிப்படியாக வளர்ந்தது என்று சில மேல்நாட்டு ஆராய்ச்சியாளர்களும் அவர்களை அடியொற்றிய சில நம்நாட்டவர்களும் கூறுவதை வேதசாஸ்திரங்களில் ஆழ்ந்த பரிச்சயமும் நம்பிக்கை உள்ள நாம் ஏற்க இயலாது"[42] என்று வைணவத் தொன்மையைக் குறிப்பிடுகிறார்.

### திருமாலின் பெயர்

சங்க இலக்கியங்களில் திருமால் பல பெயர்களுடன் வழிபடப்பட்டிருக்கிறான் என்ற போதிலும் திருமால் உலகளந்த செய்தி

*பெரிதும் இடம் பெற்றுள்ளது. ஆனால் திருமால் எடுத்த அவதாரங்களிலேயே கிருஷ்ணாவதாரமே முதன்மையான நிலையில் வைத்துப் பாடப்பட்டுள்ளது.*

*சங்க நூல்களில் திருமால் மால், மாயோன், நெடியோன் ஆகிய தமிழ்ப் பெயர்களாலேயே குறிக்கப் பெறுகிறான். வைணவம் பெருமானுக்குரிய சிறப்புப் பெயர்களாகக் கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விட்டுணு, மதுசூதனன், திரிவிக்ரமன் வாமனன், சீரிதரன், இருடீகேசன், பற்பநாபன், தாமோதரன் என்னும் பன்னிரண்டனையும் சுட்டும். இவற்றுள் எப்பெயரும் சங்கப் பாக்களில் இடம் பெறவில்லை.''[43] மதுசூதனன், இருடீகேசன், தாமோதரன் ஆகிய பெயர்களின் பொருளைக் காட்டும் தொடர்கள்கூட சங்க இலக்கியப் பாடல்களில் காணப்படவில்லை. சங்க இலக்கியம் குறிப்பிடும் திருமால் பெயர்கள்:*

| | |
|---|---|
| *ஆழியான்* | *(தின.மா., 96)* |
| *நெடியோன்* | *(மதுரைக்., 763)* |
| *மால்* | *(அகம்., 59)* |
| *மாயவன்* | *(திணை.மா., 56, 97)* |
| *மாயோன்* | *(நற்., 32)* |
| *மாதங்கு தடக்கை* | *(முல்., 2)* |
| *வேதமுதல்வன்* | *(நற்., 5)* |
| *திருநெமர்ந்த மார்பன்* | *(பரி., 1-8)* |
| *நீர் செல நிமிர்ந்த மாஅல்* | *(முல்., 3)* |
| *எவ்வயினோயும் நீறே (விட்டுணு)* | *(பரி., 4)* |
| *கோவலன்* | *(பரி., 3)* |

*இப்பெயர்கள் சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது போன்றே நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் ஆழ்வார்களால் குறிப்பிடப் பெறுகின்றன.*

*நெடியோன்*

செடியாய் வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியோனே! வேங்கடவா! . . . .

(நா.தி.பி., 685)

*என்று குலசேகரர் தம் பெருமாள் திருமொழியில் குறிப்பிடுகிறார்.*

**மால்**

மாலே! மணிவண்ணா! மார்கழி நீராடுவான்

(நா.தி.பி., 499)

*என்று ஆண்டாள் தம் திருப்பாவையில் குறிப்பிடுகிறார்.*

**மாயோன்**

மாயோனே! மனத்தூனே பற்றி நின்று என்
வாயார என்று கொலோ வாழ்த்தும் நாளே

(நா.தி.பி., 648)

*என்று குலசேகரர் தம் திருமொழியில் குறிப்பிடுகிறார்.*

**திருமால் பெயர் விளக்கம்**

**விஷ்ணு**

*விஷ்ணு என்னும் பதத்துக்குப் பொருள் எங்கும் வியாபகமானவன் என்பதாகிறது. "விரிந்து பரந்துள்ள பொருளில் நீலநிறமுடையவனாகக் கருதப்படுவது பொருத்தமானது என்று கூறுகிறார்கள்."[44, 45]*

*"திருமால் மேலான பரம்பொருளாகக் கொண்ட சமயம் வைணவம் வேதகாலத்தில் இருந்த பல தெய்வக் கோட்பாட்டில் விஷ்ணு ஒரு சிறு தெய்வம் பசுக் கூட்டங்களைக் காப்பவன் என்று ரிக்வேதம் விஷ்ணுவை குறிப்பிடுவதாகக் கூறுகிறார்."[46]*

*இப்பொருளில் சங்க இலக்கிய பெயர் இடம் பெற்றுள்ளது.*

**தாமோதரன்**

*"தாமோதரன் என்பதற்கு தாம உதரன் என்று பிரித்து வயிற்றளவுக்கு நீண்ட மாலையையுடையவன் என்று பொருள் கொள்ளலாம்."[47] பன்னிரு பெயர்கள் பற்றிய தோத்திரம் ஒன்றினை தேசிகரும் பாடியுள்ளார்.*

**விண்ணவன்**

*இந்துக்களின் முக்கியக் கடவுளரில் அனுமானும் விட்ணுவும் சிவனும் முதன்மையானவர்கள். தென்னிந்தியரின் இறைவனான (விண்ணவன்) விண் ஆரியரின் விஷ்ணுவாக மாறியிருக்க வேண்டும்"[48] என்று குறிப்பிடுகிறார்.*

**திருமால் ஓண நன்னாளில் பிறந்தவன்**

*திருமால் ஓண நன்னாளில் பிறந்தவன் என்றும் அவன் கருமை நிறமுடையவன், அசுரர்களை அழித்தவன் என்றும் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது.*

கணங்கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நன்னாள்

(மதுரைக்., 591-92)

*என்று குறிப்பிடுவதை நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் பெரியாழ்வார்,*

நின்ற மராமரம் சாய்த்தாய்
நீ பிறந்த திருவோணம்
இன்று நீ நீராட வேண்டும்
எம்பிரான் ஓடாதே வாராய்

(நா.தி.பி., 153)

*என்று குறிப்பிடுகிறார். திருமால் மகாபலிச் சக்கரவர்த்தியை அழித்த நாள் ஓணம் என்பதால் கேரள மக்கள் இன்றும் ஓணம் பண்டிகையை அந்நாளில் கொண்டாடுகிறார்கள். மேலும் கேரள மக்கள் பலருக்கு திருவனந்தபுரத்து திருமால் குலதெய்வமாக இருப்பது சேரமன்னர்கள் திருமாலை வழிபட்டதன் வளர்ச்சியாகக்கூட இருக்கலாம்.*

**திருமால் காக்கும் கடவுள்**

*திருமால் காக்கும் கடவுள் என்ற செய்தி, பரவலாக சங்க இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது.*

நாற்பெருந் தெய்வத்து நன்னகர் நிலைஇய
உலகம் காக்கும் ஒன்றுபுரி கொள்கை

(திரு.முருகு., 160-61)

*என்று போற்றுகிறது. திருமால் காப்பதில் தாய் போன்றவன் என்று திவ்யப்பிரபந்தத்தில்,*

பேய் இருக்கும் நெடுவெள்ளம் பெருவிசும்பின் மீது
ஓடிப் பெருகு காலம்
தாய் இருக்கும் வண்ணமே உம்மைத் தன்
வயிற்று இருத்தி உய்யக் கொண்டான்

(நா.தி.பி., 2007)

*என்று பாடப்பட்டுள்ளது.*

**திருமால் பாற்கடலில் துயின்றவன்**

*திருமால் பாற்கடலில் அரவுப் படுக்கையில் துயின்றவன் என்ற செய்தி,*

. . . . .   . . . . . . நீடுகுலை
காந்தளஞ் சிலம்பில் கயிறு படிந்தாங்குப்
பாம்பணைப் பள்ளியமர்ந்தோ னாங்கண்

(பெரும்., 371-73)

*என்று குறிப்பிடுகிறது. இதே செய்தி நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில்,*

பாம்பு அணைமேல் பாற்கடலுள் பள்ளி அமர்ந்ததுவும்

(நா.தி.பி., 3059)

*என்று குறிப்பிடப் பெற்றுள்ளது.*

**துழாய்மாலை சூடியவன்**

*திருமாலின் இயல்புகளைப் பற்றிக் குறிப்பிடும்போது அவன் துழாஅய் மாலை சூடியவன் என்ற செய்தி பரவலாகக் கூறப்பட்டுள்ளது.*

தெள்ளுயர் வடிமணி யெறியுநர் சல்லென
உண்ணாப் பைஞ்ஞிலம் பனித்துறை மண்ணி
வண்டுது பொலிதார்த் திருநெமரசலத்துக்
கண்பொரு திகிரிக் கமழ் குரற் துழாஅப்
அலங்கற் செல்வன் சேவடி பரவி
நெஞ்சுமலி யுவகையர் துஞ்சுபதிப் பெயர்

(ப.ப., 5-10)

*என்று இடம் பெற்றுள்ளது. இதே செய்தி நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில்,*

தூய்மையோக மாயினாய்! தூாயலங்கள் மாலையாய்
ஆமையாகி ஆழ்கடல் துயின்ற ஆதிதேவ நின்
நாமதேயம் இன்னதென்ன வல்லமல்ல வாகிலும்
சாமவேத கீதனாய சக்ரபாணி யல்லையே

(நா.தி.பி., 761)

என்று திருச்சந்தவிருத்தம் குறிப்பிடுகிறது.

**திருமால் தன் மார்பில் திருமகளை அணிந்தவன்**

*சங்க காலத்தில் திருமாலின் மார்பின்மீது மறுவாகத் தோன்றிய திருமகள் பிற சங்க இலக்கியங்களில் வளர்ந்து திவ்யப் பிரபந்தக் காலத்தில் இலக்குமிதேவியாகச் சுட்டப் பெறுகிறாள். திருமால் மார்பில் திருமகள் இருக்கிறாள் என்பதை,*

இர நிலங் கடந்த திருமறு மார்பின்
முந்நீர் வண்ணன் பிறக்கடை

(பெரும்., 29, 33)

*என்று கடல்வண்ணனாகிய திருமால் தன் மார்பில் திருமகள் அணிந்த செய்தி குறிப்பிடப் பெறுகிறது. இச்செய்தி நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில்,*

தெய்வத் திருமாமலர் மங்கை தங்கு
திருமார் பனைச் சிந்தையுள் வைத்தும்

(நா.தி.பி., 1164)

*என்று குறிப்பிடப் பெறுகிறது. திருமகள் தனக்கு விருப்பமான நேரத்தில் விருப்பமானவரிடத்தில் இருப்பாள். விருப்பம் இல்லாதபோது எவ்வளவு அழைத்தும் வரமாட்டாள் என்று திருமகளின் இயல்பை புறநானூறு குறிப்பிடுகிறது.*

**பாவைக் கூத்து**

*சங்க காலத்திற்குப் பின் தோன்றிய காப்பிய காலத்தில் முதன்மையான சிலப்பதிகாரம் பாவைக் கூத்தைக் குறிப்பிடுகிறது.*

பதினோராடலும் பாட்டுங் கொட்டும்
விதிமாண் கொள்கையான் விளக்க வறிந்தாங்கு

என்று புகார்க் காண்டம் குறிப்பிடுகிறது. இதற்கு அடியார்க்கு நல்லார் தம் உரையில்,

பாவைத் திருமகள் ஆடிற்று அதற்கு உறுப்பு
ஓவாமல் ஒன்றுடனே ஒன்று

என்று மேற்கோள் செய்யுளைக் காட்டியுள்ளார். பாவைக் கூத்து பற்றிய செய்தி திவ்யப்பிரபந்தத்தில் இல்லை எனலாம்.

சங்க மக்கள் திருமாலை வழிபடும்போது அவரது குலப் பெருமையுடனும் அவர் கையில் உள்ள ஆயுதங்களுடனும் சேர்த்தே வழிபட்டு வந்தனர். திருமால் தன்னுடைய கைகளில் சங்கும் சக்கரமும் ஏந்தியவன் என்பதனை,

வள்ளுரு நேமியான் வாய்வைத்த வளைபோலத்
தெள்ளிதின் விளங்கும் கரிநெற்றிக் காரியும்

(கலி., 105)

என்ற பாடல் வரிகள் எடுத்துக் காட்டுகின்றன. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

கருமுகில் போல்வது ஓர்மேனி கையன
ஆழியும் சங்கும்

(நா.தி.பி., 1176)

என்று குறிப்பிடுகிறது.

சங்க இலக்கியத்தில் தோன்றிய நடுகல் வழிபாடானது பிற்காலத்தில் சிறுதெய்வ வழிபாடாக மலர்ந்து ஐயனார் முதலான சிறு தெய்வங்களுக்குக் கோயில்கள் இருந்துள்ளன. அக்கோயில்களுக்கு முன்னே மண்ணாலாகிய யானைகள் அமைக்கப்பட்டிருந்தன என்பது அய்யன் பாழியில் ஆனை போர்க்குறித்த மன்றாயிற்று அவ்வோ தேவதா மாத்ரங்களுக்கு பல பரிதாந சக்தியுள்ளது என்றும் உரைத் தொடரால் தெரிய வருகிறது''[49] என்று சிறுதெய்வ வழிபாடு பிற்காலத்தில் இருந்ததைக் குறிப்பிடுகிறார்.

**திருமால் உலகளந்த செய்தி**

*திருமால், மாபலி என்ற ஆணவமுற்ற அரசனை அழிப்பதற்காக மூன்றடி மண்கேட்டார். ஓரடியால் பூவுலகையும் ஓரடியால் வானுலகையும், அளந்து மீதம் ஓரடி இருக்க மகாபலியின் தலையில் வைத்து ஆணவத்தை அடக்கினார். இதனை த்ரிவிக்ரம அவதாரம் என்று குறிப்பிடுவர். திருமால் மண்கேட்கும்போது சிறுகுழந்தையாக இருந்ததை வாமனன் என்று குறிப்பிடுவர். இந்த வாமன அவதாரம் பற்றிய செய்தி,*

ஞான மூன்றடித்தாய முதல்வர்க்கு மூதுமறைப்
பாலன்ன மேனியான் அணிபெறத் தைஇய

(கலி., 124)

*எடுத்துக் கூறுகிறது. இந்த வாமன அவதாரம் பற்றிய செய்தி,*

குறை கழல்கள் நீட்டி மண்
கொண்ட கோல வாமனர்

(நா.தி.பி., 3529)

*என்று எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.*

*பிறவித் துன்பத்தைப் போக்குபவன் என்பதை பரிபாடல்,*

மாஅயோ யே! மாஅயோயே!
மறுபிறப்பறுக்கும் மாசில் சேவடி
மணிதிகழ் உருபின் மாஅயோயே

*என்ற பாடலானது திருமாலின் திருவடி அருள் பெற்றால்தான் பிறவிக்கடலை நீந்தமுடியும் என்ற சங்ககால மக்களின் நம்பிக்கையையும், திருமால்மீது அவர்கள் கொண்டிருந்த பக்தியையும் எடுத்துக் காட்டுகிறது. திருமால் பிறவித் துன்பத்தைப் போக்குபவன் என்ற செய்தியானது பொய்கையாழ்வாரால் நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில்,*

இமையாத கண்ணாக இருளகல நோக்கி
அமையாப் பொறிபுலன் களைந்தும் - நமையாமல்
ஆகத்தணைப்பார் அணைவரே ஆயிரவாய்
நாகத்தணை யான் நகர் . . .

(நா.தி.பி., 2113)

என்ற பாடல் நாகத்தணை யான் நகர் என்பதிலிருந்து திருமால் இருக்கின்ற சொர்க்கம் என்பதைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். மேலும் முக்திநிலையைக் குறிப்பிடும்போது வீடு என்னும் நிலை சொல்லுக்கும் பொது உணர்வுக்கும் எட்டாத உணர்விறந்த சிறப்பு உணர்வு நிலையாகக் கருதப்படுகின்றது. மேலும் அது அறவொழுக்கத்தின் பயனாக உண்டாவதாயுள்ளது. ஆதலால் அதனை அறம் என்பதிலே அடக்கிக் காரண வகையாற் சான்றோர் பேசினர் என்று புறநானூற்றுச் சொற்பொழிவுகள் குறிப்பிடுகிறது. வைணவர்கள் மோட்சமடைய தமக்கு பக்தியை கருவியாகப் பயன்படுத்தினர். அதனை மோட்சத்திற்குச் சாதனமான வழி இதம். வைணவர்கள் மோட்சம் அடைய பக்தி நெறியையும், பிரபத்தி நெறியையும் குறிப்பிடுவர்''[50] என்று வைணவர்கள் முக்தியடையும் நிலையையும் நெறியையும் குறிப்பிடுகிறார்.

திருநாவுக்கரசரால் தோற்றுவிக்கப்பட்ட தாண்டக இசையே பிற்காலத்தில் சிறந்ததொரு வளர்ச்சியடைந்து திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டகம் என்று திருமங்கையாழ்வாரால் பாடப்பட்டுள்ளது.

**திருமால் கூத்தாடிய செய்தி**

கூத்து என்பது சங்க இலக்கியச் சொல் ஆகும். இது துணங்கைக் கூத்து, பாவைக் கூத்து, குடக் கூத்து, குரவைக் கூத்து எனப் பலவகைப்படும். அவற்றுள் பாவைக் கூத்து திருமகள் ஆடியது என்றும் குடக்கூத்து, குரவைக் கூத்து ஆகியவை திருமால் ஆடிய கூத்து என்றும், ''குடக்கூத்து என்பது குடத்திற்கு மேலே குடங்களை அடுக்கிக் கொண்டு தலைமேல் வைத்துக் கொள்வதோடு இருதோள்களிலும் இரு குடங்களை வைத்துக் கொண்டு இருகைகளிலும் இரு குடங்களை ஏந்திக் கொண்டும், ஏந்திய குடங்களை மேலே வீசி, வீசி எறிந்தும் பிடித்தும் ஆடவேண்டும். இப்படி ஆடும்போது எந்தக் குடமும் கீழே விழாமல் பிறர் வியக்கத்தக்க வகையில் ஆடுவதே குடக்கூத்தாகும். இக்குடக் கூத்தை ஆடுவதில் ஈடும் எடுப்பும் இல்லாமல் திகழ்ந்தவன் தாமரைக்கண்ணன் என்பது தேற்றம். இக்குடக்கூத்தை ஆறுவகைக் கூத்தில் ஒன்றாகப் பதினொருவகை. ஆடலில் ஒன்றாகக் கூறுவர். ஆனால்

இக்கூத்தை சிறப்புக்குரிய ஒன்றாக பேசுவர். இக்கூத்தைப் பற்றிச் சிலப்பதிகார உரையாசிரியரான அடியாருக்கு நல்லார் குடக்கூத்தாடல் குன்றெடுத்தான் ஆடல்"[51] என்று குடக்கூத்தை பற்றி குறிப்பிட்டுள்ளார். மேலும், "கண்ணன் ஆய்ச்சியர்களோடு இடமாகவும், வலமாகவும் ஆடியதையும் தலையிலும் தோளிலும் குடம் வைத்து ஆடியதையும் இடவல, குடவல, கோவல, காவல என்னும் பரிபாடல் தொடர் பாடுகிறது. பரிபாடல் காலத்திற்குப்பின் கண்ணனைப் பற்றிய இலக்கியங்களும் கண்ணன் வழிபாடும் நாடெங்கும் பெருகலாயின"[52] என்று குறிப்பிட்டுள்ளார். இந்தக் குடக்கூத்தைப் பற்றிய செய்தி நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில்

குடங்கள் எடுத்தேறவிட்டு கூத்தாடவல்ல எம் கோவே

(நா.தி.பி., 188)

என்று திருமால் கூத்தாடிய செய்தி விளக்கப்பட்டுள்ளது. (மதுரைக் காஞ்சியில் துணங்கைக் கூத்து பற்றிய செய்தி இடம் பெற்றுள்ளது).

**நால்வகை வியூக நிலை**

திருமால் தன்னுடைய அடியார்களின் குறைகளை போக்குவதற்கும், உலகைக் காப்பதற்கும், தன் அடியவர்களுக்கு வீடு பேற்றை அளிப்பதற்கும், வாசுதேவன், சங்கர்ஷ்ணன், பிரத்யும்னன், அநிருத்தன் என்ற பெயர்களுடன் வடிவம் கொண்டான். இதனை வியூக நிலை என்பர். திருமாலின் வியூக நிலையினை,

செங்கட் காரி கருங்கண் வெள்ளை
பொன்கட் பச்சை பைங்கண் மாஅல்

(பரி., 3)

என்று குறிப்பிடுகிறது.

பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம்
போலுநீர்மை பொற்புடைத்த டத்துவண்டு விண்ருலாம்
நீலநீர்மை யென்றிவை நிறைந்த காலம் நான்குமாய்
மாலீனீர்மை வையகம் மறைத்த தென்ன நீர்மையேல்

(நா.தி.பி., 795)

என்ற பாடல் நால்வகை வியூகங்களையும் கூறி உலகம் மறைத்ததையும் கூறுகிறது. மேலும் திருமழிசையாழ்வாரின் திருச்சந்த விருத்தம் குறிப்பிடுகிற,

“ஏகமூர்த்தி, மூன்று மூர்த்தி என்ற பாடலும் நால்வகை வியூகத்தைக் குறிப்பிடுகிறது. “ஏகமூர்த்தி என்பது பரவாசு தேவனைக் குறிக்கிறது. மூன்று மூர்த்தி என்பது சங்கர்ஷணன், அநிருத்தன் ஆகிய வடிவங்களைக் குறிப்பிடுகின்றது.”[53] மண்மதன் திருமாலின் மகன் பிரதியும்னனாக பிறவியெடுத்தான் என்றும் கூறப்படுகிறது. வியூகநிலை மட்டுமல்லாமல் அர்ச்சை நிலையும் வைணவத்தில் சிறப்பாகக் குறிப்பிடப்பெறுகிறது. அர்ச்சைநிலை என்பது, பக்தர்களின் எண்ணப்படி அமையும் வடிவம். இந்நிலையில் இறைவன் இன்ன இடத்தில் இன்ன காலத்தில் தோன்ற வேண்டும் என்ற நியமம் இன்றிதான் விரும்பிய எந்த இடத்திலும் எந்தக் காலத்திலும் எவரிடத்தும் தோன்றும் வடிவம்”[54] என்று குறிப்பிடுகிறார். பொதுவாகவே அர்ச்சை நிலையில் வடிவத்தைக் கண்டவர்கள் முக்தியடைவர் என்று குறிப்பிடுவர்.

**தத்துவம்**

பக்தியை அடிப்படையாக வைத்துப் பாடப்பட்டிருப்பினும் தத்துவங்களும் இரண்டாம் நிலையாக வைத்து பாடப்பட்டிருக்கின்றன. நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் குறிப்பாக திருமழிசையாழ்வாரின் திருச்சந்த விருத்தம் முழுவதுமே தத்துவங்களால் பாடப்பட்டுள்ளன. தத்துவம் இருபத்து நான்காகும். அவை, “நிலம் முதலாகிய ஐந்து படுப்பொருள்கள் மெய் முதலாகிய ஐந்து அறிகருவிகள், வாய் முதலாகிய ஐந்து தொழிற்கருவிகள், சுவை முதலாகிய ஐந்து நுண்ணிய பொருள்கள் ஆகிய இருபதோடு மனம் முனைப்பு (அகங்காரம்) மான்(மகான்) விளக்கமில் பகுதி (அவ்வயகதம்) என்னும் நான்கும் சேர்ந்து தத்துவம் இருபத்து நான்காகும்”[55] என்று குறிப்பிடுகிறார்.

திருமால் பாற்கடலில் ஆதிசேடன் என்ற ஆயிரம் தலையையுடைய பாம்பு படுக்கையில் படுத்திருப்பான் என்று சங்க இலக்கியமும் திவ்யபிரபந்தமும் குறிப்பிடுகின்றன. பாம்பானது விஷ்ணுவிற்குப் படுக்கையாகவும், சிவன், சக்தி ஆகியோர்க்கு அணிகலனாகவும் குறிப்பிடப்பெறுகிறது. “சர்ப்பம் எப்பொழுதும் சக்தியின் சின்னம். ஆதிசேஷன்

என்னும் சர்ப்பம் ஐந்து தலையுடையவனாகவும், ஆயிரம் தலையுடையவனாகவும் கருதப்படுகிறான். ஐந்து தலைகள் பஞ்சபூதங்களைக் குறிப்பனவாகவும் ஆயிரம் தலைகளோ எண்ணிக்கையில் அடங்காத உயிர்களைக் காட்டுகின்றன" என்று தத்துவத்தைக் குறிப்பிடுகிறார். உயிர்களை திருமால் காப்பதனால் அவர் காக்கும் கடவுளாகக் குறிப்பிடப்பெறுகிறார்.

**நான்முகனைப் படைத்தவன்**

திருமாலின் உந்தித் தாமரையில் பிரம்மதேவன் தோன்றினான். அதனால் திருமால்தான் நான்முகனைப் படைத்தான் என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இதனை,

... வழுங்குநர்த் தடுத்த
அடையா வாயின் மிளைசூழ் படப்பை
நீணிற வுருவின் நெடியோன் கொப்பூழ்
நான்முக ஒருவர் பயந்த பல்லிதழ்த்
தாமரைப் பொகுட்டிற் காண்வரத்தோன்றி

(பெரும்., 400-404)

என்று குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்ய பிரபந்தம்,

நான்முகனை நாராயணன் படைத்தான் ...

(நா.தி.பி., 2382)

என்று குறிப்பிடுகிறது.

**பலராமன் வழிபாடு**

பனைக் கொடியைக் கொண்ட பால்நிற பலதேவனை பற்றிய குறிப்பு சங்க இலக்கியத்தில் காணப்படுகிறது. பலராமன் கண்ணனின் அண்ணனாகப் போற்றப்படுகிறான். கண்ணனுக்கும் பலராமனுக்கும்கோயில் அமைத்து வழிபட்டனர். நிலத்தை உழுவதைப் போல பகைவர்களின் மார்பை உழக்கூடிய வீர முடையவன் என்று பலதேவனையும் வழிபட்டனர். அச்செய்தி

... பனைக்கொடிப்
பால்நிற வண்ணன் போல் பழிதீர்ந்த வெள்ளையும்...

(கலி., 104)

என்ற பாடல் விளக்குகிறது. பலதேவனைப் பற்றிய குறிப்பு நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் மிகச் சில இடங்களில்தான் குறிப்பிட்டபோதிலும் இருவரும் சகோதர்கள் என்ற கருத்து சங்க இலக்கியம் போலவே இடம் பெற்றுள்ளது. நாலாயிர திவ்யபிரபந்தத்தில் ஆண்டாள் தாம் பாடிய திருப்பாவையில்,

உம்பர் கோமானே! உறங்காது எழுந்திராய்
செம்பொற்கழலடிச் செல்வா! பலதேவா
உம்பியும் நீயும் உறங்கேலோ ரெம்பாவாய் ...

(நா.தி.பி., 490)

என்ற பாடலில் எடுத்துக்காட்டுகிறார்.

**வழிபாடு**

சங்க இலக்கியங்களில் இறைவனைப் பட்டினிகிடந்து வழிபட்ட செய்தியை பதிற்றுப் பத்து எடுத்துக்காட்டுகிறது. அக்காலத்திலேயே திருமாலின் வழிபாட்டிற்கு நிலங்களையும் ஊர்களையும் மக்கள் வழங்கியிருக்கின்றனர். அதன் தொடர்ச்சியாக கேரளமக்களுக்கு இன்றும் கூட திருவனந்தபுரத்து திருமால் குலதெய்வமாக இருக்கிறார். சங்க கால மக்கள் இறைவனின் திருத்தலங்களுக்குத் தங்கள் குடும்பத்துடன் சென்று வழிபட்டு வந்தனர் என்பதை,

தையலவரொடும் தந்தாரவரொடும்
கைம்மக வோடும் காதலவரொடும்
தெய்வம் பேணித் திசை தொழுதீனீர் சென்மின்
சென்று தொழுகல்லீர் கண்டு பணிமின்னே ...

(பரி., 15, 46-48)

என்று குறிப்பிடுகிறது. ஆனால் பக்தி இலக்கியகாலத்திலோ ஆழ்வார்கள் தாம் மட்டுமே சென்று இறைவனை திருத்தலங்களில் சென்று வழிபட்டனர் என்பதை நாலாயிர திவ்ய பிரபந்தத்தின் வாயிலாக அறியமுடிகிறது. பன்னிரண்டு ஆழ்வார்களில் நம்மாழ்வார் மட்டுமே இருக்கும் இடத்திலேயே இருந்துகொண்டு ஒவ்வொரு திருத்தலத்தையும் பாடினார் என்று கூறுவர்.

அடியவர்கள் கடவுளை எவ்வுருவத்தில் நினைக்கிறார்களோ அவ்வுருவமே கடவுளின் (இறைவனின்) உருவம் என்பதை,

மனக்கோள் நினக்கென வடிவு வேறிலையே ...

(பரி., 4-56)

என்று குறிப்பிடுகிறார். இதனை நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் பொய்கையாழ்வாரும்,

தமருகந்தது எவ்வுருவம் அவ்வுருவம் தானே
தமருகந்தது எப்பேர் மறப்பேர்-தமருகந்து
எவ்வண்ணம் சிந்தித்து இமையாதிருப்பரே
அவண்ணம் மாழியானாம் ...

(நா.தி.பி., 2128)

என்று அடியவர்கள் விருப்படியே இறைவன் இருப்பதை ஆழ்வாரும் எடுத்துக்காட்டியுள்ளார்.

சங்க இலக்கியங்களில் கூறப்படும் திருமாலின்நிறம், ஆடை, மாலை ஆயுதம், பிறப்பு, தொழில், காத்தல், சிவபெருமானுக்கு உதவியது. நான்முகனைப் படைத்தது. பிரத்யும்னனின் தந்தை போன்ற செய்திகளும் பரிபாடல் கூறும் பரத்துவ நிலையும் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் அவ்வாறே பின்பற்றப்பட்டுள்ளன என்றபோதிலும் திருமாலின் பெயர்கள் சங்க இலக்கியத்தில் காணுவது மட்டுமல்லாமல் திவ்ய பிரபந்தத்தில் அதிக அளவில் இடம்பெற்றுள்ளது என்றும் திருமாலின் தேவியர் மூவர் என்பதும் திருமால் வழிபாட்டில் எழுந்த வளர்ச்சி நிலையாகவே கருதலாம்.

“ஆழ்வார்கள் திருமாலின் பக்தியில் ஆழமாக ஈடுபட்டவர்கள் ஆவார். அவர்கள் “பொய்கையார்-பாஞ்சசன்னியம், பூதத்தாழ்வார்-கதாயுதம் பேயாழ்வார்-நந்தகாம்சம், என்றும் திருப்பாணாழ்வார்-திருமறு என்றும் திருமழிசை-சக்கரம் என்றும் பெரியாழ்வார்-கருடன் என்றும் குலசேகரர்-கௌஸ்துபமாலை என்றும் நம்மாழ்வார்-சேனைமுதலியார் என்றும் திருமாலின் அம்சங்களே ஆழ்வார்களாகத் தோன்றியது”[56] என்றும் குறிப்பிட்டுள்ளார்.

திருமால் வழிபாடு மட்டுமின்றி நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ள கருத்துக்களுக்கும் மரபுகளுக்கும் அடிப்படையாக சங்க நூல்கள் காணப்பட்டிருக்கின்றன. பரிபாடல் கூறும் திருமால் பற்றி செய்திகளும் நாலாயிர திவ்ய பிரபந்தம் கூறும் திருமால் பற்றிய செய்திகளும் ஒத்திருப்பதைப் பார்த்தால் பரிபாடல் பாடிய புலவர்கள் திருமாலைப் பாடுவதில் ஆழ்வார்களுக்கு முன்னோடிகளாகத் திகழ்ந்திருந்தனர் எனலாம். சங்க இலக்கியத்தின் வழிபாட்டு வளர்ச்சியே நாலாயிர திவ்ய பிரபந்தம் என்ற பக்தி இலக்கியம் எனலாம்.

## அடிக்குறிப்புகள்

1. ஆர்.வீரபத்திரன், பாவை நோன்பு வரலாறும் இலக்கிய மரபுகளும், பக்.22-23.
2. சிதம்பரனார், எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும், ப.102.
3. தொல்காப்பியர், தொல்காப்பியம், கற்பு, நூ.145.
4. ஜி.லோகநாயகி, "பெரியாழ்வார் பாடல்களில் தாய்மை", இரண்டாம் கருத்தரங்கு தமிழ் இலக்கிய ஆய்வுக் கோவை, தொகுதி-1, ப.
5. தொல்காப்பியர், தொல்காப்பியம், பொருள்., நூ.90.
6. P.L.சாமி, சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், ப.2.
7. சுசீலா கோபாலகிருஷ்ணன், சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள், ப.10 (அச்சிடப் பெறாத ஆய்வேடு)
8. ந.சுப்புரெட்டியார், ஆழர்வார்களின் ஆராஅமுது, ப.32.
9. சரளா இராஜகோபாலன், இலக்கியச் சிந்தனைகள், ப.73.
10. தனபாக்கியவதி, தமிழ் இலக்கியத்தில் திருமால் வழிபாடு, ப.303.
11. கோவை இளஞ்சேரன், இலக்கியம் ஒரு பூக்காடு.
12. சண்முகம்பிள்ளை (ப.ஆ.), குறுந்தொகை தொடரடைவு, ப.
13. க.மா.வீரணன் (க.ஆ.), "தமிழ் கூறும் தத்துவம் ஓர் ஆய்வு", தமிழ்ப்பொழில், ப.21.
14. ஆ.வேலுப்பிள்ளை, தமிழர் சமய வரலாறு, ப.131.
15. எஸ்.கண்ணன், பெரியாழ்வார் ஆண்டாள் பாசுரங்கள், ப.264.
16. எஸ்.என்.முரளிதர், இந்து மதத்தின் இயற்கைக் களஞ்சியம், ப.1.
17. P.S.சுப்பிரமணிய சாஸ்திரி, சங்க நூல்களும் வைதிக மார்க்கமும், ப.22.
18. தெ.ஞானசுந்தரம் (ப.ஆ.), கி.வா.ஜகந்நாதன், "அணிந்துரை", வைணவ உரைவளம், ப.
19. டி.சி.பார்த்தசாரதி அய்யங்கார் (ப.ஆ.), நாலாயிர திவ்யப்பிரபந்தம், ப.8.
20. பி.ஸ்ரீ.ஆழ்வார்களும் ஆசாரியர்களும், பக்.26-27.
21. ஜி.எதிராஜுலு நாயுடு, வைணவப் பூங்கா, பக்.1-2.
22. ந.சுப்புரெட்டியார், சில நோக்கில் நாலாயிரம், ப.50.
23. நாகர்கோவில் கிருஷ்ணன், பக்திவளர்த்த பன்னிருவர், ப.81.

24. S.நாராயணசாமி நாயுடு, "பெருமாள் திருமொழி", தமிழ்ப்பொழில், ப.314.

25. மு.கு.ஜகந்நாதராஜா, வடமொழி வளத்திற்குத் தமிழரின் பங்கு, ப.205.

26. நாகர்கோவில் கிருஷ்ணன், பக்திவளர்த்த பன்னிருவர், ப.81.

27. பரிபாடல் 8.

28. அகம். 101.

29. ந.சுப்புரெட்டியார், சில நோக்கில் நாலாயிரம், ப.49.

30. ஜோ.அருணாதேவி, ஆழ்வார்களின் வழிபாட்டுத் தலங்கள் ஓர் ஆய்வு, பக்.34-35 (அச்சிடப் பெறாத ஆய்வேடு).

31. எஸ்.கண்ணன், பெரியாழ்வார் ஆண்டாள் பாசுரங்கள், ப.263.

32. மு.ப.சியாமளா, திருமழிசை ஆழ்வாரின் பாசுரங்கள் ஓர் ஆய்வு, ப.1.

33. ப.அருணாசலம், பக்தி இலக்கியம், ப.137.

34. மா.இராசமாணிக்கனார், தமிழர் நாகரிகமும் பண்பாடும், ப.85.

35. ஆ.க.பார்த்தசாரதி, பெரியாழ்வாரின் பாசுரங்கள் ஓர் ஆய்வு, ப.32.

36. ஆதி.பாலசுந்தரம், சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள், ப.51.

37. சாமி.சிதம்பரனார், "முன்னோர் கடவுள் வழிபாடு", தமிழ்ப்பொழில், ப.166.

38. சேந்தன் திவாகரம், மக்கட் பெயர்த் தொகுதி-2.

39. இளவழகனார், பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்க்கை, ப.152.

40. ம.பெ.சீனிவாசன், வைணவ இலக்கிய வகைகள், ப.18.

41. ரா.புருடோத்தம நாயுடு, புலமைப் பரிசு, ப.129.

42. எஸ்.கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்

43. தெ.ஞானசுந்தரம், "சங்க இலக்கியத்தில் திருமால் நெறி", சங்க இலக்கியக் கட்டுரைகள், ப.215.

44. ஸ்ரீமத்சுவாமி சித்பவானந்தர், விஷ்ணுதத்துவம் அரங்கநாதன், ப.5.

45. மு.ப.சியாமளா, திருமழி சையாழ்வாரின் பாசுரங்கள் ஓர் ஆய்வு, ப.9.

46. இந்திரா பார்த்தசாரதி, தமிழ்இலக்கியங்களில் வைணவம், ப.7.

47. ப.அருணாச்சலம், வைணவசமயம், ப.1.

48. செந்தமிழ்ச்செல்வி, பண்பாட்டைக் காப்பது தென்னகமே, தேவதத்தப்பட்டி, ப.60.

49. தெ.ஞானசுந்தரம், வைணவ உரைவளம், ப.263.

50. ந.சுப்புரெட்டியார், சில நோக்கில் நாலாயிரம், ப.82.

51. மு.உலகநாதன், கோதையின் காதல் ஓவியம், ப.103.

52. த.அகரமுதல்வன், சங்க இலக்கியத்தில் பலராமண் வழிபாடும் கண்ணன் வழிபாடும் (ஆய்வுக் கோவை), பக். 4, 5.

53. ந.சுப்புரெட்டியார், சிலநோக்கில் நாலாயிரம், ப.55.

54. ஜோ.அருணாதேவி, ஆழ்வார்களின் வழிபாட்டுத் தலங்கள், ஓர் ஆய்வு, ப.48 (அச்சில் வராத ஆய்வேடு)

55. தெ.ஞானசுந்தரம், சங்க இலக்கியத்தில் திருமால் நெறி, பக்.220-221.

56. அரிகேசவன், வைணவம் அறிவோம் வாரீர், பக்., 18-19.

# 5.0. உத்திச் செல்வாக்கு

கவிஞன் தான் விளக்கவந்த பொருளை விளக்குவதற்குப் பல முறைகளை இலக்கியங்களில் கையாளுகிறான். அதுவே உத்தி எனப்படுகிறது. அவ்வகையில் உவமையும் இடம்பெறுகிறது. ஒருவர் அறியாத பொருளை அவர் அறிந்த பொருளோடு ஒப்புமைபடுத்திக் கூறுவது உவமையாகும். உவமை என்பது ஒரு பொருளை விளங்கவைக்கும் கருவியாகப் பயன்படுகிறது. இதுமட்டுமன்றி ஒரு பொருளைப் புனைந்துரைப்பதற்காகவும் உவமை வருதல் உண்டு என்கிறார் தொல்காப்பியர் உவமையை அணியாகவும் அதனின்றே பிற அணிகள் தோன்றியதாகவும் கூறுவர். மேலும் உவமையை,

உவமையென்னும் தவலருங்கூத்தி
பல்வகைக் கோலம் பாங்குறப் புனைந்து
காப்பிய அரங்கினுள் கவினுறத் தோன்றி
யாப்பறி புலவர் இதயம்
நீப்பறு மகிழ்ச்சி பூப்ப நடக்கும்மே

என்று எடுத்துக்காட்டுவர். தொல்காப்பியர் உவமையை இரண்டு வகையாக பிரித்துள்ளார்.




என்று பிரித்துள்ளார். இவற்றுள் உள்ளுறை உவமமானது அகத்திணைக்கு மட்டுமே வரும். ஏனையுவமமானது இருதிணைக்கும் பொதுவாக இடம்பெறும். தொல்காப்பியர் உவமை தோற்றம் பெறுகின்ற இடத்தை,

வினை பயன் மெய்யுரு என்ற நான்கே
வகைபெற வந்த வுவமத் தோற்றம்[1]

என்று குறிப்பிடுகின்றார். வினை, பயன், மெய், உரு என்ற நான்கையும் அடிப்படையாகக் கொண்டு பிறக்கின்ற உவமையானது சிறப்பு, நலன், காதல், வலி, கிழக்கிடு பொருள் என்ற ஐந்தும் அவற்றின் நிலைகலன் என்று குறிப்பிடுகிறார். இதனை,

சிறப்பே நலனே காதல் வலியொடு
அந்நாற் பண்பும் நிலைக்கன்மெனப[2]

என்றும்,

கிழக்கிடு பொருளோ டைந்து மாகும்[3]

என்று விவரிக்கின்றார். தொல்காப்பியரின் கூற்றுப் படியே இவ்வியலில் உவமைகள் ஆராயப்படுகின்றன. தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள சிறப்பு, நலன், காதல், வலி, கிழக்கிடுபொருள் என்ற ஐந்தனுள் கிழக்கிடுபொருள் மட்டும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்துள் இடம்பெறவில்லை எனலாம்.

**உள்ளுறை உவமம்**

தொல்காப்பியர் உள்ளுறை உவமத்தை அகத்திணைக்கு மட்டுமே வரும் என்று குறிப்பிட்டுள்ளார். சங்க இலக்கியங்களில் அகத்திணைப் பாடல்களில் பெரும்பாலும் தோழிகூற்றமைந்த பாடலிலே உள்ளுறை இடம்பெற்றிருக்கும்.

தவறு செய்கின்ற தலைவனை இடித்துரைக்கும் பொருட்டு தோழி அந்நிலப்பகுதிக்கேற்ப கருப்பொருளமைத்து அந்நில விலங்குகள், பறவைகள் முதலியவற்றை வைத்து தலைவனை மறைமுகமாகத் திருத்துவது உள்ளுறை எனப்படும். இம்முறையே சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது. ஆனால் திவ்யப் பிரபந்தத்தில் இம்மரபு மீறப்பட்டுள்ளது. எவ்வாறெனில் அகத்திணையல்லாமல் பக்தியே உள்ளுறையாகவும் தோழிகூற்றில்லாமல் ஏனையோர் கூற்றிலும் பாடப்பட்டபோதிலும் தலைவனைத்திருத்தும் முறையில் அமையாமல் பக்தியை நிலைநாட்டும் பொருட்டு பாடப்பட்டுள்ளது.

துங்காரரவத்திரை வந்துலவத் தொடுகடலுள்
பொங்காராவில் துயிலும் புனிதரூர் போலும்
செங்காலன்னம் திகழ்தண் பணையில் பெடையோடும்
கொங்கார் கமலத்தலரில் சேரும் குறுங்குடியே ...

(நா.தி.பி., 1799)

என்று பாடலில் "பெண் நாரையைப் போல நாமும் திருமாலின் அடிமைத் தன்மையில் ஈடுபட்டிருக்க வேண்டும் என்பதை உள்ளுறையாக உணர்த்துகிறது. இதுபோன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பக்தியைப் பாடுபொருளாக, உள்ளுறையாக கொண்டு பல பாடல்கள் அமைந்திருக்கின்றன எனலாம்.

**சுட்டிக் கூறிய உவமம்**

சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள உவமையானது உருபளவிலும் கருத்தளவிலும் எவ்வித மாற்றமும் இன்றி நாலாயிர திவ்யப் பிரபந்தத்துள் இடம்பெற்றுள்ளது. இரண்டு பக்கமும் நெருப்பிடையே சிக்கிய எறும்பை சங்க இலக்கியம்,

இருதலைக் கொள்ளி இடைநின்று வருந்தி
ஒருதலைப் படாஅ உறவி போன்றனம் ...

(அகம்., 339)

என்ற உவமையானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

இருபாடெரி கொள்ளியினுள் எறும்பே போல் ...

(நா.தி.பி., 2025)

என்றும்,

கொள்ளிமே லெறும்பு போலக் ...

(நா.தி.பி., 2040)

என்றும் இடம்பெற்றுள்ளது.

**சுட்டிக் கூறிய வுவமம்**

தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள உவம உருபுகளாக அன்ன, ஏய்ப்ப உறழ ஒப்ப, என்ன, மான, ஒன்ற, வொடுங்க வொட்ட, வாங்க, வென்ற, வியப்ப, வெள்ள, விழைய, விறப்ப நிகர்ப்ப, கள்ள, கடுப்ப, காய்ப்ப, மதிப்ப, தகைய, மருள, மாற்ற மறுப்ப, புல்ல, பொருவ, பொற்ப, போல, வெல்ல, வீழ, நாட, நளிய நடுங்க, நந்த, ஓட, புரைய என்பன போன்றவற்றைக் குறிப்பிட்டு உள்ளார். இவ்வுவம உருபுகள் சங்க இலக்கியத்தில் இடம்பெற்று இருப்பினும் இவற்றில் சில உவம உருபுகளே பக்தி இலக்கியமான நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ளது.

**வினைப்பாலுவமம்**

தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள உவம உருபுகளை உவமத்தின் தோற்றவாயில்களுக்கும் பகுத்தளித்துள்ளார். அவற்றுள் திவ்யப் பிரபந்தத்திற்குப் பொருத்தமாக அன்ன என்ன என்ற இரண்டு உவம உருபுகளும் இடம்பெற்றுள்ளன.

**1. அன்ன**

*அன்ன என்ற உவம உருபானது சங்க இலக்கியத்தில்,*

**எரியகைந் தன்ன தாமரைப் பழனத்து ...**

(அகம்., 106)

*என்று இடம்பெற்றுள்ளது. இந்த உவம உருபானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

**பாலன்ன வண்ணத்து உன் பாஞ்ச சன்னியமே ...**

(நா.தி.பி., 499)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**2. என்ன**

*என்ன என்ற உவம உருபானது சங்க இலக்கியத்தில்,*

**புலியென்னக் கலிசிறந்துராஅய் ...**

(ப.பாலை, 85)

*என்று இடம்பெற்றுள்ளது. இந்த உவம உருபானது நாலாயிர திவ்யப் பிபந்தத்தில்,*

**நெருப்பென்ன நின்ற நெடுமாலே ...**

(நா.தி.பி., 498)

*என்று இடம்பெற்றுள்ளது.*

**மெய்யுவமம்**

மெய்யுவமத்தில் இடம்பெற்றுள்ள புரைய என்ற உவம உருபானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளது.

உரல் புரை பாவடி ...

(கலி., 21)

*என்று சங்க இலக்கியம் குறிப்பிடுவதை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,*

பொன் புரை மேனி ...

(நா.தி.பி., 548)

என்று குறிப்பிட்டுள்ளது.

**உருவுவமம்**

*உருவுவமத்தில் இடம்பெற்றுள்ள போல, ஒப்ப என்ற இரண்டு உவம உருபுகளும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ளன போல என்ற உருபானது சங்க இலக்கியத்தில்,*

பொன்போற் செய்யு மூர்கிழவோனே ...

(ஐங்., 41)

*என்று குறிப்பிடுகிறது. இந்த உவம உருபை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,*

பொருந்தார்கை வேல் நுதி போல் பரல் பாய ...

(நா.தி.பி., 734)

*என்று குறிப்பிட்டுள்ளது.*

*ஒப்ப என்ற உவம உருபானது ஒக்கு என்று சொல்லில் மாற்றம் பெற்று சங்க இலக்கியத்தில்,*

ஒண் செங்காந்த வொக்கு நின்னிறம் ...

*என்று பொருள் மாற்றம் பெறாமல் இடம்பெற்றுள்ளது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,*

கடிமாமலர்ப் பாவை யொப்பாள் ...

(நா.தி.பி., 1216)

*என்று உவம உருபு மாற்றம் பெறாமல் குறிப்பிட்டுள்ளது.*

**சிறப்பு உவமம் சுட்டிக் கூறிய உவமம்**

*உவமிக்கப்படும் பொருள் சிறப்புற அமைதல் அதாவது மிக உயர்ந்த பொருளாகவும், அரிதாகவும் இடம்பெற்றல் ஆகும். இவற்றுள் நிலவும், சூரியனும் இடம்பெற்று உவமிக்கப்பட்டுள்ளனர். என்பதனை,*

தண்கதிர்மதியம் போலவும் தெறுசுடர்
ஒண்கதிர் ஞாயிறு போலவும்

(புறம்., 6)

என்று நிலவின் குளிர்ந்த கதிர்களும், சூரியனின் நெருப்புக் கதிர்களும் உவமிக்கப்படுகின்றன. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தமானது ஒருசேர,

திங்களும் ஆதித்யனும் எழுந்தாற் போல்

(நா.தி.பி., 495)

என்றும்,

கார்மேனிச் செங்கண் கதிர் மதியம் போல் முகத்தான்

(நா.தி.பி., 474)

என்றும் இடம் பெற்றுள்ளது. மதுரைக் காஞ்சியிலும் (21.7) இச்செய்தி இடம்பெற்றுள்ளது.

**சுட்டிக்கூறிய உவமம், கருத்து மற்றும் உவம உருபு பொருத்தம்**

சங்க இலக்கியத்தில் குறுந்தொகையில் இடம்பெற்றுள்ள உவமையானது எவ்வித மாற்றமும் இன்றி நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ளது. குழந்தையை ஒருதாய் அடித்தாலும் அக்குழந்தை அழுதுக்கொண்டே மீண்டும் தாயிடம் வரும் என்பதை,

தாயுடன் றலைக்கும் காலையும் வாய்விட்
டன்னா வென்னுங் குழவிபோல்

(குறுந்., 397)

என்று இடம்பெற்றுள்ளது. இதே உவமை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள் தன்
அருள் நினானந்தேயழும் குழவியதுவே போன்றிருந்தேனே

(நா.தி.பி., 688)

என்று குழந்தைத் தாயிடம் மீண்டும் மீண்டும் செல்வதைப் போன்று நானும் உன்னிடமே இருக்கிறேன் என்று திருமாலிடம் குலசேகரர் புலம்புவதாக அமைந்துள்ளது.

பட்டினப்பாலையில் வளத்தை வருணிக்கும் போது சோறுவடித்த கஞ்ச ஆறுபோல வந்தது என்ற உவமைபயன்படுத்தப்பட்டுள்ளது. என்பதை,

சோறுவாக்கிய கொழுங்கஞ்சி
யாறு போலப் பரந்தொழுகி

(ப.பாலை, 4-15)

*என்ற உவமை பயன்படுத்தப்பட்டுள்ளது. பெருமாள் திருமொழியில் இந்த உவமை, சிறிது மாற்றம் பெற்று*

ஆறுபோல் வருங் கண்ணநீர் கொண்டு
அரங்கன்கோயில் திருமுற்றம்
சோறு செய்ய தொண்டர் சேவடிச்

(நா.தி.பி., 660)

*என்று இடம் பெற்றுள்ளது.*

**சுட்டிக் கூறாவுவமம்**

*பெண்களின் மேனி நிறம் அழகியது என்பதைக் கூறும்போது "தளிரேர் மேனி" (நற். 251, ஐங். 365) என்று கூறப்பட்டுள்ளது. நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இக்கருத்துக் கையாளப்பட்டுள்ளது. என்பதை,*

மாந்தளிர் மேனி வண்ணமும் பொன்னம்

(நா.தி.பி., 1110)

*என்று உவமிக்கப்படுகிறது.*

*பெண்கள் சிரிக்கும்போது அவர்களுடைய பற்கள் முல்லையரும்பும், முத்தும் போன்று வெண்மையுடன் காணப்படும் என்பதை,*

முகை முல்லை வென்று எழில் முத்து ஏய்க்கும் வேண்டல்

(ப.பா., 3-8)

*என்று கூறப்படுவதைப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும், என்றும்,*

பனிசேர் முல்லைப் பல்லரும்ப

(நா.தி.பி., 1509)

*என்றும் உவமிக்கப்பட்டுள்ளது.*

*தலைவியை வருணிக்கும் போது அவளுடைய வாயை,*

ஊறு நீர் அமிழ்து ஏய்க்கும் எயிற்றாய்

(கலி., 20-11)

*என்று கூறுவதை நாலாயிர திவ்யப் பிரபந்தமும்,*

சீதை வாயமுதம் உண்டாய்

(நா.தி.பி., 91)

*என்று எடுத்துக்காட்டுகிறது.*

வள்ளல்களைப் பற்றி பாடும்போது ஈகைத் தன்மை உடையவர்கள் தம்மிடம் சிறிது பொருள் இருந்தாலும் அதனைப் பிறருக்குக் கொடுத்து உதவுவதால் வறியவர்கள் அவர்களிடம் சென்று இரந்து நிற்பர். ஆனால் பொருள் அதிக அளவு வைத்திருப்பினும் பிறருக்குக் கொடுக்க மனம் இல்லாதவர்களிடம் யாரும் சென்று இரந்து நிற்க மாட்டார்கள் என்பதை,

தென்னீர்ப் பரப்பின் இமிழ்திரைப் பெருங்கடல்
உண்ணார் ஆகுப நீர் வேட்டோரே
ஆவும் மாவும் சென்றுணக் கலங்கிச்
சேறொடு பட்ட சிறுமைத் தாயினும்
உண்ணீர் மருங்கல் அதர்பல ஆகும்

(புறம்., 204)

என்று எடுத்துக்காட்டுகிறது. இந்த உவமையானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

கட்டியும் கைத்தால் இன்னாமை
அறிதியே கடல் வண்ணனே

(நா.தி.பி., 521)

என்ற நாச்சியர் திருமொழியில் இடம்பெற்றுள்ளது. இதற்கு விளக்கம் அளிக்கும் போது தலைவியிடம் கடல்போன்று உவர்ப்புத் தன்மை உடையவனாக இலக்கின்றாயே என்று அழகுத் தமிழும் ஆண்டாள் பாவையும் என்ற நூலில் விளக்குகிறார் ஆசிரியர் வி.மு.உலகநாதன்.

பெண்களின் நெற்றிபிறைக்கு உவமிக்கப்படுதல் சங்க இலக்கிய மரபாகும். அவ்வகையில் இதனை,

பிறைநுதல் ...

(நற்., 66)

என்று கூறப்படுவதைப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தமும்,

பிறையுடை வாணுதல்...

(நா.தி.பி., 1136)

என்று குறிப்பிடுகிறது.

*தலைவனைப் பிரிந்ததால் தலைவியடைந்த நோயை சங்க இலக்கியம் குறிப்பிடும்போது,*

கன்றுமுண்ணாது கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்துக்கா அங் ...

(குறுந்., 27)

*என்று குறிப்பிட்டுள்ளது. இதே உவமையானது ஆண்டாளின் திருப்பாவையில்,*

கனைத்திளங் கற்றெருமை கன்றுக் கிரங்கி
நினைத்து முலைவழியே நின்று பால்சோர
நனைத்தில்லம் சேறாக்கும் ...

(நா.தி.பி., 485)

*என்று சுட்டிக்கூறாவுவமாகப் பாடப்பட்டுள்ளது.*

*பெண்களின் மார்பை வருணிக்கும்போது பணையோடு ஒப்பிட்டு வருணித்தனர் என்பதை,*

மனையமுது ஒழிந்த புன்தலைச் சிறாஅர்
துனையதின் முயன்ற தீங்கண் நுங்கின்
பணைகொள் வெம்முலை பாழுபெற்று உவக்கும்

(நற்., 392)

*என்று கூறப்பட்டுள்ளது. இதனை,*

பணைமுலையாயர் மாதர்

(நா.தி.பி., 1990)

*என்று திவ்யப் பிரபந்தமும் உவமிக்கிறது.*

*ஆய்ச்சியர்களின் தொழில் தயிர் கடைதல் விடியற் காலையில் அவர்கள் தயிர்கடையும் போது ஏற்படுகின்ற ஓசையானது புலியின் முழக்கம் போன்று இருந்தது என்பதை,*

புலிகுரல் மத்தம் ஒலிப்ப வாங்கி
ஆம்பி வால் முகை அன்ன கூம்புமுகிழ்
உறைஅமை தீந்தயிர் கலக்கி நுரைதெரிந்து

(பெரும்., 156-158)

*என்ற உவமை வெளிப்படுத்துகிறது. ஆய்ச்சியர்கள் தயிர் கடைதல்,*

காசும் பிறப்பும் கலகலப்பக் கைபேர்த்து
வாச நறுங்குழல் ஆய்ச்சியர் மத்தினால்
ஓசைப் படுத்ததயிர் அரவம்

(நா.தி.பி., 480)

என்று இடம்பெற்றுள்ளது.

பெண்களின் முகத்தை நிலவோடும் அதன் ஒளியோடும் ஒப்புமைப்படுத்தல் சங்க இலக்கிய மரபாகும். இதனை,

அணிமுகம் மதியேப்ப அம்மதியை நனியேய்க்கும்
அணிமுகம் ...

(கலித்., 64)

என்று குறிப்பிட்டுள்ளது. இவ்வுவமையை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,

திங்கள் திருமுகத்துச் சேயிழையார் ...

(நா.தி.பி., 1108)

என்று சுட்டிக்கூறா உவமமாகவே குறிப்பிட்டுள்ளது.

தலைவியின் அழகை எடுத்துக் காட்டும்போது பெரும்பாலும் நலம் உவமம் எடுத்துக்காட்டப்படுகிறது. அவ்வகையில் தலைவியின் நடை, எழில், சாயல் போன்றவை பறவைகளோடு ஒப்பிடப்படுகிறது. அதனை,

ஆய்தூவி அனமென அணிமயில் பெடை எனத்
தூதுணம் புறவு எனத் துறைந்த நின் எழில்நலம்

(கலி., 56)

என்று எடுத்துக் காட்டப்படுவதைப் போல நாலாயிர திவ்யப் பிரபந்தமும் தலைவியை மயிலாக எடுத்துக்காட்டியுள்ளது.

புனமயிலே

(நா.தி.பி., 484)

என்று கூறுகிறது.

பெண்கள் கண்களின் வடிவத்திற்கு கயல்மீனும், கெண்டை மீனும் உவமைப் படுத்தப்பட்டுள்ளது. இதனை,

கயலேர் உண்கட்குறுமகட்கு

(நற்.220)

*என்று பரிபாடலிலும் இடம்பெற்றுள்ளதைப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளது. இதனை,*

கெண்டையொண்கண் மடவாளொருத்தி

(நா.தி.பி., 699)

*என்றும்,*

மாதரார் கயற்கண் ணென்றும்

(நா.தி.பி., 887, 2492)

*என்ற பாடல்வரியில் இடம்பெற்றுள்ளது.*

*சங்ககாலப் பாடல்களில் தலைவனை வருணிக்கும் போது அவனுடைய வீரம் பொருந்திய மார்பும் உவமிக்கப்படுகிறது. இதனை,*

வரை மார்பு

(புறம்., 208)

*என்று மலைபோன்ற மார்பை உடையவன் தலைவன் என்று உவமிக்கப்பட்டுள்ளது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

பொன்தோய் வரைமார்பில் பூந்துழாய்

(நா.தி.பி., 2283)

*என்று திருமால் உவமிக்கப்படுகிறான்.*

**காதல் பற்றிய உவமம்**

*காதலை அடிப்படையாக வைத்துத் தோன்றிய உவமைகள் காதல் உவமைகள் ஆகும். இவைப் பெரும்பாலும் தலைவியின் பிரிவில் ஏற்படும் மாற்றம் பற்றி வருகிறது.*

*கார்காலத்தில் வருகிறேன் என்று கூறி பிரிந்து சென்ற தலைவன் வாராமையால் தோட்டத்தில் மலர்ந்திருக்கின்ற முல்லைப் பூக்கள் தலைவியைப் பார்த்து ஏளனமாக சிரிக்கின்றன என்று,*

தொகுமுகை இலங்கு எயிறாக
நகுமே தோழி நறுந்தண் காரே

(குறுந்., 126, 192)

*என்று விளக்குகின்றன. இதே உவமையானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,*

போர்களிறு பொரும் மாலிருஞ்சோலையம் பூம்புறவில்

கார்க் கொடி முல்லைகளும் தவளநகை காட்டுகின்ற

கார்க்கொள் பீடாக்கள் நின்று கழறிச் சிரிக்கத்தரியேன்

(நா.தி.பி., 588, 600)

என்ற பாடல் விளக்குகிறது.

தலைவனுடன் உடன்போகிய தலைவியை நினைத்து செவிலி புலம்பும் போது தலைவன் காளை போன்றவன் என்று சுட்டிக்கூறா உவமமாகக் குறிப்பிடப்படுகின்றான். இதனை,

ஒரு மகள் உடையேன் மன்னே அவளுஞ்

செருமிகு மொய்ம்பிற் கூர்வேற் காளையொடு

பெருமலை அருஞ்சுரம் நெருநற் சென்றனள் ...

(நற்., 184)

என்று செவிலி கூற்றாகப் பாடப்பட்டுள்ளது. இந்த உவமையை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்

கோளரி மாதவன் கோவிந்தன் என்பானோர்

காளை புகுதக் கணாக் கண்டேன் தோழி நான் ...

(நா.தி.பி., 557)

என்று சுட்டிக்கூறா உவமமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது.

பெண்களின் இடையை வருணிக்கும் போது ஒளிபொருந்தியதாகவும், சிறியதாகவும் இருக்கும் என்பதை,

மின்னேர் மருங்குல் குறுமகள்

(அகம்., 126)

என்றும், நற்றிணையிலும், ஐங்குறுநூற்றிலும், குறுந்தொகையிலும் பதிற்றுப்பத்திலும், பரிபாடலிலும், கலித்தொகையிலும், புறநானூற்றிலும் பத்துப்பாட்டிலும் இடம்பெற்றுள்ளது. இதை நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும்,

மின்னனைய நுண்ணிடையாள்

(நா.தி.பி., 682, 702)

என்றும் உவமிக்கப்படுகிறது.

**சுட்டிக்கூறா உவமம்**

பெண்களின் பற்களை வருணிக்கும்போது அதனுடைய தன்மைக்காக முள்ளை உவமிப்பதும் சங்கப் புலவர்களின் உத்தியானது இதனை,

வண்டுபடு கூந்தற் றண்டழைக் கொடிச்சி
வளையண் முளைவா ளெயிற்ற

(ஐங்., 256)

என்றும் குறிஞ்சிப்பாட்டிலும் இடம்பெற்றுள்ளது போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும்,

முளைவா ளெயிற்று மடவார்

(நா.தி.பி., 1225)

என்று இடம்பெற்றுள்ளது.

**உருபு மாற்றம்**

சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள சுட்டிக்கூறிய உவமமானது திவ்யப் பிரபந்தத்திலும் உருபு மாற்றம் பெற்று சுட்டிக்கூறிய உவமமாக இடம்பெற்றுள்ளது. யானையினுடைய தோற்றத்திற்கு மலையை உவமித்தலை,

குன்றத்தன்ன களிறு பெயரக் ...

(புறம்., 125)

என்பதில் அன்ன என்ற உவம உருபு பயன்படுத்தப்பட்டுள்ளது. இதே, உவமையானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

கரிய மாமுகிற் படலங்கள் கிடந்தவை முழுங்கிட
களிறென்று பெரிய மாசுணம் வரையெனப் ...

(நா.தி.பி., 967)

என்று உருபு மாற்றம் பெற்று இடம்பெற்றுள்ளது.

மேலும் இறைவனாகிய திருமால் கரிய மேனியை உடையவன் என்பது சங்க இலக்கியப் பாடல்கள் பலவற்றாலும் அறிய முடிகிறது. குளிர்ச்சியான இருளும் இளவெயிலும் சேர்ந்திருக்கும் காட்சியைப் பார்க்கும் போது இருள்போன்ற மேனியை உடைய கண்ணன் பலராமனுடன் சேர்ந்திருப்பது போல இருக்கின்றது என்று பரிபாடல் கூறுகிறது. அதேப் போன்று முல்லைப்

பாட்டிலும் அந்நிலத்திற்கேயுரிய மேகத்தின் தோற்றத்திற்கு ஒப்புமைப்படுத்தப்படுகிறான்.

திருமாலின் நிறத்தை சங்க இலக்கியம் குறிப்பிடும் போது,

கார்மலர் பூவைகடல் இருள்மணி
அவை ஐந்தும் உறழும் அணிகிளர் மேனியை ...

(பரி., 13)

என்று கூறுகிறது. ஆனால் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்

கருவுடை முகில் வண்ணன் காயா வண்ணன்
கருவிளை போல் வண்ணன் ...

(நா.தி.பி., 509)

என்று குறிப்பிடுகிறது. இவற்றுள் சங்க இலக்கிய உவமஉருபு இடம்பெறாமல் வேறொரு உவம உருபு (போல) இடம் பெற்றுள்ளது. இதனால் சங்க இலக்கிய உவமஉருபு மாற்றமடைந்துள்ளதை அறிய முடிகிறது.

பெண்களின் தோள்கள் உவமிக்கப்படும்போது மூங்கில் போன்ற தோல் என்றும் பணைத் தோள் என்றும் உவமிக்கப்படுகின்றது, என்பதை,

போதும் பணையும் போலும் யாழநின்
மாதர் உண்கணும் வனப்பின் தோளும்

(நற். 166)

என்றும் இடம்பெற்றுள்ளது. இது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

வேயின் மலிபுரை தோளி

(நா.தி.பி., 2992)

என்றும் இடம்பெற்றுள்ளது.

**உருபு மாற்றம்**

புன்னை மரத்தைப் பற்றி பாடும்போது எல்லாம் சங்கப் புலவர்கள் பெரும்பாலும் பொன்னையும் முத்தையும் பயன்படுத்தியிருக்கின்றனர். என்பதை,

இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
நீலத்து அன்ன பாசிலை அகந்தோறும்

வெள்ளி அன்ன விளங்கிணர் நாப்பண்
பொன்னின் அன்ன நறுந்தாது உதிர

(நற்., 249)

என்று எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. இதை நாலாயிர திவ்யப் பிரபந்தமும்,

இரும்புன்னை முத்தரும்பிச் செம்பொன் காட்ட
செழுத்தட நீர்க்கமலம் தீவிகை போல் காட்டும்

என்று எடுத்துக்காட்டுகிறது.

இவற்றுள் சங்க இலக்கியத்துள் இடம்பெற்றுள்ள உவம உருபு ''அன்ன'' என்றும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ள உவம உருபு ''போல'' என்றும் மாற்றம் பெற்றுள்ளது.

சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள சுட்டிக்கூறா உவமமானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சுட்டிக் கூறிய உவமமாக இடம்பெற்றுள்ளது. சங்க இலக்கியத்தில் பால்போன்ற நிறமுடையது சங்கு என்ற செய்தியானது,

வளையான் தீம்பால் மிளைசூழி கோவலர்
வளையோர் உவப்பத் தருவனர் சொரிதலிற் ...

(மலைபடு., 409-410)

என்று சுட்டிக்கூறாவுவமாக இடம்பெற்றுள்ளது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் ஆண்டாள் சுட்டிக் கூறிய உவமமாக,

பாலன்ன வண்ணத்து உன் பாஞ்ச சன்னியமே ...

என்று பாடியுள்ளார்.

மேலும்,

சங்க இலக்கியத்தில் சிலர் நிலவு போன்ற ஒளியையுடைய மாலையை அணிந்தனர் என்பதை,

நிலவு ஆரம்

(நற்.,)

என்று சுட்டிக் கூறா உவமமாகக் குறிப்பிட்டுள்ளது. ஆனால் திவ்யப் பிரபந்தமோ திருமால் அணிந்திருந்த ஆரத்தின் ஒளியை,

பல்சுடர்களும் போல் மின்னு நீள் முடியாரம் ...

(நா.தி.பி., 3536)

என்று சுட்டிக்கூறிய உவமமாகக் குறிப்பிடுகிறது.

சங்க இலக்கியத்தில் சுட்டிக் கூறா உவமமாக இடம்பெற்றுள்ள செய்தியானது திவ்யப் பிரபந்தத்தில் சுட்டிக் கூறிய உவமமாக இடம்பெற்றுள்ளது. தலைவனைப் பிரிந்ததால் அழுகின்ற தலைவியினது கண்ணீர் அருவிபோல ஓடுகின்றது என்பதை சங்க இலக்கியம்,

கண்ணீர் அருவியாக

அழுமே தோழி அவர் பழமுதிர்குன்றே ...

(நற்., 88)

என்று சுட்டிக் கூறா வுவமாகக் குறிப்பிடுகிறது. இதனை, நாலாயிர திவ்யப் பிரபந்தம்,

வண்பொன்னிப் பேராறுபோல் வரும் கண்ணநீர் கொண்டாள் ...

(நா.தி.பி., 660)

என்று கூட்டிக் கூறிய உவமமாகக் குறிப்பிடுவதோடு தலைவி அழுத தண்ணீர் பேராறுபோல வருகிறது என்றும் குறிப்பிட்டுள்ளார்.

சங்க இலக்கியத்தில் சுட்டிக் கூறாமல் இடம்பெற்றுள்ள உவமையானது திவ்யப் பிரபந்தத்தில் சுட்டிக் கூறிய உவமமாக இடம்பெற்றுள்ளது. பொதுவாகவே இலக்கியங்களில் பெண்களை வருணிக்கும்போது ஒப்பற்ற பெண்ணாக வருணித்தல் தொன்று தொட்டு வருகின்ற மரபாகும். அவ்வகையில் பெண்ணின் குரல் கிளிபோன்று இனிமையாக இருத்தல்,

கிளி மழலை மென் சாயலோர் ...

(பத்து., 9, 150)

என்று உவமஉருபு இல்லாமல் சுட்டிக்கூறாவுவமமாக குறிப்பிடப்பட்டுள்ளது. அதே உவமையானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சுட்டிக் கூறிய உவமமாக

கிளிபோல் மிழற்றி நடந்து ...

(நா.தி.பி., 1204)

என்று ஊவமஉருபு பெற்று பாடப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் சுட்டிக் கூறிய உவமமாக இடம்பெற்றுள்ள உவமையானது திவ்யப் பிரபந்தத்தில் சுட்டிக் கூறா உவமையாக இடம்பெற்றுள்ளது. பெண்கள் பிரிவுகாலத்தில் பசலை நோயுடன் காணப்பட்டனர். அப்போது அவர்கள் இருந்த நிறத்தை, சங்க இலக்கியம்,

பொன்னுடை மணியன்ன மாமை ...

(கலி., 108)

என்று சுட்டிக்கூறிய உவமமாகக் குறிப்பிட்டுள்ளது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,

பொன்குலாம் பயலை பூத்தன மென்தோள் ...

(நா.தி.பி., 1116)

என்று சுட்டிக்கூறா உவமமாகக் குறிப்பிட்டுள்ளது.

மேலும்,

பெண்களின் வாயை வருணிக்கும் போது அவர்களின் சிவந்த வாயை,

மணிபுரை செவ்வாய் ...

(கலி., 79)

என்று உவம உருபோடு சங்க இலக்கியம் கூறுகிறது. இந்த உவமையை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,

பவள வாயன் ...

(நா.தி.பி., 545)

என்று சுட்டிக்கூறா உவமமாகக் குறிப்பிட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் உவம உருபு இடம்பெற்று சுட்டிக் கூறிய உவமமாக இடம்பெற்ற உவமையானது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சுட்டிக் கூறா உவமமாக இடம்பெற்றுள்ளது.

தலைவனைப் பிரிந்ததால் தலைவியின் கண்கள் எப்போதும் அழுதுகொண்டே இருக்கின்றன. மழை போன்ற வெள்ளம் கண்ணில் இருந்து கொண்டே இருக்கிறது என்பதை,

மலர் பிணைத்தன்ன மாயிதழ் மழைக்கண் ...

(நற்., 252)

என்று சுட்டிக்கூறிய உவமமாக இடம்பெற்றுள்ளதை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,

வியர்க்கும் மழைக்கண் துளும்ப ...

(நா.தி.பி., 3049)

என்று சுட்டிக் கூறா உவமமாக குறிப்பிடுகிறது.

பெண்களின் கைவிரல்களை உவமிக்கும்போது காந்தல் மலரை உவமித்தலை, சுட்டிக் கூறிய உவமமாக,

கைபோல் காந்தள்

(நற்., 355)

என்று உவமிக்கப்பட்டுள்ளது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில், சுட்டிக் கூறா உவமமாக

காந்தள் விரல் மென்கலை நன் மடவார்

(நா.தி.பி., 1358)

என்று எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. பத்துப்பாட்டிலும் இவ்வுவமை இடம்பெற்றுள்ளது.

மேலும்,

உவமை தோன்றும் நிலைக்கலனாக வலியென்ற வீரம் எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. அவ்வகையில் தலைவனை சிங்கத்திற்கு ஒப்பாகவும் காளைக்கு ஒப்பாகவும் கூறுதல் தமிழ் இலக்கிய மரபாகும். இதனை,

அரிமா அன்ன அணங்குடைத் துப்பின் ...

(ப.பாலை, 298)

என்பது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்

குண்டு நீருறை கோளரி

(நா.தி.பி., 516)

என்று திருமாலை சிங்கத்திற்கு உவமையாகக் குறிப்பிடுகிறது.

**மெய்யுவமம்**

வடிவம் பற்றி வரும் உவமை மெய்யுவமம் எனப்படும் இது கண், இடை, போன்றவையை உவமிக்கும்பொருட்டு வருதலாகும். கண்ணை

*உவமிக்கும் போது அதன் குளிர்ச்சிக்கும் வடிவத்திற்கும் ஏற்ப உவமிக்கின்றனர் என்பதை,*

பூ உயிர்த்தன்ன புகழ்சால் எழில் உண்கண்

(கலி., 142)

*என்றும் நற்றிணையிலும் (20), ஐங்குறுநூற்றிலும் (16, 101), குறுந்தொகையிலும் (101) இடம்பெற்றுள்ளது போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும்,*

*தாமரைக் கண், என்றும் அரிமலர்க்கண் என்றும் பரவலாக இடம்பெற்றுள்ளது. இவற்றுள் சங்க இலக்கியத்தில் சுட்டிக்கூறியும் திவ்யப் பிரபந்தத்தில்,*

தாமரைக் கண் . . .

(நா.தி.பி., 1237)

*மேலும் பெண்களின் கண்களுக்குக் குவளை மலரும் உவமையாகின்றன என்பதை,*

யொண்ணுதலரிவை பண்ணை பாய்ந்தெனக்
கண்ணறுங்குவளை நாறித்
தண்ணென்றிசினை பெருந்துறைப் புனலே

(ஐந்., 73)

*என்றும் நற்றிணையிலும், குறுந்தொகையிலும், அகநானூறிலும் இடம்பெற்றுள்ளது போன்றே நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும்*

குவளையொண் கண்ணநீர் கொண்டாள்

(நா.தி.பி., 2822)

*என்று இடம் பெற்றுள்ளது.*

**நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ள உவமைகள்**

**பெரியாழ்வார் திருமொழி**

1. *விண்டமுல்லை யரும்பன்ன பல்லினர் ... (17)*
2. *பவளவாயீர் (23) (75) (98) (259)*
3. *பணைத் தோளிளவாய்ச்சி (25)*
4. *தந்தக்களிறுபோல் தானே விளையாடும் நந்தன் மதலைக்கு ... (30)*

5. அதிரும் கடல் நிற வண்ணனை (31)

6. அஞ்சன வண்ணன் (55) (64)

7. கருமுகில் போலுருவா ... (69) (88)

8. தூயகருங்குழல் நல்தோகை மயிலனைய நப்பினை (70) 246)

9. கோல நறும் பவளச் செந்துவர் வாயினிடைக் (72)

10. செங்கமலக் கழல் (73)

11. செந்துவர் வாய்த் திண்ணைமீதே நளிர் வெண்பல் முளையிலக (87)

12. பனிபடுசிறுதுளிபோல் (92)

13. பக்கம் கருஞ் சிறுப்பாறைமீதே அருவிகள் பகர்ந்தனைய ... (93)

14. வேழத்தின் கருங்கன்று போல் (94)

15. மின்னியல் மேகம் விரைந்தெதிர் வந்தாற்போல் (97)

16. செங்கமலப்பூவில் தேனுண்ணும் வண்டே போல் (98)

17. கழல் மன்னர் சூழக் கதிர்போல் விளங்கி (101)

18. முளைக்கின்ற முத்தே போல் (108)

19. வேய்த்தடந்தோளி (117) 143) (217)

20. முத்தனைய முறுவல் (129)

21. பஞ்சியன்ன மெல்லடியால் (131)

22. மின்னனைய நுண்ணிடையார் (133 (179) (324)

23. அணிகொள் முத்தம் சிந்தினாற் போல் (136)

24. செங்கமல முகம் வியர்ப்பத் ... (136)

25. மலர்ப்பாதம் ... (140)

26. காயாமலர் வண்ணன் (163)

27. கொவ்வைக் கனிவாய் (238)

28. பொன்னடி (241)

29. செந்தாமரைக் கை விரலைந்திணையும் (269) (273)

30. மடமயில்களோடு மான் பிணைபோலவே

31. மலர்க்கண்கள் (277) (412)

32. பூவைப் பூவண்ணா (291)

33. கொவ்வைச் செவ்வாய் (293)

34. மைத்தடமுகில் வண்ணன் (294)

35. செழுங்கயற்கண்... (301)

36. வேடர் மறக்குலம் போலே வேண்டிற்றுச் செய்து என் மகளை கூடிய கூட்டமேயாகக் கொண்டு குடிவாழுங் கொலோ? *(302)*
37. தாமரைச் செங்கண் *(305)*
38. காந்தள் முகிழ் விரல் *(329)*
39. கரியமுகில் புரைமேனி மாயனை *(337)*
40. கார்க்கடல் வண்ணனம்மான் தன்னை *(348) (374)*
41. ஊத்தைக் குழியில் அமுதம் பாய்வதுபோல் *(389)*
42. பொன்னைக் கொண்டு உரைகல் மீதே நிறமொழிவுரைத்தாற்போல் *(467)*
43. பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் (அரசன்) குலபதிபோல் *(469)*

**திருப்பாவை மற்றும் நாச்சியார் திருமொழியில் இடம்பெற்றுள்ள உவமைகள்**

1. ஊழிமுதல்வனுருவம் போல் மெய்கறுத்து *(477)*
2. ஆழிபோல் மின்னி வலம்புரிபோல் நின்றதிர்ந்து *(477)*
3. செந்தாமரைக் கை ... *(491)*
4. செப்பன்ன மென்முலை *(493)*
5. கிங்கிணிவாய்ச் செய்த தாமரைப் பூப் போலவெ *(495)*
6. திங்களும் ஆதித்யனும் எழுந்தாற்போல் *(495)*
7. போதருமாபோலே நீ பூவைப் பூவண்ணா! *(496)*
8. நெருப்பென்ன நின்ற நெடுமாலே *(498)*
9. பாலன்ன வண்ணத்து உன்பாஞ்ச சன்னியமே *(499)*
10. திங்கள் திருமுகம் *(503)*
11. கானிடைத் திங்தோர் நரிப்புகுந்து கடப்பதும் மோப்பதும் செய்வதொப்ப *(508)*
12. கருவுடைமுகில் வண்ணன் காயாவண்ணன் கருவிளைபோல் வண்ணன் கமல வண்ணத் ... *(509)*
13. கடல் வண்ணன் *(505) (520)*
14. பார்க்கடல் வண்ணன் *(512)*
15. குண்டுநீருறை கோளரீ *(516)*
16. பெய்யு மாமுகில் போல் வண்ணா *(517)*

17. *செய்ய தாமரைக் கண்ணினாய் (517)*
18. *தடத்தவிழ் தாமரைப் பொய்கைத் தாள்கள் எம் காலைக் கதுவ*
    *விடத்தேளெறிந்தாலை போல வேதனை ஆற்றவும் பட்டோம் (529)*
19. *மலர்க்கண்கள் (531)*
20. *வாணுதல் (536)*
21. *பவளவாயன் (545 (567)*
22. *முத்தன்ன வெண்முறுவார் ... (550)*
23. *பைங்கிளிவண்ணன் (553)*
24. *வேற்கண் (555)*
25. *காய்சின மாகளிறன் னான் (562)*
26. *தடவரையின் மீதே சரற்கால சந்திரன் இடையுவாவில் வந்து எழுந்தாலே போல (569)*
27. *சந்திரமண்டலம் போல் தாமோதரன் கையில்*
    *அந்தரமொன்றின்றி ... (570)*
28. *செங்கமல நாண்மலர் மேல் தேனுகரும் அன்னம் போல் (573)*
29. *மதுவாயில் கொண்டாற்போல் மாதவன் தன் வாயமுதம் (575)*
30. *வீண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள் (577)*
31. *மின்னாகத் தெழுகின்ற மேகங்காள் (580)*
32. *உலங்குண்ட விளங்கனிபோல் உள்மெலிப்புகுந்து (582)*
33. *நீர்காலத்து எருக்கினம் பழவிலைபோல் வீழ்வேனை (584)*
34. *மதயானை போலெழுந்த மாமுகில் காள் (585)*
35. *தார்க்கொடி முல்லைகளும் தவளநகை காட்டுகின்ற (588)*
36. *செங்கண் கருமுகிலின் திருவுருப்போல் (591)*
37. *வேதமுதல்வர் வலங்கையில்*
    *மேல்தோன்றும் ஆழியின் வெஞ்சுடர் போலச்சுடாது ...*
38. *பாம்பணையார்க்கும் தம்பாம்புபோல் நாவுமிரண்டுள ... (599)*
39. *கணமாமயில்காள்! கண்ணபிரான் திருக்கோலம் போன்று*
    *அணிமாநடம் பயின்றாடுகின்றீர் ... (602)*
40. *மண்புறம் பூசி உள்ளாய் நின்று*
    *மெழுகூற்றினாற்போல் ... (604)*

41. *உற்றிருந்தேனுக்கு உரைப்பதெல்லாம் ஊமையரோடு செவிடர் வார்த்தை ... (617)*
42. *புண்ணில் புளிப்பெய்தாற் போலப் ... (627)*
43. *வேலால் துன்னம் பெய்தாற்போல் (628)*
44. *பணைத்தோள் ... (633)*
45. *கணங்களோடு மின் மேகம் கலந்தாற் போல் (638)*
46. *போர்த்த முத்தின் குப்பாயப் புகர்மால் யானைக் கன்றே போல் (640)*
47. *வலையில் பிழைத்த பன்றிபோல் (641)*
48. *பெருங்கார் மேகக் கன்றே போல் (641)*
49. *விரியும் கதிரே போல்வான் (642)*
50. *ஆரப் பெருகுவானம்போல் (643)*
51. *களிவண்டு எங்கும் கலந்தாற் போல் (644)*

**பெருமாள் திருமொழியில் இடம்பெற்றுள்ள உவமைகள்**

1. *வியாதமலர்ச் சென்னி விதானமே போல் ... (648)*
2. *கடல்வண்ணர் கமலக்கண்ணும் (652) (657) (708) (709) (711) (713)*
3. *முத்த வெண்ணகை செய்யவாய் ... (664)*
4. *மின்னனைய நுண்ணிடையார் (682) (702) (737)*
5. *பவள வாய் ... (685) (686)*
6. *அரிசினத்தால் ஈன்றதாய் அகற்றிடினும் மற்றவள்தன் அருள் நினைந்தேயழும் குழவியதுவே போன்றிருந்தேன்... (688)*
7. *கண்டார் இகழ்வனவே காதலன் தான் செய்திடினும் கொண்டானை யல்லால் அறியாக் குலமகள் போல் (689)*
8. *தார்வேந்தன் கோல் நோக்கி வாழும் குடிபோன்றிருந்தேனே ... (690)*
9. *வாளால் அறுத்துச் சுடினும் மருத்துவன்பால் மாளாத காதல் நோயாளன் போல (691)*
10. *வெங்கண் திண் களிறடர்த்தாய்! (692)*
11. *எங்கும் போய்க் கரைகாணாது எறிகடல் வாய் மீண்டேயும் வங்கத்தின் கூம்பேறும் மாப்பறவை போன்றேனே (692)*
12. *செந்தழலே வந்து அழலைச் செய்திடினும் செங்கமலம் அந்தரம் சேர் வெங்கதிரோற் கல்லால் அலராவால் (693)*

13. எத்தனையும் வான்மறந்த காலத்தும் பைங்கூழ்கள்

மைத்தெழுந்தமா முகிலே பார்த்திருக்கும் மற்றவைபோல் *(694)*

14. புக்கன்றிப் புறம் நிற்கமாட்டாத மற்றவைபோல் … *(695)*

15. முகில் நிறத்தாய் … *(695)*

16. தன்னையே தான்வேண்டும் செல்வம்போல் … *(696)*

17. கூர்மழை போல் பனிக்கூத லெய்தி … *(698)*

18. கெண்டையொண்கண்… *(699)*

19. வாள்முகம் … *(699)*

20. பொலியும் நீர் முகிற் குழவியே போல *(709)*

21. மதிபுரைமுகம் *(711)*

22. தாமரைக் கை *(715)*

23. நெய்வாய வேல் நெடுங்கண் *(731)*

24. கொல்லணை வேல்வரி நெடுங்கண் *(732)*

25. வரைத்தோளா… *(732)*

26. பொருந்தார் கைவேல் நுதிபோல் பரல்பாய *(734)*

27. கைம்மாவின் நடையன்ன மென்னடையும் *(735)*

28. கமலம் போல் முகம் *(735)*

29. வரைத்தோள்" *(740)*

30. செந்தளிர் வாய் மலர் நகை *(742)*

31. செந்தளிர்வாய் மலர் நகை *(742)*

32. செம்பவளத்திரள்வாய் … *(748)*

**(திருமழிசை) திருச்சந்தவிருத்தம்**

1. தன்னுளே திரைத்தெழும் தரங்க வெண்தடங்கடல்

தன்னுளே திரைத்தெழுந்து அடங்குகின்ற தன்மைபோல் *(761)*

2. சங்க வண்ணமன்னமேனி *(766)*

3. வேலைவண்ணனே *(769)*

4. வாள் எயிற்றவன் *(774)*

5. காரொடொதர் மேனி *(789)*

6. வேற்கண் மாதரார் … *(813)*

7. மேக வண்ணன் … *(871)*

**தொண்டரடிப்பொடி (திருமாலை)**

1. *பச்சைமாமலை போல் மேனி (873)*
2. *பவளவாய் (873) (891)*
3. *கமலச் செங்கண் (873) (889) (891)*
4. *கயற் கண் (887)*
5. *கார்த்திரளனையமேனி (903)*
6. *உழைக்கன்றேபோல நோக்கமுடையவர் வலையுல்பட்டு (907)*

**திருப்பள்ளியெழுச்சி**

1. *இருங்களிற்றீட்டமும் பிடியொடு முரசும்*
   *அதிர்தலில் அலைகடல் போன்றுளது ... (917)*
2. *துடியிடை (926).*

**திருப்பாணாழ்வார் (அமலானாதிபிரான்)**

1. *அந்திபோல் நிறத்தாடையும் ... (929)*
2. *கையினார் சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல் (933)*
3. *கொண்டல் வண்ணன் (936)*

**திருமங்கையாழ்வார் (பெரியதிருமொழி)**

1. *உளமனார் கண்டகனவிலும் பழுதாய் ஒழிந்தன கழிந்த அந்நாள்கள் (950)*
2. *விலங்கல் போல்*
3. *துடிகொள் நுண்ணிடை (960)*
4. *வாளெயிற்று ... (959)*
5. *முகில் வண்ணன் (965) 1176) (1228) (1218) (1265) (1339) (1406)*
6. *தாதுமல்இய பிண்டி விண்டலர்கின்ற தழல் புரையெழில் நோக்கி பேதை வண்டுகள் எரியென வரவர (966)*
7. *பெற்றதாய் போலவந்த பேய்ச்சி (968)*
8. *பித்தர் போலச் சித்தர் வேறாய் (973)*
9. *பம்ப அப்பர் மூத்தவாறு பாழ்ப்பது சீத்திரளை யொப்ப (974)*

10. *செப்பு நேர் மென் கொங்கை நல்லார் ... (974)*

11. *குவளையங்கண்ணி (975)*

12. *விலங்கலிலூஞ்சிமேல் நின்ற விசும்பில் வெண்துகிற்*
 *கொடியென விரிந்து ... (980)*

13. *முந்நீர் வண்ணன் (987)*

14. *நிலவும் சுடரும் இருளுமாய்நின்றான் (990)*

15. *காயாமலர் வண்ணன் (993)*

16. *வாளெயிற்றோர் (1010) (1580)*

17. *மானேய் கண்மடவார் (1029) (1470) (1992)*

18. *வரைத்தோளா (1044)*

19. *வேயினன்ன தோள் மடவார் (1058) (1212)*

20. *பிணைமான் நோக்கின் (1091) (1390)*

21. *இலங்கொளிசேர் மணிக்குன்றன்ன*
 *ஈரிரண்டு மால்வரைத் தோளெம்மான் ... (1092)*

22. *தாமரைக்கண் (1097) (1237) (1635) (1718) (1760) (1763) (1764) (1766)*

23. *திவளும் வெண்மதிபோல் திருமுகத்தரிவை... (1108) (1183) (1470) (1509)*

24. *குவளையங்கண்ணி கொல்லியம் பாவை (1108) (1109) (1180) (1182) (1675)*

25. *மாந்தளிர் மேனி வண்ணமும் பொன்னாம் (1110)*

26. *இயல்நெடுங்கண் (1112) (1116)*

27. *வாளெயிற்றோடு (1118) 1140) (1225) (1412)*

28. *தாமரையன்ன கண்ணும் (1124) (1129)*

29. *பிறையுடை வாணுதல் (1136)*

30. *கடல்போது முழங்கும் குரல் கருவாய் (1136)*

31. *இரும்புன்ன முத்தரும் பிச்செம்பொன் காட்ட*
 *செழுந்தட நீர்க்கமலம் தீவகை போல் காட்டும் (1140)*

32. *கருங்களிறு போலநின்று (1143)*

33. *காவடிவின் கற்பகமே போலநின்று (1146)*

34. *மரகதத்தை மழை முகிலே போல்வான் தன்னை (1147) (1406)*

35. *மின்னின் நுண்ணிடை மடங்கொடி (1154) (1353) (1483) (1533) (1787)*

36. *வேல்கண் மடவார் (1166) (1225) (1234) (1230) (1508) (1552) (1911)*

37. பருவக் கருமுகிலொத்து முத்துடைமாகடலொத்து அருவத்திரள் திகழ்கின்ற ஆயிரம் பொன்மலை யொத்து (1172)
38. அணங்கெழுமாமலை போலே (1173)
39. அஞ்சனமாமலை போலே (1174)
40. மலர்க்குமுதம் வாயென்றும் (1180)
41. வாளாய கண் (1202) (1243) (1390) (1485)
42. குரைகடல் மேல் குலவரைபோல் (1204)
43. கிளிபோல் மிழற்றி (1209)
44. பஞ்சிய மெல்லடி (1210) (1319) (1917)
45. பணைத்தோளி (1210) (1185) (1216) (1676)
46. பவளச் செவ்வாய் (1185) (1318)
47. நீலத்தடவரை மாமணி நிகழக் கிடந்ததுபோல் (1189)
48. சோலைத்தலக் கணமாமயில் நடமாட மழைமுகில் போன்றெழுந்து (1189)
49. கடிமாமலர்ப் பார்வை யொப்பாள் (1216)
50. முத்த வெண்ணகை (1282)
51. மரகதம் போல் மடக்கிளியைக் கைமேல் கொண்டு தேன்போலும் மென்மழலை பயிற்றும் நாங்கூர் (1283) (1622)
52. பாலின் நல்ல மென்மொழியாள் (1323)
53. பண்ணினன்ன மென் மொழியாள் (1326) (1811)
54. ஆசையென்னும் கடல் ... (1330)
55. பொன்னின் வண்ணம் மணியின் வண்ணம் புரையும் திருமேனி (1335)
56. காந்தள் விரல் (1358)
57. தையலார் குழலணைவான் (1373)
58. அந்திபோலும் நிறத்தார் (1378)
59. தோகைமாமயிலனனர் (1422)
60. மூரிப்பெருங்களிற்றால் விளிந்தீந்த மாமரம்போல் (1475)
61. விலங்கும் கயலும் வேலும் ஒண் காவியும் வென்றகண் (1482) (1547)
62. வில்லேர் நுதலார் (1484) (1552)
63. பிறைநேர் நுதலார் (1487)
64. பனிசேர் முல்லை பல்லரும்ப (1509)
65. நள்ளார் கமலம் முகங்காட்டும் (1509)

66. *அம்பன்ன கண்ணாள் (1523)*
67. *தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம் (1543)*
68. *தாமரை யன்ன பொன்னாரடி (1578)*
69. *வெந்தழல் போல் கூந்தலாளை (1578)*
70. *மைவிரியும் மணிவரை போல் மாயவனே (1584)*
71. *மென்தளிர் போலடியினானை (1584)*
72. *பூமாண் சேர் கருங்குழலார் போல் நடந்து வயல் நின்ற பெடையோடு அன்னம் (1587)*
73. *மழைபோலொளிவண்ணா (1609)*
74. *கார்வண்ணா (1614) (1636) (1637) (1891) (1943) (1948)*
75. *கடல் போலோளி வண்ணா (1614) (1636) (1639)*
76. *முழுநீலமும் மலராம்பலும் அரவிந்தமும் விரவி*
    *கழுநீரொடு மடவாரவர் கண்வாய் முகமலரும் ... (1633)*
77. *புனலுருவா (1636)*
78. *கொண்டல் நிற வண்ணன் (1687)*
79. *மலர்க் கண் (1781) (1931) (2020)*
80. *அன்ன மென்னடை (1809) (1921) (1966)*
81. *பூணுலாமென் முலைப் பாவைமார் (1810)*
82. *வாணுதலாள் (1834)*
83. *நீலமா முகில் வண்ணன் (1847) (1879)*
84. *கூத்தர் போல ஆடுகின்றோம் (1868)*
85. *கண்டஞ்சிக் கருமுகில் போல்*
    *நீலன் வாழ்க சுடேணன் வாழ்க ... (1870)*
86. *குன்று போல ஆடுகின்றோம் (1872)*
87. *குவளை வண்ணன் (1875)*
88. *செங்கமலம் புரைவாயா (1899)*
89. *மதக்களிறன்னாய் (1881)*
90. *தாமரைக் கண்ணன் (1890) (2030)*
91. *கமலச் செவ்வாய் (1918)*
92. *கெண்டையொணண் கண் (1960)*
93. *பணை முலையாயர் மாதர் (1990)*

94. மையார்கடலும் மணிவரையும் மாமுகிலும்
கொய்யார் குவளையும் காயாவும் போன்று இருண்ட மெய்யானை *(2016)*

95. கனையார்கடலும், கருவிளையும் காயாவும் அனையான் *(2018)*

96. ஆற்றங்கரை வாழ்மரம் போல் அஞ்சுகின்றேன் *(2022)*

97. காற்றத்திடைப்பட்ட கலவர் மனம்போல் *(2023)*

98. பாம்போடு ஒரு கூரையிலே பயின்றாற் போல் *(2024)*

99. இருபாடெரி கொள்ளியினுள் எறும்பே போல் *(2025)*

100. வெள்ளத்திடைப்பட்ட நரியினம் போலே ... *(2026)*

101. இரும்பனன்றுண்ட நீர்போல் ... *(2036)*

102. கரும்பினின் சாறு போலப் ... *(2036)*

103. ஓசையிலெரி நின்றுண்ணும் கொள்ளிமேலெறும்பு போல ... *(2040)*

104. காவிபோல் வண்ணர் *(2043)*

**(திருமங்கை) திருநெடுந்தாண்டகம்**

1. புனலுருவாய் *(2052)*
2. பவளவண்ணா *(2060)*
3. கயல்கண் *(2068) (2075)*
4. தாமரைவாய் *(2072)*
5. தாமரைக்கண் *(2072)*
6. அரவிந்த அடி *(2072)*
7. மேகவண்ணா *(2081)*

**பொய்கையாழ்வார்-முதல் திருவந்தாதி**

1. கார் மேனி *(2086)*
2. மலர்ச் சேவடி *(2101)*
3. வரைமேல் மரகதமேபோல *(2106)*
4. முகில் வண்ணன் *(2115)*
5. குன்றனைய குற்றம் செயினிம் ... *(2122)*
6. முகிழ்விரிந்த சோதிபோல் தோன்றும் சுடர்ரியின் நெடுமுடி ... *(2130)*
7. தேனாகிப் பாலாகும் திருமாலே ... *(2173)*

### பூதத்தாழ்வார் இரண்டாம் திருவந்தாதி

1. *தாமரைக் கண் ... (2199)*
2. கோல் தேடியோடும் கொழுந்ததே போன்றதே
3. *வாளெயிற்று (2249)*
4. *பணைத்தோள் (2260)*

### (பேயாழ்வார்) மூன்றாம் திருவந்தாதி

1. *தேங்கோத வண்ணன் (2284)*
2. *கண்ணும் கமலம் (2290)*
   *கமலமே இதைத்தலமும் (2290)*
3. *கடல் நீர் வண்ணன் (2290)*
4. *புனல் வண்ணன் (2292)*
5. *வாளெயிற்று (2309)*
6. *பவளச் செவ்வாய் (2310) (2318)*
7. *கரிய முகிலிடை மின்போல (2336)*
8. *மைபோல் நெடுவரையாய் (2340)*
   *தாழமருவிபோல் தார்கிடப்ப (2340)*
9. *வண்தாமரை நெடுங்கண் (2365) (2381)*
10. *நீர்மேகமன்ன நெடுமால் நிறம்போல (2367)*
11. *மலரெடுத்த மாமேனிமாயன் (2378)*

### நம்மாழ்வார் திருவிருத்தம்

1. *செழுநீர்த்தடத்துக் கயல் மிளிர்ந்தாலொப்ப (2479)*
2. *முகில் வண்ணன் (2492)*
3. *மான்விழி*
4. *கயற்கண் (2492) (2501)*
5. *இருள் விரிநீலக் கருஞாயிறு சுடர்கால்வது போல் (2494)*
6. *மென்கால் கமலத்தடம்போல் பொலிந்தன (2519) 2540)*
7. *மழைக்கண் (2544)*

8. தாமரைக் கண் (2535) (2571)
9. தூவியம் பேடையன்னாள் (2571)
10. வாள் முகம் (2552)
11. மைவரை போல் பொலியும் உருவிற் பிரானார் (2555)

**நம்மாழ்வார் திருவாசிரியம்**

1. பவளச் செவ்வாய் (2578)
2. மலர்க் கண் (2587)

**நம்மாழ்வார் பெரியதிருவந்தாதி**

1. பூவை வண்ணன் (2585)
2. வாள் வரைகள் போலரக் கண் (2601)
3. கொண்டலதான், மால்வரைதான் மாகடல்தான் கூரிடுள்தான் வண்டறாப் பூவைதான் (2633)
4. பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவிமலரென்றும் ... (2657)

**திருமங்கை சிறிய திருமடல்**

1. முந்நீர் வண்ண (2672)

**திருமங்கை சிறிய திருமடல்**

1. மழைக் கூந்தல் (2673-2)
2. வேற்கண் (2673-10)
3. கடல் வண்ணன் (2673-60)
4. தாமரைக் கண் (2673-76)

**திருமங்கை பெரிய திருமடல்**

1. அளவிட்ட தாமரைபோல் மன்னிய சேவடி (2674-5)
2. மழைக் கூந்தல் (2674-6)

3. அன்னநடை (2674-7) (27) (38) (51)
4. வாள் நெடுங்கண் (2674-21)
5. மின்னனைய நுண்மருங்குல் (2674-22) (26) (52) (113)
6. மாமயில் போல் கூந்தல் (2674-25)
7. மழைத்தடங்கண் (2674-25) (29)
8. மானோக்கு (2674-37)
9. பஞ்சடி (2674-50)
10. பொன்னியல் காடு ஓர் மணிவரைமேல் பூத்ததுபோல் (2674-75)
11. கயற்கண் (2674 ஶி138)
12. வாளெயிற்று (2674-144)

## நம்மாழ்வார் திருவாய்மொழி

1. தாமரைக்கண் (2709) (2765) (2776) (2793) (2800) (2829) (2830)
2. மானேய் நோக்கிமடவாள் (2723)
3. பணைத்தோள் (2748) (3087)
4. கருகிய நீலநன் மேனி வண்ணன் (2765)
5. மலர்ப்பாதம் (2772) (3467) (3708)
6. செங்கனிவாய் (2793) (2829) (2857) (2921) (3029) (3161) (3283) (3305) (3334) (3692) (3698) (3766)
7. வாணுதல் (2819) (3024)
8. குவளை யொண்கண் (2822) (3066)
9. செந்தாமரை அடிக்காள் (2829) (2855)
10. செம்பொன் திருவுடம்பே (2829) (2898)
11. காராக் கருமுகில் போல் என்னம்மான் (2833)
12. தாமரைக் கண்ணனே (2841, 42) (2853) (2857) (2858) (2859) (2997)
13. மரகதவண்ணன் (2858)
14. கார்முகில் போல் வண்ணன் (2873)
15. தாமரை நின்கண் பாதம் பாதம் கையொவ்வா (2898) (2952) (2956) (2981) (3693)
16. கொண்டல் போல் வண்ணன் (2940)
17. கார்முகில் வண்ணன் (2941)

18. செம்பவளத்திரள் வாயன் *(2944)*
19. பேர்பல சொல்லிப்பிதற்றிப் பித்த ரென்றே பிறர் கூறு *(2948)*
20. மாரியனை கை *(2991)*
21. மால் வரையொக்கும் திண்தோளென்று *(2991)*
22. வேயின் மலிபுரை தோளி *(2992) (3240) (3688, 89)*
23. வல்லிசேர் நுண்ணிடை *(3019)*
24. மழைக் கண் *(3049) (3295) (3352) (3354)*
25. மலர்க்கண் *(3053) (3463) (3631) (3675)*
26. கோவைச் செவ்வாய் *(3066)*
27. தாமரைக் கண் *(3076) (3083) (3122) (3140) (3158) (3161) (3165, 66, 68) (3198)*
28. ஆணி செம்பொன்மேனி *(3076)*
29. வரைத்தோள் *(3085)*
30. குன்றம் போல் மணிமாடநீடு *(3106)*
31. சேலேய் கண் *(3124 (3333)*
32. கடல் வண்ணன் *(3128) (3149) (3174) (3354) (3366)*
33. முகில் வண்ணன் *(3130) (3234) (3368) (3405)*
34. துடியிடை *(3143)*
35. காவிசேர் வண்ணன் *(3151)*
36. வேற்கண் *(3177) (3241)*
37. வாண்முகம் *(3211)*
38. தாமரைக் கண் *(3218) (3234) (3239) (3246) (3271) (3275) (3232, 82, 83) (3334) (3349) (3361) (3392) (3417) (3459) (3486) (3548) (3549) (3568) (3510) (3607) (3620) (3647)*
39. கெண்டையொண்கண் *(3261) (3702)*
40. குவளையொண் மலர்க்கண் *(3271)*
41. பொற்சுடர்க்குன்றன்ன பூந்தண் முடியற்கு ... *(3287)*
42. தாமரைக்கை *(3287) (3335) (3392)*
43. பூவைகள் போல் நிறத்தன் *(3310)*
44. ஊற்றின் கண் நுண்மணல் போல் உருகா நிர்பர் *(3314)*
45. ஓதக் கடலொலிபோல *(3362)*
46. பவளவாய் *(3447) (3498) (3549) (3629) (3675)*

47. தூநீர் முகில்மபால் தோன்றும் நின்சுடர் கொள்வடிவும் கனிவாயும் தேநீர்க் கமலக் கண்களும் ... *(3494)*

48. வண்கார் நீலமுகில் போல தூநீர்க் கடலுள் துயில்வானே! *(3494)*

49. கறந்தபாலுள் நெய்யேபோல் இவற்றுளெங்கும் கண்டுகொள் இறந்து நின்ற பெருமாயா1 *(3500)*

50. பாலோட முதன்ன... *(3512)*

51. கருமாணிக்கக் குன்றத்துத் தாமரைபோல் திருமார்பு கால் கண்கை செவ்வாயுந்தியானே ... *(3518)*

52. வளரும் சுடரும் இருளும்போல் தெருளும் மருளும் மாய்ந்தோமே *(3533)*

53. தாமரைக் காடுகள்போல் திருமாழ்வு வாய்கண் கை ... *(3535)*

54. பல்சுடர்களும் போல் மின்னு நீள்முடியாரம் *(3536)*

55. காய்சினப் பறவையூர்ந்து பொன்மலையின் மீமிசைக் கார்முகில்போல ... *(3573)*

56. தண்பெருநீர்த்தடந்தாமரை மலர்ந்தாலொக்கும் கண்பெருங் கண்ணன் ... *(3609)*

57. செங்க மலத்தவர் போலும் கண்கைகால் செங்கனிவாய்.
அக்கமலத்திலை போலும் திருமேனி யடிகளுக்கே ... *(3625) (3696)*

58. வேள்தடங்கண் *(3635)*

59. வாளேய் தடங்கண் *(3637)*

60. காரொக்கும் மேனி ... *(3651) (3700)*

61. கமலக்கண் ... *(3667) (3700)*

62. கனிவாய் *(3667)*

63. தாமரையடி *(3672)*

64. தாமரைக் கண் *(3689) (3727) (3766)*

65. அஞ்சனமேனி *(3691)*

66. கயற்கண் *(3691)*

67. பனிமொழி *(3692)*

68. காயாமலர் வண்ணன் *(3716)*

69. மைநின்ற வரைபோலும் திருவுருவவாட்டாற்றாற்கு *(3729)*

70. வாளொண்கண் *(3760)*

71. மதிமுக மடந்தையர் *(3764)*

**இயற்கை வருணனை**

கவிஞர்கள் தங்களது கவிதைகளில் மனிதர்களைப் பாடும்போது இயற்கையையும் குறிப்பிட்டு பாடியுள்ளனர். இயற்கையும் குறிப்பாக கருப்பொருளும் சங்ககால மக்கள் வாழ்க்கையோடு நெருங்கிய தொடர்புடையதாக இருந்தன என்பதை அவர்தம் பாடல்கள் விளக்குகின்றன. சங்க இலக்கியங்கள் இயற்கையை வருணித்தது போலவே பக்தி இலக்கியமான நாலாயிர திவ்யப் பிரபந்தமும் இயற்கையை திருமாலோடு தொடர்புடையதாக வருணிக்கிறது. இருந்தபோதிலும் பொய்கை, சோலை, கழனி முதலியவை பற்றிய வருணனைகளே திவ்யப் பிரபந்தத்தில் இடம்பெற்றுள்ளன.

**பொய்கை**

பொய்கை என்பது நீர்த்தேக்கத்தைக் குறிக்கிறது. இவற்றுள் மலர்கள் மலர்ந்து அழகுடன் காணப்பட்டதை சங்க இலக்கியம்,

முட்டாள சுடர்த்தாமரை
கட்கமழு நறுநெய்தல்
வள்ளிதழ் அவிழ் நீலம்
மெல்லிலை யரியாம் பலொடு
வண்டிறை கொண்ட கமழ்பூம் பொய்கைக் ...

(மதுரைக்., 249-253)

என்று தாமரை, நெய்தல், வள்ளி, ஆம்பல் போன்ற மலர்கள் மலர்ந்திருந்தன என்று பொய்கையை வருணிக்கிறார். இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பெரியாழ்வார்,

நல்லதோர் தாமரைப் பொய்கை நாண்மலர் மேல் பனிசோர
அல்லியும் தாதும் உதிர்ந்திட்டு அழகழிந்தா லொத்தாலோ ...

(நா.தி.பி., 297)

என்று வருணிக்கிறார்.

**சோலை-பொழில்**

சங்க இலக்கியங்களில் சோலை பற்றிய வருணனைகள் அதிக அளவில் இடம்பெற்றுள்ளன. சோலை என்பதை பொழில், படப்பை என்ற சொற்கள் குறிப்பிடுகின்றன. சோலையில் உள்ள மலர்கள்மீது வண்டு இருக்கின்ற செய்தியை தலைவனுடைய ஊராக குறிப்பிடுகிறது. இதனை,

வண்டு தாதூது மூரன்
பெண்டென விரும்பின் றவடன் பண்பே ...

(ஐங்., 89)

என்ற வருணனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

உங்கள் புழைக்கடைத் தோட்டத்து வாவியுள்
செங்கழுநீர் வாய்நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பினகாண் ...

(நா.தி.பி., 487)

என்று குறிப்பிடுகிறார்.

மேலும் சோலையில் மயிலிருக்கின்ற செய்தியை சங்க இலக்கியம்,

யலங்குசினை மாஅத் தனிமயிலிருக்கும் ...

(ஐங்., 8)

என்று குறிப்பிட்டதை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,

வண்டினம் முரலும் சோலை மயிலினம் ஆடும்சோலை
கொண்டல் மீதணவும் சோலை குயிலினம் கூவும் சோலை ...

(நா.தி.பி., 885)

என்ற வருணனைக் குறிப்பிடுகிறது.

**வயல்**

மனித வாழ்க்கையோடு மிகநெருங்கிய தொடர்புடையது வயல் ஆகும். இதனை கழனி என்றும் பழனம் என்றும் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. அன்பின் ஐந்திணைகளுள் ஒன்றாகிய மருதத் திணையுள் வயல் முதற்பொருளாக இடம்பெற்றுள்ளது. வயல் பற்றிய வருணனையை சங்க இலக்கியம்,

கழுநீர் மேய்ந்த கருந்தாள் எருமை
பழனத் தாமரைப் பனிமலர் முணைஇத் ...

(நற்., 260)

என்று குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம்,

வண்டார் பொழிலின் பழ்னத்து வயலினயலே கயல்பாய
தண் தாமரைகள் முகமலர்த்தும் ...

(நா.தி.பி., 994)

என்று குறிப்பிட்டுள்ளார். நாலாயிர திவ்யப் பிரபந்தத்துள் மிகச் சில பொருட்கள் பற்றியே அமைந்திருப்பினும் சங்க இலக்கியத்தை அடியொற்றியே பாடப்பட்டுள்ளது என்பதை இக்கட்டுரையின் வாயிலாக அறியலாம்.

**பாதாதி கேச வருணனை**

சங்க இலக்கியத்தில் இயற்கை வருணனை இடம்பெற்றுள்ளது போலவே மனிதர்களை வருணிக்கும் கேசாதிபாத வருணனையும் பொருநராற்றுப்படையில் இடம்பெற்றுள்ளது. விறலியை வருணிக்கும்போது அவளுடைய தலையிலிருந்து பாதம் வரை வருணிப்பது கேசாதி பாதம் ஆகும். ஆனால் நாலாயிர திவ்யப் பிரபந்தம் இம்முறையை சற்று மாற்றி வருணிக்கிறது. திருமாலை வருணிக்கும்போது பாதாதி கேசமாக திவ்யப் பிரபந்தம் வருணிக்கிறது. பாதாதி கேசமானது திருமாலின் பாதத்திலிருந்து கேசம் வரை வருணிப்பதாகும். இம்முறையை திவ்யப் பிரபந்தத்தில் பெரியாழ்வாரும் வருணித்துள்ளனர். சங்க இலக்கியம் இதனை,

அறல்போற் கூந்தல் பிறைபோல் திருநுதற்
கொலைவிற் புருவத்துக் கொழுங்கடை மழைக்கண்
இலவிதழ் புரையும் இன்மொழித் துவர்வாய்ப் ...

(பொருந., 25-42)

என்று தொடங்கி பாதம் வரை வருணிக்கப்பட்டுள்ளது. இது நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில்,

அமலனாதிபிரான் அடியார்க்கு என்னையாட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரையார் பொழில்வேங்கடவன்
நிலமன் நின்மலன் நீதிவானவன் நீள் மதிளரங்கத்தம்மான் திருக்
கமலபாதம் வந்து என் கண்ணினுன்ளன வொக்கின்றதே ...

(நா.தி.பி., 927-936)

என்ற இப்பதிகம் முழுவதுமே பாதாதிகேசமுறையில் வருணிக்கப்பட்டுள்ளது. முறை மாற்றி பாடியிருப்பினும் சங்க இலக்கியத்தின் அடிப்படைக் கருத்து நாலாயிர திவ்யப் பிரபந்தத்திலும் பின்பற்றப் பட்டுள்ளது குறிப்பிடத் தக்கது.

**இசைக் கலைச் செல்வாக்கு**

அளபிறந்துயிர்த்தலும் ஒற்றிசை நீடலும்
உளவென மொழிப இசையொடு சிவணிய
நரம்பின் மறைய என்மனார் புலவர்

என்ற தொல்காப்பிய நூற்பா பண்டைக் காலத்திருந்த இசையைத் தெளிவுப்படுத்துகிறது. கலிப்பாவும், பரிபாடலும் சங்க காலத்திலிருந்த இசைக்கு எடுத்துக்காட்டாகும். மேலும் இசை சங்க கால மக்களின் வாழ்க்கையோடு ஒன்றிருந்தது என்பதை ஐந்திணைகளுக்குரிய கருப்பொருள்கள் வாயிலாக அறியலாம். குறிஞ்சித் திணைக் குரிய பண் குறிஞ்சிப் பண் என்றும் முல்லைக்கு முல்லைப் பண், நெய்தலுக்கு நெய்தல் பண், மருதத்திற்கு மருதப்பண் பாலைக்கு பஞ்சுரப்பண் என்றும் குறிப்பிட்டுள்ளதிலிருந்து அறிய முடிகிறது. பொதுவாக தமிழிசையை ஏழிசை என்று குறிப்பிடுவர் குரல் துத்தம், கைக்கிளை, உழை. இளி, விளரி, தாரம் எனத் தமிழ்ப் பண்கள் ஏழுவகைப் படுகின்றன.

சங்க இலக்கியமான பரிபாடலில் அமைந்த பண் முறைகள் இசைநயம்மிக்கன, ''பதினோரு பாடல்கள் பாலையாழினிலும் அடுத்த ஐந்து பாடல்கள் நோதிறத்திலும் அடுத்து நான்கு பாடல்கள் பண்காந்தாரத்திலும் பாடப்பட்டன. இப்பாடல்களின் செய்யுட்களை இயற் புலவர்கள் இயற்றினர். எனவும் அவைகட்கு இசைப்புலவர்கள் பண் அமைத்து பாடினார்கள் எனவும் அவர்கள் பெயர்களும் கொடுக்கப்பட்டிருக்கின்றன. கருத்துவளம், இசைச்சிறப்பு பண்ணின் மேன்மை இவற்றோடு கலந்த நல்ல சங்ககாலப் பாடல்களுக்கு எடுத்துக்காட்டாக அமைந்தவை பரிபாடல்''[4] என்று குறிப்பிடுகிறார். இசையின் இனிமையால் விலங்குகள் கூட தன்னியல்பு மாறின என்பதை சங்க இலக்கியங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

*வண்டுகளின் ரீங்கார இசையால் சோலைகளில் உள்ள மலர்கள் மலர்ந்தன என்பதைக் குறுந்தொகை (260) எடுத்துக்காட்டுகிறது. குறமகள் ஒருத்தியின் குறிஞ்சிப்பண்ணை கேட்டு மயங்கிய யானை தான் உண்ண வந்த திணைக் கதிரை உண்ணாமல் நின்றது என்ற செய்தியை,*

ஒலியல் வார்மயிற் உளரினள் கொடிச்சி
பெருவரை மருங்கில் குறிஞ்சிப் பாடக்
குரலுங் கொள்ளாது நிலையினும் பெயராது
படாஅப் பைங்கண் பாடுபெற்றொய்யென
மறம்புகல் மழகளிறு றங்கும்

(அகம்., 102)

*என்ற பாடல் எடுத்துக்காட்டுகிறது. பாலைநிலத்தில் வழிப்பறி செய்யும் வேடர்களை பொருநர்கள் பாலைப் பண் பாடி தொழிலை மறக்கச் செய்தனர் என்பதை பொருநராற்றுப் படை (21-22) எடுத்துக் காட்டுகிறது. போர்க்களத்தில் பிணங்களை உண்ணவரும் பேய்களையும் இசையால் மயக்கினர் என்பதைப் புறநானூறு எடுத்துக் காட்டுகிறது.*

*சங்க கால இசைக்கலைஞர்களை பாணர், பொருநர், கூத்தர், வயிரியர் விறலியர் எனப் பிரித்தனர். அவற்றுள் பாணர்களை யாழ்ப்பாணர், மண்டைப் பாணர் என்றும் வகைப்படுத்துவர்.*

*பொருநர்கள் ஏர்க்களம் பாடுவோர் போர்க்களம் பாடுவோர், பரணி பாடுவோர் என்று மூவகைப்படுவர், வயிரியரைப் பற்றிக் குறிப்பிடும்போது,*

பண்ணமை நரம்பின் பச்சை நல்யாழ்
மண்ணமை முழவின் வயிரியர்

(புறம்., 29)

*என்று கூறுகிறது. இவ்வாறு இசைக் கலையில் வல்லவர்களை மன்னர்களும், வள்ளல்களும் ஆதரித்தனர் என்றும் அரசன் அவர்களுக்குப் பொன்னால் ஆன தாமரைப் பூவினையும் பொற்கலன்களையும் பரிசாக அளித்தான் என்ற செய்தியை மலைபடுகடாம் (569-570) எடுத்துரைக்கிறது.*

ஆடினிர் பாடினிர் செலினே
நாடுங் குன்று மொருங்கீயும்மே ...

(புறம்., 109)

என்ற புறநானூற்றுப்பாடல் பாடுபவர்க்கும் ஆடுபவர்க்கும் பாரிவள்ளல் நாட்டினையும், மலையையும் அளித்தான் என்ற செய்தியை எடுத்துக்காட்டுகிறது. சங்க காலத்தில் யாழ், முழவு, பறை, முரசம், தொண்டகம், தட்டை, எல்லரி பதலை, ஆகுளி, குழல், தடாரி பாண்டில், சங்கு ஊது கொம்பு, வயிர் போன்ற இசைக்கருவிகள் கொண்டும் இசை எழுப்பப்பட்டதை சங்கப்பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. பாணர்களின் செயல்களை,

"பாணர் தொண்டாற்ற புலவர் பெரும்பாலும் அரசவையிலும் தம்மையொத்த தகுதிவாய்ந்த புலவர் குழுவிலும் காட்சி தருவர். பாணர், புகழுரைகள் போர் சிறப்புகள் கூறும் வீரக்கவிதையைபாடுவர் இதே போக்கில் செல்லும் புலவர் மானுட ஒழுகலாறு ஒழுக்கம், நன்னெறிதுறைகளை அரசனுக்கு எடுத்துரைப்பார். பாணர் போர்க்களத்தின் நடுவிலே போர் வீரர்களுக்கு ஊக்கமும், ஆற்றலும் பெருகப் பண்பாடுவார். போர்க்களத்தில் குறிப்பிட்ட அரசன் அல்லது குறுநில மன்னரிடம் காட்டும் பெரும் பற்றால் அமைதித் தூதுவராகப் போர்க்களம் புகுவர்"[5] என்று எடுத்துக் கூறுகிறார்.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் குழல் யாழ் மட்டுமன்றி பாசுரங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு, இராகமும், தாளமும் குறிப்பிட்டு அவர்கள் ஊர் ஊராகச் சென்று இசையோடு பாடி பரவினர் என்பதை,

கற்றோர்கருதும் விசயங்களுக்கெல்லாம்
பற்றாம் விபவகுணப் பண்புகளை-உற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர் தம்மிழவை வாய்ந்துரைத்த மாறன்சொல்
பண்ணில் இனிதான தமிழ்ப்பா

(நா.தி.பி, 65)

என்று பாசுரங்களின் பலனாகக் கூறப்படுகிறது.

நாட்டை, அபரூபம், தந்யாசி, நீலாம்பரி, மோகநம், முகாரி, யமுனா கல்யாணி, அடாணா தேசி, உசேனி, பந்துவராளி, புன்னாகவராளி, அசாவேரி, பிலஹரி, மத்யமாவதி, தோடி, சாரங்கம், நாமநாமக் கிரியை, ஆரபி, சங்கராபரணம் சுருட்டி, பைரவி, சாவேரி, ஆனந்த பைரவி, செஞ்சுருட்டி,

கல்யாணி, சகானா, கணடா, பியாகடை, ஸ்ரீராகம், காம்போதி பூபாளம், காவேரி, கேதார கௌளராகம், செரளாஷ்ட்ரராகம் போன்ற பலவகையான ராகங்களிலும், தாளங்களிலும் பாசுரங்கள் இசைக்கப்பட்டிருக்கின்றன. அவற்றில் சில பாசுரங்கள் இராகங்களுடன் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இசையை ஏழிசை, ஐந்திசை என்றும் நம்முன்னோர்கள் குறிப்பிடுவர். நாலாயிர திவ்யப்பிரபந்தத்தில் ஏழிசை பற்றிய தெளிவான விளக்கங்கள் இல்லாவிடினும் ஏழிசை என்ற சொல் (3751) காணப்படுகிறது.

**குழல் இசை**

சங்க கால மக்கள் குழல் இசைப்பதில் வல்லவராகத் திகழ்ந்ததை சங்க இலக்கியப் பாடல்கள் எடுத்துக்காட்டுகின்றன. ஆனிரை மேய்க்கும் கோவலர்கள் கையில் குழலோடு திரிந்தனர் என்பதை,

கொடுங்கோற் கோவலர் குழலோ டொன்றி

(நற். 69.8)

என்ற பாடல்வரி எடுத்துக்காட்டுகிறது. இதனை நாலாயிர திவ்யப்பிரபந்தம் ஆய்ச்சியர்கள் குழலூதுவது மட்டுமல்லாமல் கண்ணன் குழலூதுவதாகவும்,

குழல் முழைச்சுகளின் ஊடு குமிழ்த்துக்
கொழித்து இழிந்த அமுதப் புனல் தன்னை

(நா.தி.பி., 285)

என்று எடுத்துக் காட்டுகிறது.

| எண் | பாசுரங்கள் | - | இராகம் |
|---|---|---|---|
| 1. | வண்ணமாட | - | அபரூபராகம் |
| 2. | சீதக்கடல் | - | தந்யாசி → வாக்குந், கரவைகள் |
| 3. | மாணிக்காய்கட்டி | - | நீலாம்பரி |
| 4. | தன்முகத்து | - | மோகநம் → காசும், தூமணி, |
| 5. | உய்யஉலகு | - | முகாரி |
| 6. | மானிக்கக் | - | யமுனா கல்யாணி → ஐயபுழு, நாயகனாய், அம்பரமே |

| | | | |
|---|---|---|---|
| 7. | தொடர்சங்கி | - | அடாணா → ஆனிரை, அலம்பா, தங்கை, புள்ளின், மாரிமலை, |
| 8. | பொன்னியல் | - | தேசி → வேலிக்கோ, முப்பத்து |
| 9. | வட்டுநடுவே | - | உசேன |
| 10. | மெச்சூது சங்கம் | - | பந்து வராளி → அட்டுக்குவி, வையத்து, ஓங்கி |
| 11. | அரவணையாய் | - | புன்னாகவராளி |
| 12. | போய்ப்பாடு | - | அசாவேரி |
| 13. | வெண்ணெய் | - | பிலஹரி → மார்கழி |
| 14. | பின்னை மானாளனை | - | மத்யமாவதி |
| 15. | இந்திரனோடு | - | தோடி → கதிராயிர, மரவடி, மாயனை, |
| 16. | வெண்ணெய் விழுங்கி | - | சாரங்கம் → உங்கள் |
| 17. | ஆற்றிலிருந்து | - | நாதநாமக்கிரியை → நாவகாரியம் |
| 18. | தன்னேராயிரம் | - | ஆரபி → துப்புடையாரை, மார்கழிநீராடுவான், |
| 19. | அஞ்சன வண்ணனை | - | சங்கராபரணம் → மாதவத்தோன், ஒருத்தி |
| 20. | சிலைக்குதம்பை | - | சுருட்டி → வங்கக் |
| 21. | தழைகளும் | - | பைரவி → அங்கண் |
| 22. | நாவலம் | - | சாவேரி |
| 23. | நல்லதோர் | - | ஆனந்த பைரவி → கூடாரை |
| 24. | என்னாதன் | - | செஞ்சுருட்டி |
| 25. | நெறிந்த | - | கல்யாணி → சிற்றந் |
| 26. | உருப்பிணி | - | சகானா → துக்கச் கற்றுக்கறவை |
| 27. | ஆசைவாய் | - | கணடா |
| 28. | நெய்க்குடத்தை | - | பியா கடை → அன்று |

| | | | |
|---|---|---|---|
| *29.* | *சென்னி* | - | *ஸ்ரீராகம் → குத்து* |
| *30.* | *ஆழிமழை* | - | *காம்போதி → ஏற்றகலங்கள்* |
| *31.* | *புள்ளும்* | - | *பூபாளம் → கீசுகீசு, கீழ்வானம்* |
| *32.* | *நோற்று* | - | *சாவேரி → உற்துமத, தையொரு,* |
| *33.* | *கனைத்தி* | - | *கேதார கௌளராகம்* |
| *34.* | *எல்லே* | - | *சௌராஷ்ட்ராராகம்* |

**யாழ்**

*சங்க கால இசைக்கருவிகளுள் முதலிடம் பெற்றது யாழ் என்னும் இசைக்கருவியாகும். அது ஒவ்வொரு திணைக்கும் குறிஞ்சியாழ், முல்லையாழ், நெய்தல் யாழ், மருதயாழ், பாலையாழ் என்று அவற்றின் கருப்பொருள்களுள் ஒன்றாகக் குறித்துள்ளனர்.*

*ஆனால் சங்க காலத்தில் யாழில் பல வகைகள் இருந்ததை அப்பாடல்கள் உணர்த்துகின்றன.*

மருதம் பண்ணிய கருங்கோட்டுச் சீறியாழ்

(மலை, 534)

*என்று குறிப்பிடுகிறது. நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் தும்புருவும், நாரதரும் யாழிசையில் வல்லவர்களாகக் குறிப்பிடப் பெறுகின்றனர். இதனை,*

இணையில்லா இன்னிசையாழ் கெழுமி இன்பத்
தும்புருவும் நாரதனும் இறைஞ்சி யேத்த

(நா.தி.பி., 651)

*என்று குறிப்பிட்டுள்ளார்.*

ஏதம் இல் தண்ணுமை ஏக்கம் மத்தளி
யாழ் குழல் முழவமோடு இசை திசைகெழுமி

(நா.தி.பி.925)

*என்று இசைக் கருவிகளை இசைத்து திருமாலைத் துயிலெழுப்புவதாகப் பாடப்பட்டுள்ளது.*

**பறை**

பண்டைத் தமிழரின் இசைக் கருவிகளுள் பறையும் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றிருந்தது. குறிஞ்சி நிலத்திற்குத் தொண்டகப்பறையும், முல்லை நிலத்திற்கு ஏறுகோட் பறையும், மருத நிலத்திற்கு செல்லரி பறையும், நெய்தல் நிலத்திற்கு நாவாய்ப்பறையும் பாலை நிலத்திற்கு நிரைகோட் பறையும் வழக்கிலிருந்தன.

*(குறுந். 375:4)*

என எடுத்துக்காட்டுகிறது. இதனை,

சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பரே

(நா.தி.பி., 499)

என்று எடுத்துக்காட்டுகிறது.

**முழவு**

முழவு என்ற இசைக் கருவியும் சங்க காலத்தில் இலக்கியங்களில் குறிப்பிடப்பெறுகிறது.

**விசிப்பிணிக் கொண்ட மண்கனை முழவிற்**
**பாடினி பாடும் வஞ்சிக்கு**

(புறம்., 15)

என்று குறிப்பிடுகிறது. இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தம், திருமாலைத் துயிலெழுப்பு மற்ற இசைக் கருவிகளோடு குறிப்பிடுகிறது *(நா.தி.பி., 925)*.

**முரசு**

தோற் கருவிகளுள் முரசும் குறிப்பிடத் தக்கது. ''முரசு என்பது பெரிய உருவில் அமைந்த கொட்டாகும். குடைவுடைய மரத்தாலும், பரந்த கண்ணை மூடியுள்ள தோலாலும் இறுக்கிக் கட்டப்பெற்ற தோல்வாராலும் முரசு செய்யப்பட்டிருக்கும். முரசினை புறநானூறு

குருதி வேட்கை புருகெழு முரசம்

(புறம்., 505)

என்று குறிப்பிடுகிறது. இதனை நாலாயிரம் திவ்யப்பிரபந்தம் யானையின் பிளிரலும், முரசின் ஓசையும் அலைகடல் போன்று அதிர்கின்றன என்பதை,

இருங்களிற் றீட்டமும் பிடியொடுமுரசும்
அதிர்தளில் அலைகடல் போன்றுளது

(நா.தி.பி., 917)

என்றும் குறிப்பிட்டுள்ளார். மேலும் மத்தளம் என்ற பெயரில்,

மத்தளம் கொட்ட வரிசங்கம் நின்றூத் ...

(நா.தி.பி., 561)

என்றும் குறிப்பிடப்படுகிறது.

**சிற்பக் கலைச் செல்வாக்கு**

ஆழ்வார்களும், நாயன்மார்களும் இறைதொண்டாற்றுவதற்கு மறைமுகக் காரணமாக அமைந்தது சிற்பங்கள் என்றால் அது மிகையாகாது. ஏனெனில் கோயிலில் செதுக்கியுள்ள சிற்பங்களின் வாயிலாகவே இறையுருவங்களை சிறப்புற பாடமுடிந்திருக்கும். எடுத்துக்காட்டாக திருமாலின் திருமேனி அழகில் மிகவும் ஈடுபட்ட தொண்டரடிப் பொடியாழ்வார் திருவரங்கநாதனை,

பச்சைமாமலைபோல் மேனி பவளவாய் கமலச் செங்கண்

என்று வருணிப்பதோடு மட்டுமல்லாமல், தனக்கு இந்திரப் பதவி கிடைத்தாலும் வேண்டேன் உன்னை மட்டும் ரசித்து வணங்கிக் கொண்டே இருப்பேன் என்று பாடுகிறார். இவரைப்போலவே பிற ஆழ்வார்களும் பல பாடல்களில் இறைவனின் உருவத்தை பாடியிருக்கின்றனர்.

பக்தியை அடிப்படையாக வைத்துத் தோன்றிய சிற்பக் கலையானது கால மாற்றத்தில் பல வளர்ச்சியை அடைந்துள்ள போதிலும் இன்றளவும் கட்டிடக்கலையோடு மிக நெருங்கிய தொடர்பு உடையதாகவே இருந்து வருகிறது. “கட்டிடத்தைக் கலைக் கட்டடமாக ஆக்குவதும், தத்துவக் கருத்துக்களை உருவாக்குவதும் சிறப்புகள் ஆகும். சிற்பம் இல்லாத கட்டடக் கோயில் இல்லை எனலாம். ஓவியக்கலை சிற்பத்துடன் மிக நெருங்கிய உறவுடையதாகும்”[6] என்று குறிப்பிடுகிறார்.

போரில் இறந்த வீரனுக்கு, அவனுடைய வீரத்தை பறைசாற்றும் வகையில் அவன் உருவத்தைக் கல்லில் பொறித்து நடுகல் நட்டு வழிபடுவர்

என்பதை தொல்காப்பியம் உணர்த்துகிறது. எனவே தொல்காப்பியர் காலத்திற்கு முன்னரே நடுகல் நடும் வழக்கமும், சிற்பக்கலையும் இருந்திருக்க வேண்டும் என்பதை அறியமுடிகிறது.

இந்தியாவில் சிற்பக்கலையின் தோற்றம் பற்றிக் குறிப்பிடும்போது, "சமஸ்கிருதக் காவியங்களும், வடநாட்டுக் கல்வெட்டுகளும் நாணயங்களும் வரலாற்று நாயகர்களுக்கு உருவச் சிலைகள் எடுப்பதைப் பற்றி விவரிக்கின்றன. மகாபாரதத்திலேயே இத்தகைய குறிப்புகள் காணப்படுவதால் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்திலேயே மனிதர்களுக்குச் சிலை எடுப்பது மரபாக இருந்ததை உணரமுடிகிறது. காளிதாசனுக்குக் காலத்தால் முற்பட்டவரான பாசமகாகவியின் பிரதிமா நாடகம் எனும் காவியத்தின் குறிப்புகளால் கி.பி. 2ம் நூற்றாண்டிலேயே இந்திய நாட்டில் வரலாற்று நாயகர்களுக்குச் சிலை எடுத்த மரபு தெளிவுபடுத்தப்படுகிறது"[7] என்று இந்திய சிற்பக்கலை வரலாற்றுக் காலத்திற்கு முந்தியது என்பதை எடுத்துக் காட்டுகிறார்.

சிற்பங்கள் செதுக்குவதற்குரிய விதிமுறைகளை சிற்ப சாஸ்த்திர நூல்கள் தெரிவிக்கின்றன. சேர, சோழ, பாண்டியர் காலத்தில் கட்டிடக்கலையைப் போன்றே சிற்பக்கலையிலும் நுண்மையான வேறுபாடுகள் காணப்பட்டன. பல்லவர் கால சிற்பங்களுக்கு எடுத்துக் காட்டாக ஒற்றைக்கல் யானையும், பகிரதன் கங்கையைக் கொணர்ந்த சிற்பமும் மகாபலிபுரத்தில் இருந்துவருகின்றன.

**கட்டிடக் கலைச் செல்வாக்கு**

கற்காலங்களில் மரப்பொந்துகளிலும், குகைகளிலும் வாழ்ந்த மனிதன் நாகரிகம் தொடங்கியவுடன் தனக்கென தனி வீடு அமைத்துக் கொண்டு வாழத்தொடங்கினான். கால மாற்றத்தினாலும் நாகரிக வளர்ச்சியினாலும் கட்டிடத் தொழிலானது கலையாகவே வளரத்தொடங்கியது. சேர, சோழ, பாண்டியர்கள் கலைகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து கலைஞர்களையும் ஆதரித்தனர். அதனால் அவர்களுடைய காலகட்டத்தில் நுண்ணிய வேறுபாடுகள் அமைந்த கோயில்களும், அரண்மனைகளும் மாளிகைகளும்

கட்டப்பட்டன. பல்லவர்களது ஆட்சிகாலமானது குடைவரைக் கோயில்களை அடிப்படையாகக் கொண்ட கட்டுமானப் பணிகளைக் கொண்டது. தமிழகத்தில் கோயில்கள் அதிகளவில் தோன்றத் தொடங்கின. "உலக அரங்கில் இந்தியாவிற்குள்ள பெருமைகளுள் அதன் மரபு வழிப் பண்பாட்டுக்கலைச் சின்னங்களும் ஒன்றாகும் குறிப்பாகத் தமிழகம் பெற்றுள்ள தகுதி இலட்சக் கணக்கில் உள்ள கோயில்களும் ஆயிரக்கணக்கில் உள்ள பிற நினைவுச் சின்னங்களும் கோட்டைகளும் கலைச் சின்னங்களும் ஆகும்."[8]

சங்க காலத்தில் இறைவன் இருக்கக் கூடிய ஆலயங்களை கோயில்கள் என்று மட்டும் குறிப்பிடுவதோடன்றி நியமம், கோட்டம், நகரம், பள்ளி எனப் பலவாறு அழைத்தனர். இறைவனுக்கு கோயிலமைக்க வழங்கப்பட்ட வரியில்லாத நிலங்களை இறையிலி என்றும் குறிப்பிட்டனர். ஆனால் கோயில்கள் அழியக் கூடியப் பொருள்களாலேயேக் கட்டப்பட்டன. கோயில்களின் கூரைகள் வெள்ளியால் வேயப்பட்டன. மதுரையிலிருந்த கோவிலில் வெள்ளியம்பலம் இருந்தது என்பதும் அதில் உயிர்துறந்த பாண்டிய மன்னன் பெருவழுதி வெள்ளியம்பலத்துத் துஞ்சிய பெருவழுதி என்றும் கூறப்படுவான்.

கோயில்களின் மேற்கூரை துருபிடிக்காமல் இருப்பதற்குச் செந்நிறம் பூசியிருந்தனர் என்பதைத் திருமுருகாற்றுப் படையும் திருமாலுக்கு அமைத்த கோயில்களைப் பற்றி மதுரைக் காஞ்சியும் கூறுகின்றன.

கோயில் என்ற சொல் அரண்மனையைக் குறித்த போதிலும் பெரும்பாண்மையான இடங்களில் ஆலயம் என்ற பொருளிலேயே வழங்கப்பட்டுவந்தது. கோயில் என்பதற்கு, "கோ என்னும் சொல் கட்டுண்ட உயிராகிய பசுவைக் குறிக்க அத்தகைய பசு எய்துவதற்குரிய இறைவன் குடிகொள்ளும் இடத்தை இல் என்னும் சொல் தெரிவிக்கிறது. இவ்வாறு இறைவனை அடைவதற்காக மக்கள் மேற்கொள்ள வேண்டிய வழிபாட்டு முறைகளையும் கோயில்களை அமைப்பதற்கான விதிகளையும் ஆகமங்கள் வகுத்துள்ளன."[9]

இவ்வாறு உருவாக்கப்பட்ட கோயில்கள் கி.பி. 8 ஆம் நூற்றாண்டு அளவில்தான் கட்டுமானக் கோயில்களாக (Structural Temples) அமைக்கப்பட்டன. கோபுர அமைப்பு பிற்கால சோழர், மற்றும் பாண்டியர்கள் காலத்திலும், ராயகோபுரங்களும், மண்டபங்களும் விஜய நகர, நாயக்க மன்னர்கள் காலத்திலும் உருவாக்கப்பட்டன.

பண்டைக்கால மக்கள் வாழ்க்கையை கோயில்களோடு தொடர்புபடுத்திக் கொண்டே இருந்தனர். பலகலைகள் உருவாவதற்கும் கோயில்களே அடிப்படைக் காரணமாக இருந்தது என்பதை, "பிற்காலச் சோழர்காலத்தில் தேவரடியார்கள் என அழைக்கப்பட்ட தளிச்சேரிப் பெண்டிர் நடனக் கலையிலும் இசைக் கலையிலும் சிறந்து விளங்கினர் என்பதிலிருந்து அறியலாம். பண்டைய தமிழ் மக்கள் கோயில்களோடு தங்கள் வாழ்க்கையை இணைத்தே வாழந்தனர். கட்டிடக் கலை, சிற்பக்கலை, சித்திரக்கலை, இசைக்கலை, நாட்டியக்கலை ஆகியவற்றின் பிறப்பிடமாகக் கோயில்கள் திகழ்ந்து கலைப் பொக்கிசமாகவே விளங்கின."[10]

சங்க காலத்தில் இடிந்து வீழ்ந்த கோயில் ஒன்றில் மரங்களும் இழந்த பொருள்களும் காணப்பட்டன என்பதை,

இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புறாத் துறந்த மரஞ்சேர் மாடத்து
எழுதணி கடவுள் போகலிற் புல்லென்று
ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணை

(அகம்., 107)

என்று எடுத்துக்காட்டுகிறது. ஆனால் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் கோயில்களின் கட்டுமானப் பணியைக் குறிப்பிடவில்லை. பிற்கால பாண்டியர் காலத்தில் உருவான குடைவரைக் கோயில்களில் உயர்ந்த வாயில் காப்போன் உருவங்கள் பொறிக்கப்பட்டிருந்தன. ஆண்டாளுடைய பாசுரத்தில் வாயிற் காப்போனைப் பாடுகின்றார். )

மேலும் சங்க காலத்தில் முல்லை நிலத்தெய்வமான திருமாலுக்கும், குறிஞ்சி நில தெய்வமான முருகனுக்கும் பாலை நிலக் கொற்றவைக்கும்

மற்றும் சிவபெருமானுக்கும் கோயில்கள் இருந்திருக்கின்றன. ஆனால் அவை அழியக்கூடியப் பொருள்களாலேயேக் கட்டப்பட்டிருந்தன என்பதை,

சுடுமண் ஓங்கிய நெடுநிலைக் கோட்டம்

(பெரும்., 405)

என்று குறிப்பிடுகிறது. அத்தகைய கட்டிடங்களைக் கட்டுவதற்கு நிபுணர்கள் இருந்தனர் அவர்களை நூலறிபுலவர் என்று குறிப்பிட்டனர். அவர்கள் திசைக்குரிய கடவுளர்களை நாள் குறித்து அமைந்தனர் என்பதை,

இருகோற் குறிநிலை வழுக்காது குடக்கோ்
பொருதிறஞ் சாரா வரை நாளமயத்து
நூலறிபுலவர் நண்ணிதிர் கயிறிட்டுத்
தேஎங் கொண்டு தெய்வநோக்கிப்
பெரும்பெயர் மன்னர்க் கொப்ப மனைவகுத்து

(நெடு., 74-78)

எனத் தெரிவிக்கின்றது. மேலும் அரண்மனைகளும் கோயில்களும் உயர்ந்து அகன்ற வாயில்களைப் பெற்றிருந்தது. அரண்மனை மற்றும் கோயில்களில் மதில் சுவர்கள் உயர்ந்தும் கட்டப்பட்டிருந்தன. திருவரங்கக் கோயிலின் வெளி சுற்றுமதிலை திருமங்கையாழ்வார் கட்டினார் என்ற செய்தியும் கூறப்படுகிறது.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் கோயில்கள் மட்டுமல்லாது மாளிகைகள் நிறைந்து இருந்த செய்தியையும் ஆழ்வார்கள் குறிப்பிட்டிருந்தனர். மச்சுவீட்டின் மேலேறி கண்ணன் குறும்பு செய்ததைப் பெரியாழ்வார் குறிப்பிடுகின்றார்.

குகைகளிலும், மரப்பொந்துகளிலும் வாழ்ந்த மனிதன் நாகரிகம் அடையத் தொடங்கியவுடன் தனக்கென வீடு அமைத்து வாழ ஆரம்பித்தான். ஆரம்பகாலத்தில் செம்மண்ணால் கட்டப்பட்ட வீடுகள் பிற்காலத்தில் பல உருவகங்களின் துணையுடன் கட்டப்பட்டன என்பதை சங்க இலக்கியம் தெளிவுப்படுத்துகிறது.

பல அடுக்குகளைக் கொண்ட வீடுகள் சங்க காலத்தில் இருந்ததை,

விண்பொர நிவந்த வேயா மாடத்து

(பெரும்., 348)

என்று குறிப்பிடுகிறது. அதையே திவ்யப்பிரபந்தமும்,

தூமணிமாடத்துச் சுற்றும் விளக்கெரிய ...

(நா.தி.பி., 482)

என்று குறிப்பிட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் இறைவனுக்குரிய இருப்பிடத்தை கோயில் என்று நேரடியாகச் சுட்டாமல் கோட்டம், நகர் என்று குறிப்பிட்டுள்ளனர்.

புத்தேளிர் கோட்டம் வலஞ்செய் திவனொடு

(கலி., 82)

என்று குறிப்பிடுகிறது. திவ்யப்பிரபந்தம் நந்தகோபனின் வீட்டை கோயில் என்றே நேரடியாகச் சுட்டி அதற்கு வாயிற் காவலர் இருந்த செய்தியையும்

நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே! கொடித்தோன்றும் தோரண
வாயில் காப்பானே! மணிக்கதவம் தாள் திறவாய்

(நா.தி.பி., 489)

என்று குறிப்பிடுகிறது திருமால் வேங்கடவனாக வீற்றிருக்கின்ற திருமலையை குலசேகராழ்வார்,

நெடியானே! வேங்கடவா! நின் கோயிலின் வாசல்

(நா.தி.பி., 685)

என்று குறிப்பிடுகிறார்.

சங்க காலத்தில் அரண்மனையைச் சுற்றி மதில்கள் இருந்த செய்தியை புற இலக்கியங்கள் குறிப்பிடுவதைப் போல திவ்யப்பிரபந்தமும் திருமாலுடைய கோயிலைச் சுற்றி உயர்ந்த மதில்கள் இருந்தன என்பதை,

விண்தோய் மதிள்புடைசூழ் விற்றுவக் கோட்டம்மா

(நா.தி.பி., 689)

என்று குறிப்பிடுகிறது.

**மாளிகை**

சங்க இலக்கியத்தில் பெரிய நிலாமுற்றத்துடன் கூடிய வீடுகளை மாடம் என்று குறிப்பிட்டது. ஆனால் திவ்யப்பிரபந்தம் மாடம் என்றும் மாளிகை என்றும் குறிப்பிடுகிறது.

மச்சொடு மாளிகை யேறி ...

(நா.தி.பி., 184)

என்ற பாடலில் கண்ணன் கோயியர்களுடன் மாளிகை வீடுகளில் சென்று குறும்பு செய்ததை பெரியாழ்வார் குறிப்பிடுகிறார்.

**ஓவியச் செல்வாக்கு**

ஓவியக்கலை என்பது சங்க காலத்திலேயே தோன்றிவிட்ட ஒன்று. காண்பவர்களின் கருத்தைக் கவரும் வண்ணம் ஓவியங்கள் இன்றும் தீட்டப்படுகின்றன. ஆனால் சங்ககால மகளிர் தங்களை அழகுபடுத்திக் கொள்வதற்காக ஒப்பனை செய்துக் கொள்ளும்போதும், தங்கள் மைந்தர்களை அழகுபடுத்தும்போதும், தோள்களிலும் மார்புகளிலும் சந்தனக் குழம்பால் மான், மயில், வல்லிக் கொடி போன்ற ஓவியங்களை வரைந்திருந்தனர் என்பதைத் ''தொய்யில்'' என்று தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது. மேலும் சங்க காலத்தில் நாட்டிற்காகப் போர்புரிந்து வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு நடுகல் அமைத்து வழிபட்டனர். அவ்வாறு நடுகல் அமைப்பதற்காக இறந்த வீரனின் உருவத்தை வரைந்து கொண்டு கல்லை உரிய வடிவத்தில் செதுக்கினர்.

மனிதன் இன்பம் துய்ப்பதற்காகவும் தன் உணர்வுகளுக்கு சிறந்ததொரு வடிகால் அமைத்துக் கொள்வதற்காகவும் பயன்படுத்தப்பட்டதே கலையாக இருப்பினும் அவை மிகப் பெரிய வளர்ச்சியை அடைந்துள்ளது. கலையை பொதுவாக இரண்டு வகையாகப் பிரிப்பர். அவை (1) காட்சிக்கலை கருத்துக்கலை, எனப்படும். ''ஓவியம், சிற்பம், நாடகம் முதலியன காட்சிக்கலைகள். இசையும், இலக்கியமும் கருத்துக்கலைகள். சிந்தனைக்கும் செவிக்கும் இன்பம் பயப்பது இசைக்கலை. ஓவியக்கலையோ, கண்ணிற்கு விருந்தாகி மனத்திற்கு இன்பம் பயப்பதாகும்''[11] என்று குறிப்பிடுகிறார்.

*ஓவியங்களை வண்ணம் தீட்டியும், தீட்டப்பெறாமலும் வரைந்தனர். வண்ணம் தீட்டாமல் வரைந்ததை புனையா ஓவியம் என்று சுட்டுவர். அக்காலத்தில் வீடுகளிலும், அரண்மனைகளிலும் ஓவியங்கள் வரைந்திருந்தனர். என்பதனை,*

இரதிகாமன் இவள்-இவன் எனாஅம்
விரகியர் வினவ, வினா இறுப்போரும்
இந்திரன் பூசை இவளற் அகலிகை இவன்
சென்ற கௌதமன் சின்னுறக் கல்லுரு
ஒன்றியபடி இதென்று உரை செய்வோரும்
இன்னபலபல எழுத்துநிலை மண்டபம்

(பரி., 9, 48-53)

*எடுத்துக் காட்டுகிறது. ஓவியங்கள் வரைந்த இடத்தினை எழுத்து நிலை மண்டபம் என்று குறிப்பிட்டிருந்தனர். மாளிகைகளிலும், கோயில்களிலும் அமைக்கப்பட்டிருந்த ஓவியங்களின் மீது வீதிகளின் ஓடும் தேர்களினால் தூசுகள். படிந்திருந்தன என்ற செய்தியை,*

தேரோடுந் துகள் கெழுமி
நீராடிய களிறு போல
வேறுபட்ட வினையோவத்து
வெண்கோயிலின் மாசூட்டும் ...

(ப.பாலை., 47-50)

*என்ற வரிகள் எடுத்துக் காட்டுகின்றன. ஓவியம் தீட்டுபவர்களை கண்ணுள் வினைஞர் (ம.கா., 518) என்று குறிப்பிடுகின்றது. திருப்பரங்குன்றத்தில் காணப்படும் மண்டபங்களில் புராண இதிகாசக் கதைகள் பல அழகிய ஓவிய வடிவைப் பெற்றிருந்ததாக பரிபாடல் (19) குறிப்பிடுகிறது. இல்லங்களில் ஓவியங்கள் எழுதியிருந்ததை,*

ஓவியத்தன்ன வினைபுனைநல் இல் (அகம்., 98)

*என்றும்,*

சித்திரத்தைப் போன்ற அழகு பெற்ற அரண்மனை

(ப.ப., 88)

*என்றும் குறிப்பிடுகிறது.*

கண்ணால் கண்டவற்றை அழகுற தீட்டும் ஓவியக் கலையில் சங்ககால மக்கள் வெற்றி பெற்றிருந்தனர் என்பதை சங்க இலக்கியப் பாடல்கள் நமக்கு எடுத்துக் காட்டுகின்றன.

ஓவத்தன்ன வினைபுனை நல்லில்

(அகம்., 98)

என்ற பாடல் ஓவியம் பற்றியச் செய்தியை எடுத்துக் கூறுகிறது. திவ்யப்பிரபந்தத்தில் ஓவியம், ஓவம் என்று கூறாமல் ''எழுதி'' என்ற பெயரில் ஓவியம் வரைந்தமை சுட்டப்பெற்றுள்ளது.

நாச்சியார் திருமொழியில் ஆண்டாள், காமவேளிடம் கண்ணனை நினைக்கின்றபோது உன்னுடைய பெயரினை மறந்துவிடுவேன் என்பதால் உன் பெயரை வரைந்து சுறவமீன் கொடிகளையும், குதிரைகளையும் சாமரம் வீசும் பெண்களையும், கரும்பு வில்லையும் உனக்குரியதாக குறித்தேன் என்பதை,

சுவரில் புராண; நின் பேர் எழுதிச்
சுறவ நற் கொடிக்களும் துரங்கங்களும்
கவரிப் பிணாக்களும் கருப்பு வில்லும்
காட்டித் தந்தேன், கண்டாய் காமதேவா;

(நா.தி.பி., 507)

என்ற பாடல் எடுத்துக் காட்டுகிறது.

## ஆடற்கலைச் செல்வாக்கு

சங்க காலத்தில் இசைச் செல்வாக்குற்றிருந்ததைப் போலவே ஆடலும் பழந்தமிழர்களால் விரும்பப் பட்டது என்பதனை சங்க இலக்கியங்கள் எடுத்துக் காட்டுகின்றன. சங்க காலத்தில் நாட்டியத்தை ஆடல், கூத்து என்று குறிப்பிட்டிருப்பினும், கூத்து என்பது நாடகம் என்ற பொருளிலும் குறிப்பிடப்பட்டிருந்தது. சங்க காலத்தில் விறலியர்கள் ஆடி மகிழ்ந்தனர் என்பதை

விரை ஒலி கூந்தல் நும் விறலியர் பின்வர
ஆடினிர் பாடினிர் செலினே

(புறம்)

என்று குறிப்பிட்டுள்ளார். நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் கண்ணன் கோகுலத்திற்கு வந்தவுடன் அந்த கோபியர் மகிழ்ச்சியால் மயங்கி ஆடினர் என்பதை,

ஓடுவார் விழுவார் உகந்தாலிப்பார்
நாடுவார் நம்பிரான் எங்குத்தானென்பார்
பாடுவார்களும் பல்பறை கொட்ட நின்று
ஆடுவார்களும் ஆயிற்று ஆய்ப்பாடியே

(நா.தி.பி., 14)

என்று குறிப்பிடுகிறார்.

சங்க இலக்கியம் குரவைக்கூத்து, துணங்கைக் கூத்து, குடக்கூத்து உரந்து கூத்து, கரவைக் கூத்து நோக்குக் கூத்து, பாலைகூத்து, வெற்றிக்குரிய கூத்துகளும் கொடுகட்டி, பாண்டரங்கம், கபாலக்கூத்து மற்றும் சாந்திக் கூத்து என்று கூத்தின் வகைகளைச் சுட்டுகிறது.

**கூத்து**

சங்க காலத்தில் ஆடுதலையும் வேடமிட்டு நடித்தலையும் கூத்து என்ற சொல்லால் குறித்தனர். ஆனால் இன்றைய காலக்கட்டத்தில் கூத்து என்ற சொல் அருகியே வழக்கில் உள்ளது. கூத்து என்பதற்கு,

“ஆடுகின்ற முறைமைக்கும் ஆட்டத்துக்கும் கூத்து எனும் சொல்லே பயன்படுத்தப்பட்டுள்ளது”[12] என்றும் “பாட்டு பேச்சு நடிப்பு என்று மூன்று பொருண்மைகளின் கலப்பே கூத்து என கிராமிய கலைகளில் ஒன்றான கூத்து என்ற பெரிய கூத்துக்களின் மூலம் அறியலாம்”[13] என்றும் குறிப்பிடுகிறார்.

**குரவைக் கூத்து**

குரவை என்பது ஏழு அல்லது ஒன்பது பேர் கூடி இறைவழிபாட்டின் ஒரு கூறாக நிகழ்த்துவது. இசையைப் பிண்ணனியாக உடையது. மலைவாழ் குறத்தியர்கள் குரவை ஆடுதலை குன்றக் குறவை என்னும் முல்லை நில மக்கள் குறவை ஆடுதலை குன்றக் குறவை என்னும் முல்லை நில மக்கள் குறவை

ஆடுதலை ஆய்ச்சியர்குரவை என்றும் வகைப்படுத்துவர். இதனை நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் கண்ணன் கோபியர்களுடன் சேர்ந்து குரவையாடிய செய்தி ஆழ்வார்களால் சுட்டப்பட்டிருப்பினும் நம்மாழ்வார் குரவையாய்ச்சியர் (3260-3270) என்ற பதிகத்தையே பாடியுள்ளார்.

குரவையை சங்க இலக்கியம்

மன்று தோறு நின்ற குரவை " (மது.காஞ்., 615)

என்றும்,

மகளிரொடு குரவை தூங்கி ... (அகம்., 232)

என்றும் குறிப்பிடுகிறது.

ஆனால் நாலாயிர திவ்யப்பிரபந்தம் குரவைக் கூத்தினை திருமால் ஆடியதாக குறிப்பிடுகிறது. நம்மாழ்வார் திருமாலை குரவையாடும் அழகனாக,

குரவை கோத்தழகனை ...

(நா.தி.யி., 2954)

என்று குறிப்பிடுகிறார். திருமால் கூத்தாடியதால் கூத்தன் என்றும் (1796) குறிப்பிட்டுள்ளனர்.

திருமால் கண்ணனாக அவதரித்தபோது குடங்களை எடுத்துக் கொண்டு கூத்தாடியதாகவும் அதனால் குடக்கூத்தன் (2854) என்ற பெயரினை உடையவனாகவும் இருந்தான். மேலும் யமுனை ஆற்றில் காளிங்கன் என்ற கொடிய விடமுள்ள பாம்பின் தலைமீது நின்று நர்த்தனம் ஆடியவன் என்ற செய்தியும் காணப்படுகிறது.

சங்க காலத்தில் மக்களிடம் காணப்பட்ட கலையினை ஆழ்வார்கள் கண்ணனிடம் இருப்பதாக இன்புற்று பாடியுள்ளனர்.

## அடிக்குறிப்புகள்

1. தொல்காப்பியர், தொல்காப்பியம், உவம., நூ.276.
2. தொல்காப்பியர், தொல்காப்பியம், நூ.279.
3. மேலது., நூ.280.
4. சு.சீதா, இசைக்கலை, ப.86 (தமிழகக் கலைச்செல்வங்கள் (ப.ஆ.) துளசி இராமசாமி).
5. பெ.சு.மணி, சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், ப.222.
6. மா.குணசேகரன், இசை சிற்பக் கலைகளில் தாளம் ஓர் ஒப்புநோக்கு, ப.437.
7. குடவாயில் பாலசுப்பிரமணியன், சோழ மண்டலத்து வரலாற்று நாயகர்களின் சிற்பங்களும் ஓவியங்களும், ப.111.
8. கோ.தெய்வநாயகம், கட்டடக்கலை (தமிழ் ஆய்வுக்களங்கள்), ப.387.
9. கோ.முத்துசாமிப்பிள்ளை, கோயிற்களஞ்சியம் அறிமுகம், ப.3.
10. நா.வைரவேல், கல்வெட்டியலும் கோயிற்கலை வளர்ச்சியும், ப.87.
11. க.த.திருநாவுக்கரசு, ஓவியக்கலை (தமிழகக் கலைச் செல்வங்கள் (ப.ஆ.) துளசி இராமசாமி), ப.100.
12. கார்த்திகேசு சிவத்தம்பி, கூத்தும் நடனமும், ப.443.
13. த.பூமிநாகநாதன், அமிர்தமதன கூத்து நாடகம், ப.1.

# முடிவுரை

'நாலாயிரதிவ்யபிரபந்தத்தில் சங்க இலக்கியச் செல்வாக்கு' பற்றிய ஆய்வில் கண்ட முடிவுகளாவன:

சங்க இலக்கியத்தில் இடம் பெறும் கலிப்பா திவ்யப் பிரபந்தத்திலும் செல்வாக்குப் பெற்றுள்ளது. பக்தியைப் பாடுவதற்குக் கலிவிருத்தம் பொருத்தமானது என ஆழ்வார்கள் கருதியதை அறிய முடிகிறது.

புறநானூற்றில் இருந்து துவக்கம் பெற்ற அந்தாதி முறை ஆழ்வார்களால் பயன்படுத்தப்பட்டிருப்பினும், நம்மாழ்வார் திருவாய் மொழியிலுள்ள ஆயிரம் பாடல்களும் அந்தாதி வகையைப் பெற்றுள்ளதைக் காண முடிகிறது.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பன்னிரு ஆழ்வார்களாலும் பின்பற்றப்பட்டுள்ள பதிக அமைப்பிற்கு, ஐங்குறுநூற்றில் வரும் பதிகமுறை ஏற்படுத்திய செல்வாக்கு என அறிய முடிகிறது.

சங்க இலக்கிய வரிகள் தொடர்கள், சொற்கள் ஆகியவை பரவலாகத் திவ்யப்பிரபந்தத்தில் இடம் பெற்று வைணவ மெய்யியல் செழுமையுறுமாறு அமைந்துள்ளன.

சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள அன்பின் ஐந்திணையாகிய குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை ஆகியவை ஆழ்வார்களால் திருமால் வீற்றிருக்கின்ற திவ்ய தேசங்களில் அவற்றிற்குரிய முதல் கருப் பொருள்களுடன் இடைமிடைந்து செல்வாக்குற்றதை அறிய முடிகிறது.

சங்க இலக்கிய அகத்திணைச் செல்வாக்கினை, கையாள்வதில் திருமங்கையாழ்வாரும், நம்மாழ்வாரும் முதலிடம் பெறுகின்றனர். ஆண்டாள் பாசுரங்கள் அகச் சிறப்புடன் திகழ சங்க அகப்பா தழுவல் காரணமாக

விளங்கியுள்ளதைப் பார்க்க முடிகிறது. திருமங்கையாழ்வாரும், நம்மாழ்வாரும் தங்களைப் பரகாலநாயகி, பராங்குசநாயகி என்று (பெண்களாக) தலைவியாகக் கற்பனை செய்துக் கொண்டு இறைவனைத் தலைவனாக நினைத்துப் பாடுகின்றனர். வைணவ அடியார்கள் இப்பாசுரங்களை தம்மை ஜீவாத்மாவாகவும், இறைவனைப் பரமாத்மாவாகவும் நினைத்து உயிர் இறைவனைச் சென்றடைய வேண்டுவதாக அமைந்ததில் சங்க அகமரபை ஏற்றிப் போற்றியுள்ளனரென கருத இடமுள்ளது.

அரசனை இறைவனாகவும் குறிப்பாகத் திருமாலாகவும், அவன் மக்களைக் காப்பதையும் அவன் பகைவர்களுடன் சென்று போரிடுவதை திருமால் அரக்கர்களை அழிப்பதுடனும் ஒப்புமைப்படுகிறது. மேலும் புறத்திணைக்குதிய ஆநிரை மீட்டல், வஞ்சினம் உரைத்தல், தன்னை நம்பும் குடிகளைக் காத்தல், பூவை நிலை, போன்றவை திவ்யப் பிரபந்தத்தில் செல்வாக்குப் பெற்றுள்ளன. சங்க இலக்கியத்தில் காணப்படுகின்ற துயிலெடைநிலையானது பக்தி இயக்க காலத்தில் திருமாலைத் துயிலெழுப்பும் திருப்பள்ளியெழுச்சியாகத் தொண்டரடிப் பொடியாழ்வாரால் பாடவும் புறத்திணைச் செல்வாக்குப் பெருங்காரணியாகத் திகழ்ந்த தெனலாம்.

பாவை நோன்புமுறை மாற்றம் பெற்றாலும் அடிப்படைக்கருத்துக்கள் மாற்றம் பெறாமல், பாடுவதில் ஆண்டாள் வல்லவர் என்பதைத் திருப்பாவை எடுத்துக்காட்டுகிறது. அதேப் போன்று காமதேவன் வழிபாடும் ஆண்டாள் பாசுரங்களில் அதிகளவில் காணப்படுகிறது. அகத்திணையையே ஆண்டாளும் நம்மாழ்வாரும் அதிகளவில் பாடியுள்ளனர்.

ஆண்டாள் கூடல்முறையைப் பதிகமாகவே பாட கலித்தொகையில் குறிக்கப்பெற்ற கூடல்முறையே செல்வாக்குற்றதென அறியமுடிகிறது.

சங்க இலக்கியங்களில் தொன்மச் செய்தியாகக் காணப்படுகின்ற இராமாயண, மகாபாரதச் செய்திகள் குலசேகரர் மற்றும் பெரியாழ்வாரால் தனிபதிகங்காளகவே பாடப்பட்டுள்ளன.

அரசர்களை வாழ்த்தும் இயன்மொழித் துறை திருமாலை வாழ்த்துவதாகப் பெரியாழ்வார் பாடியுள்ளது செல்வாக்கின் மாற்றமாகக் கருத முடிகிறது.

சங்க இலக்கியங்கள் கூறியுள்ள திருமணமுறையும் மகளிர் கற்பும் நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் செல்வாக்குப் பெற்றுள்ளது.

மேலும், இயற்கை நிகழ்வுகளான மழை பெய்தல், பொழுது விடியும் காட்சியும் நிலையாமையும், அவர்களது நம்பிக்கையும் அவர்கள் இறைவனுக்கு அணிவித்தலும், தான் சூடிக் கொள்வதற்கும் பயன்படுத்தப்பட்ட மலர்களும் ஆழ்வார்களின் பாடல்களில் செல்வாக்கிற்குட் படுத்தப்பட்டுள்ளன.

சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள உவமைகளைக் கையாள்வதில் ஆண்டாள், குலசேகரர், திருமங்கையாழ்வார், நம்மாழ்வார் ஆகியோர் சிறப்பிடம் பெற்றுத் திகழ்கின்றனர்.

சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள இயற்கை வருணனைகள் திருமால் இருக்கின்ற திவ்ய தேசங்களின் வருணனைகளாக ஆழ்வார்களால் பாடப்பட்டுள்ளன.

சங்க காலத்தில் பாணர்கள் பயன்படுத்திய இசைக் கருவிகள் தொண்டரடிப்பொடியாழ்வாரின் திருப் பள்ளியெழுச்சியில் இடம் பெற்றுள்ளன. கண்ணன் குழலூதிய செய்தியை ஆழ்வார்கள் பலரும் முல்லைத்திணை வளர்ச்சியாகவே பாடியுள்ளனர்.

சங்க காலத்தில் விறலியர்கள் ஆடுவதைப் போன்று நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் கண்ணன் ஆயர்ப்பாடிக்கு வந்தவுடன் கண்ட கோபியர்களும் ஆண்களும் ஆடிப்பாடித் திரிந்தனர் என்று பெரியாழ்வார் குறிப்பிடுகிறார்.

காளிங்கன் என்ற பாம்பின் மீது கண்ணன் நடனமாடுதலையும், பெண்களுடன் சேர்ந்து குரவையாடுதலையும், குடக்கூத்தாடிய செய்தியும்

ஆழ்வார்களால் சுட்டப்படுகின்றன. இந்நிகழ்வை சங்க ஆடல் மரபின் வளர்ச்சியாகக் கருதலாம்.

'குழவி மருங்கின் கிழவதாகும்' என தொல்காப்பியர் குறிப்பிட்ட இலக்கிய மரபை அடியொற்றி பெரியாழ்வார் பாசுரங்களில் தாலப்பருவம், அம்புலிப்பருவம், செங்கீரைப்பருவம், சப்பாணிப்பருவம், தளர்நடைப்பருவம், அச்சோப் பருவம் ஆகியன அமைந்துள்ளன. இம்மரபு பிற்கால பிள்ளைத்தமிழ் வளர்ச்சிக்கு முன்னோடியாகத் திகழ்ந்ததென அறியமுடிகிறது.

மேற்கண்ட முடிபுகளின் வாயிலாகச் சங்க இலக்கியத்தின் மிகப்பெரிய வளர்ச்சி நிலையை நாலாயிர திவ்யப்பிரபந்த உருவாக்கத்தில் ஆழ்வார்கள் மனத்திற் கொண்டனர் என்று அறியமுடிகிறது.

ஒரு படைப்பாளர் தனக்கு முற்பட்ட இலக்கிய கல்வியில் தோய்ந்தே, புதியதைப் படைக்கிறார். இவ்வறிவு உறவை ஆழ்வார்கள் பெரிதும் போற்றி ஏற்று சங்கநூற் செல்வாக்குடனும், இதர நீதிநூற்கள், காப்பியங்கள், சைவ படைப்புக்கள் ஆயவற்றிலும் தாக்கம் பெற்று வைணவ மெய்யியலை ஆற்றல் வாய்ந்த திவ்வியப் பிரபந்தமாக உருவாக்கினர் என துணிந்து கூறலாம்.

இவ்வாய்வினை அடுத்து மேலாய்வைத் தொடர்வதற்கு பின்வருமாறு வாய்ப்பு உள்ளது.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் நீதி நூல்கள் செல்வாக்கை விரிவாக ஆராய முயலாம்.

நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் பன்னிரு திருமுறைகளின் தாக்கத்தை ஆராய முற்படலாம்.

ஆழ்வார்கள் குறிப்பிட்டுள்ள திவ்ய தேசங்கள் குறித்த கள ஆய்வும் மேற் கொள்ள முயற்சிக்கலாம்.

# துணைநூற் பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


*நாச்சியார் திருமொழி,* *(உரை) அண்ணங்கராசாரியர்-*
*திவ்யார்த்த தீபிகை,*
*கிரந்தமாலா ஆபிஸ்,*
*காஞ்சிபுரம்,*
*நான்காம் பதிப்பு,*
*1956.*

*திருவாய்மொழி,* *(உரை) அண்ணங்கராசாரியரின்*
*திவ்யார்த்த தீபிகை,*
*ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீ வெளியீடு,*
*ஸ்ரீரங்கம்.*

*திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவெழு கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல், இராம 2நுசநூற்றந்தாதி,* *(உரை) அண்ணங்கராசாரியர் உரை,*
*கிரந்தமாலா ஆபிஸ்,*
*விஷ்ணு காஞ்சிபுரம்,*
*மூன்றாம் பதிப்பு,*
*காஞ்சிபுரம்,*
*1959.*

*முதல் திருவந்தாதி, இரண்டாம் திருவந்தாதி, மூன்றாம் திருவந்தாதி,* *(உரை அண்ணங்கராசாரியார்*
*இயற்றிய திவ்யார்த்த தீபிகை,*
*கிரந்தமாலா அலுவலகம்,*
*காஞ்சிபுரம்,*
*நான்காம் பதிப்பு,*
*1069.*

*நாலாயிர திவ்ய பிரபந்தம்* *(ப.ஆ.), ஸ்ரீ கிருஷ்ணஸ்வாமி*
*அய்யங்கார்,*
*திருச்சி.*

*நாலாயிர திவ்ய பிரபந்தம்,* *(ப.ஆ.) டி.சி.பார்த்தசாரதி ஐயங்கார்,*
*பூமகள் அச்சுக்கூடம்,*
*சென்னை,*
*1939.*

நற்றிணை, நாராயண சாமி ஐயர், சோமசுந்தரனார் அவர்கள், எழுதிய உரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிட்டெட், திருநெல்வேலி, *1967.*

குறுந்தொகை, பொ.வே.சோமசுந்தரனார் உரை, திநெல்வேலித் தென்னிந்திய சைவசிந்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, *1972.*

ஐங்குறுநூறு, பொ.வே.சோமசுந்தரனார் உரை, திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, *1972.*

பதிற்றுப்பத்து, (உரை) ஔவை சு.துரைசாமிப்பிள்ளை அவர்கள், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, மார்சி *1995.*

பரிபாடல் கழக வெளியீடு, சென்னை, *1963.*

கலித்தொகை, நச்சினார்க்கினியர் உரை, நிழற்படப்பதிப்பு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், பிப்ரவரி *1984.*

அகநானூறு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், பிரைவேட் லிமிடெட், சென்னை, *1981.*

புறநானூறு, உ.வே.சா. பதிப்பு, சென்னை, *1894.*

முதலாழ்வார் மூவர் இயற்பா, *(உரை)* T.S.ராஜகோபாலன், *ஆழ்வார்கள் அமுத நிலையம்,* சென்னை, முதற் பதிப்பு, டிசம்பர் *1988.*

பத்துப்பாட்டு, தொகுதி-*1,2* சோமசுந்தரனார் உரை, திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், சென்னை, *1971.*

**துணை ஆதாரங்கள்**

அமிர்தகௌரி, ஆ., சங்க இலக்கியத்தில் உரையாடல், *பாரி நிலையம்,* சென்னை, *1989.*

அருணாச்சலம், ப., பக்தி இலக்கியம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, *1973.*

அருணாச்சலம், ப., வைணவ சமயம், பாரி புத்தகப் பண்ணை, சென்னை, *1982.*

அழகிரிசாமி, கு., இலக்கிய விருந்து, தேன் மழைப் பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, ஜூன் *1987.*

அரிகேசவன், பெ., வைணவம் அறிவோம் வாரீர், இளங்கோ பதிப்பகம், வேலூர், முதற்பதிப்பு, சூன் *1996.*

அன்பழகன், க., தமிழர் திருமணமும் இனமானமும், பூம்புகார் பதிப்பகம், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1997.

ஆதிபாலசுந்தரன், சங்க இலக்கியங்களில்த சமயக் கருத்துக்கள், சக்தி பதிப்பகம், சென்னை, முதற் பதிப்பு, மே 1981.

ஆறுமுகம், நா., முல்லை வாழ்க்கை, பாரி நிலையம், சென்னை, முதற் பதிப்பு, அக்டோபர் 1989.

இளவழகனார், பண்டைத் தமிழர் பொருளியல் வாழ்க்கை, கழக வெளியீடு, சென்னை, 1945.

இளமுருகன், மு., தமிழ்ப் பெருங்காப்பியங்களில் சங்க இலக்கியத்தின் செல்வாக்கு, கலையகம் வெளியீடு, தஞ்சாவூர், டிசம்பர் 1999.

இராசமாணிக்கனார். மா., தமிழர் நாகரிகமும் பண்பாடும், கழக வெளியீடு, சென்னை, 1975.

இளஞ்சேரன், கோவை., இலக்கியம் ஒரு பூக்காடு, இராக்போர்ட்டு பப்ளிகேசன், சென்னை, முதல் பதிப்பு, நவம்பர் 1982.

இந்திரா பார்த்தசாரதி, தமிழ் இலக்கியங்களில் வைணவம், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 1992.

எதிராஜுலு நாயுடு, ஜி., வைணவப்பூங்கா,
பக்தன் காரியாலயம்,
சென்னை,
1963.

உலகநாதன், வி.மு., ஆண்டாள் பாவையும் அழகுதமிழும்,
வாசுகிப் பதிப்பகம்,
சென்னை,
முதற் பதிப்பு,
ஆகஸ்ட்டு 1988.

உலகநாதன், வி.மு., கோதையின் காதல் ஓவியம் பாகம்-1,
வாசுகி பதிப்பகம்,
சென்னை,
முதற்பதிப்பு,
மே 1994.

கண்ணன், எஸ்., பெரியாழ்வார் ஆண்டாள்
பாசுரங்கள்,
விஜய லட்சுமி வெளியீட்டகம்,
சென்னை
முதற்பதிப்பு,
டிசம்பர் 1994.

கிருஷ்ணன், நாகர் கோவில், பக்திவளர்த்த பன்னிருவர்,
மகேஸ்வரி பிரசுரம்,
சென்னை,
முதற் பதிப்பு,
நவம் 1989.

கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார் (இதழ்), ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்,
சோதி 29,
ஒளி 2-3.

குணசேகரன், மா., இசைச் சிற்பங்களில் தாளம் - ஓர்
ஒப்புநோக்கு,
(தமிழ்க் கலை விருந்து),
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

குளோரியா சுந்தரமதி, (சங்க இலக்கியக் கட்டுரைகள்) சங்க இலக்யித் திணைதுறை அமைப்பில் எழும் ஒரு சிக்கல், சங்க இலக்கியக் கட்டுரைகள் கருத்தரங்கம், தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சாவூர், ஏப்ரல் 1984.

கோவிந்தராசு, கா.ரா., பன்னிரு பாட்டியல், முதலியார் பதிப்பு கழகம், 1949.

சரளா இராஜகோபாலன், இலக்கியச் சிந்தனைகள், கவிதா அச்சகம், சென்னை, முதற் பதிப்பு, டிசம்பர் 1996.

சச்சிதானந்தன், வை., ஒப்பிலக்கியம், ஆக்ஸ்போர்டு யுனிவர்சிடி பிரஸ், சென்னை, 1985.

சாமி, P.L., சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம், 1976.

சாரங்கபாணி, இரா., பரிபாடல் திறன், இரண்டாம் பதிப்பு, ஜனவரி, 1977.

சிதம்பரனார், சாமி, எட்டுத் தொகையும் தமிழர் பண்பாடும், இலக்கிய நிலையம், சென்னை, மூன்றாம் பதிப்பு, டிசம்பர் 1986.

சிதம்பரனார், சாமி, (தமிழ்ப் பொழில்) முன்னோர் கடவுள் வழிபாடு. துணர் 34 மலர் 1 - 12.

சியாமளா, மு.ப., திருமழிசை ஆழ்வாரின் பாசுரங்கள் ஆய்வு, பாரி நிலையம் சென்னை. 1992.

சீனிவாசன், ம.பெ., திருமங்கையாழ்வார் மடல்கள், அன்னம்(பி) லிட், சிவகங்கை, முதற்பதிப்பு, அக்டோபர் 1987.

சீனிவாசன், அரங்க. (க.ஆ.), புறநானூறு-பாரதப் பண்பாட்டுடன் தொடர்பு, தினமணி, 1985.

சீவாசன், ம.பெ., வைணவ இலக்கிய வகைகள் திவ்யப் பிரபந்த அடைவு, தேவகி பதிப்பகம், சிவங்கை.

சுசீலா கோபால கிருஷ்ணன், சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள், (அச்சில் வராத ஆய்வேடு) மதுரைகாமராசர் பலகலைக் கழகம் எம்.ஃபில்., பட்டத்திற்காக அளித்த ஆய்வேடு, அக்டோபர் 1980.

சுப்பு ரெட்டியார். நா., சில நோக்கில் நாலாயிரம், பாரி நிலையம், சென்னை, முதற் பதிப்பு, சூன் 1983.

சுப்புரெட்டியார், ந., ஆழ்வார்களின் ஆரா அமுது, பாரி நிலையம், சென்னை, 1987.

சுப்புரெட்டியார், B., வைணவ உரைவளம், பாரி நிலையம், சென்னை, முதற்பதிப்பு, அக்டோபர் 1985.

சுப்பு ரெட்டியார், நா., வைணவச் செல்வம்,
தமிழ்ப் பல்கலைக் கழகம் வெளியீடு,
தஞ்சாவூர்,
முதற் பதிப்பு,
டிசம்பர் 1995.

சுப்பிரமணிய சாஸ்திரி, P.S., சங்க நூல்களும் வைதிக மார்க்கமும்,
யுனைடெட் பிரிண்டர்ஸ் லிமிடெட்,
அச்சுக்கூடத்தில் அச்சிடப்பெற்றது,
1951.

சுப்பிரமணியன், ச.வே., இலக்கியக் கனவுகள்,
தமிழ்ப் பதிப்பகம்,
சென்னை,
1979.

ஞானசுந்தரம், தெ., வைணவ உரைவளம்,
தாயம்மை பதிப்பகம்,
சென்னை,
முதற் பதிப்பு,
ஜுன் 1989.

ஞானசுந்தரம், தெ., சங்க இலக்கியத்தில் திருமால்நெறி
(சங்க இலக்கியக் கட்டுரைகள்-
கருத்தரங்கம்),
தமிழ் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
ஏப்ரல் 1984.

தமிழண்ணல், ஒப்பிலக்கிய அறிமுகம்,
சோலை நூலகம்,
மதுரை,
1979.

தனபாக்கியவதி, த., தமிழ் இலக்கியத்தில்
திருமால்வழிபாடு,
குறிஞ்சி பதிப்பகம்,
சென்னை,
முதற் பதிப்பு, ஜனவரி 1996.

திருநாவுக்கரசு, க.த., தமிழ் நாட்டில் வைணவம்
தோற்றமும், வளர்ச்சியும்,
தமிழ்ப் பல்கலைக் கழக
தத்துவமையம்,
காஞ்சீபுரம்,
1985.

திருநாவுக்கரசு, க.த., ஓவியக்கலை (ஓவியக்கலைச் செல்வாக்கு), (ப.ஆ.) துளசி இராமசாமி, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1990.

தொல்காப்பியர், தொல்காப்பியம் (அகத்திணையியல்) நச்சினார்க்கினியர் உரை (ப.ஆ.) கு.சுந்தர மூர்த்தி, அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1986.

தெய்வநாயகம், கோ. கட்டடக்கலை, (தமிழ் ஆய்வுக்களங்கள்), (ப.ஆ.) கடிகாசலம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், ஆகஸ்டு, 1994.

தொல்காப்பியர், தொல்காப்பியம் (பொருளியல்) நச்சினார்க்கினியர் உரை (ப.ஆ.), கு.சுந்தர மூர்த்தி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1986.

தொல்காப்பியம், தொல்காப்பியம் (உவமவியல்) பேராசிரியர் உரை (ப.ஆ.), கு.சுந்தரமூர்த்தி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1985.

தொல்காப்பியர், தொல்காப்பியம் (கற்பியல்) நச்சினார்க்கினியர் உரை (ப.ஆ.), கு.சுந்தரமூர்த்தி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1986.

தொல்காப்பியர், தொல்காப்பியம் புறத்திணையியல் நச்சினார்க்கினியர் உரை (ப.ஆ.), கு.சுந்தரமூர்த்தி, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1986.

தொல்காப்பியர், தொல்காப்பியம் (களவியல்) நச்சினார்க்கினியர் உரை (ப.ஆ.), கு.சுந்தரமூர்த்தி, அண்ணாமலை பல்கலைக்கழகம், 1986.

நாற்கவிராச நம்பி, நம்பியகப்பொருள், தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி,

பவணந்தி முனிவர் நன்னூல் விருத்தியுரை, பாரி நிலையம், சென்னை, 1957.

பார்த்தசாரதி, ஆ.க., பெரியாழ்வார் பாசுரங்கள் ஓர் ஆய்வு, பரணி வெளியீடு, சென்னை, முதற் பதிப்பு, ஏப்ரல் 1992.

பாலசுப்பிரமணியன், குடவாயில், சோழ மண்டலத்து வரலாறு நாயக்கர்களின் சிற்பங்களும் ஓவியங்களும், தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1987.

பி.ஸ்ரீ. , ஆழ்வார்களும் ஆசாரியர்களும், கலைமகள் காரியாலயம், சென்னை, 1959.

புருடோத்தமநாயுடு, பு.ரா., புலமைப் பரிசு, பாரி நிலையம், சென்னை, 1971.

பூமிநாக நாதன், த., அமிர்த மதனகூத்து நாடகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1996.

மணி, பெ.சு., சங்க கால ஔவையாரும் உலகப் பெண்பாற் புலவர்களும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1986.

முத்துசாமிப்பிள்ளை, கோ.,
கோயிற் களஞ்சியம்,
(சிறப்பாசிரியர்),
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்,
1991.

முத்துராசன், கு.,
திருமங்கையாழ்வாரின்
சிறியதிருமால்,
(9 வது கருத்தரங்கு ஆய்வுக் கோவை)
தொகுதி-1.

முத்துராசன், கு.,
சங்க காலம்,
தேன்தமிழ்ப் பதிப்பகம்,
சேலம்,
முதற் பதிப்பு,
சனவரி 1980.

முரளிதர், எஸ்.என்.,
இந்து மதத்தின் இயற்கைக்
களஞ்சியம்,
ஹோலி பப்ளிகேசன்ஸ்,
ஈரோடு,
1990.

ஜகந்நாதராஜா, மு.கு.,
வடமொழி வளத்திற்குத் தமிழரின்
பங்கு,
நியூ செஞ்சுரி புக்ஹவுஸ் (பி)
லிமிடெட்,
சென்னை,
முதற் பதிப்பு,
அக்டோபர் 1994.

வரதராசன், மு.,
முல்லைத்திணை,
பாரிநிலையம்,
சென்னை,
மூன்றாம் பதிப்பு
1964.

வீரணன், மா.,
தமிழ்ப்பொழில், தமிழ் கூறும்
தத்துவம் ஓர் ஆய்வு,
கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடு,
துணர் 67, மலர் 2,
மே, ஜுன் 1993.

வீரபத்திரன், ஆர்., பாவை நோன்பு வரலாறும் இலக்கிய மரபுகளும், அசிசி அச்சகம், நாகர் கோவில், முதற்பதிப்பு ஜூன் 1989.

வெள்ளை வாரணன், க., சங்க இலக்கியத்தில் சமய நோக்கு (சங்க இலக்கியக் கட்டுரைகள் கருத்தரங்கம்), தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ஏப்ரல் 1984.

வேலுப்பிள்ளை, ஆ., தமிழர் சமய வரலாறு, பாரி நிலையம், சென்னை, 1985.

வைரவேல், நா., கல்வெட்டியலும் கோயிற்கலை வளர்ச்சியும், ஆனந்தம் பதிப்பகம், மதுரை, 1995.

லோகநாயகி, ஜி., பெரியார்வார் பாடல்களில் தாய்மை (ப.ஆ.) ச.அகத்தியலிங்கம், சோ.ச.கந்தசாமி, (இரண்டாம் கருத்தரங்கு தமிழ் இலக்கிய ஆய்வுக் கோவை-தொகுதி-1) 1988.

ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர், விஷ்ணு தத்துவம் அரங்கநாதன், ஸ்ரீராமகிருஷ்ண தபோவனம் பதினான்காம்பதிப்பு, திருப்பராய் துறை, 1994.

**ஆய்வுக்கோவை**

| | |
|---|---|
| கடிகாசலம், ந., | தமிழ் ஆய்வுக் களங்கள்,<br>உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,<br>ஆகஸ்ட் 1994. |
| அகரமுதல்வன், த., | சங்க இலக்கியத்தில் பலராமன்<br>வழிபாடும், கண்ணன் வழிபாடும்,<br>14ஆவது கருத்தரங்கு ஆய்வுக்கோவை<br>(தொகுதி-1)<br>1982.<br>(ப.ஆ.) ச.அகத்தியலிங்கம், தா.ஏ.,<br>ஞானமூர்த்தி, செ.வை.சண்முகம்,<br>கி.கருணாகரன். |
| (ப.ஆ) சண்முகம் பிள்ளை, | குறுந்தொகை தொடரைவு |
| விஜயலட்சுமி, J., | தமிழ் இலக்கியக் கொள்கை-7 (ப.ஆ.)<br>ச.வே.சுப்பிரமணியன்,<br>உலகத் தமிழராய்ச்சி நிறுவனம்,<br>சென்னை,<br>ஜுன் 1980. |

**இதழ்கள்**

| | |
|---|---|
| செந்தமிழ்ச் செல்வி, | தேவதத்தப் பட்டி,<br>திங்கலி வெளியீடு,<br>45 ஆம் சிலம்பு-1970-71. |
| தமிழ்ப்பொழில், | எஸ்.நாராயணசாமி நாயுடு,<br>பெருமாற் திருமொழி,<br>துணர் 18,<br>கரந்தைத் தமிழ்ச் சங்க வெளியீடு,<br>1942-43. |

**அகராதி**

| | |
|---|---|
| Tamil Lexicon Vol. III | Madras University,<br>Madras,<br>1928. |
| சேந்தன் திவாகரம், | கழக வெளியீடு,<br>சென்னை,<br>1958. |

**அச்சில் வராத ஆய்வேடு**

*அருணா தேவி, ஜோ.,* *ஆழ்வார்களின் வழிபாட்டுத் தலங்கள், பிஎச்.டி. ஆய்வேடு, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1996.*

*சுசீலா கோபாலகிருஷ்ணன்,* *சங்க இலக்கியத்தில் நிமித்தங்கள், பிஎச்.டி. ஆய்வேடு, தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.*

# பின்னிணைப்புகள்

## 1. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் மீது பதிணென் கீழ்க்கணக்கு நூல்கள் ஏற்படுத்திய செல்வாக்கிற்குரிய பகுதிகள்

பதிணென் கீழ்க்கணக்கு நூல்களில் திருமால் பற்றிய நெறி

திருக்குறள்

அகரமுதல எழுத் தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு ... (1)

*இதில் ஆதி என்ற சொல் திருமாலைக் குறிக்கிறது. 'ஆதிமூலம்' என்பது திருமாலின் பெயராகும்.*

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார் ... (10)

*"இறைவன் என்பதற்கு எல்லா பொருள்களிலும் தங்குகின்றவன் என்பது பொருள். இது நாராயணன், விஷ்ணு, வாசுதேவன் எனும் பெயர்களின் தமிழ் வடிவமாதலை உணரின் இறைவன் எனும் சொல் திருமாலுக்கே உரியதாகும்."*

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிகின்றார் நீடுவாழ்வார் ... (6)

*இதில் காணப்படும் "பொறிவாயில் ஐந்தவித்தான் எனும் பெயர் ரிஷிகேசன் (ஈருடிகேசன்) என்ற திருநாமத்தின் தமிழ் வடிவமாகும். ரிஷிகம்-இந்திரியம். இந்திரியங்களின் தலைவன் எனும பொருளுடையது. அவித்தல் என்பது ஈண்டு தன்வயமாக்குதல் எனும் பொருளைத் தரும் ஓராயிரமாய் உலகேழளிக்கும் பேராயிரம் கொண்டதோர் பீடையய திருமாலுக்குச் சிறந்தனவாய திருநாமங்கள் பன்னிருநாமம் எனப்படும். அவற்றுள் ரிகழிசசேசன் என்பது ஒன்று. ஆதலின் பொறிவாயில் ஐந்தவித்தான் என்பது திருமாலுக்கு உரியது."*[2]

அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது ... (8)

கோளில் பொறியிற் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை ... (9)

தாம் வீழ்வார் மென்தோள் துயிலின்த இனிதுகொல்

தாமரைக் கண்ணான் உலகு ... (1991)

மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்

தாஅய தெல்லாம் ஒருங்கு ... (610)

*இன்றவன் மூவடி மண்கேட்டு உலகளந்த செய்தி எடுத்துரைக்கப்பட்டுள்ளது.*

**நாலாயிர திவ்ய பிரபந்தம்**

**உலகளந்த செய்தி**

முன்னம் குறளுருவாய் மூவடி மண் கொண்டளந்த

மன்னன் சரிதைக்கே மாலாகிப் மொன் பயந்தேன் ...

(1779)

**தாமரைக்கண்**

தாமரைக் கண்ணனை விண்ணோர் பரவும் தலைமகனை

துழாய்வினாப் (2842)

*என்று இடம் பெற்றுள்ளது.*

**கருத்து**

மகன் தந்தைக் காற்றும் உதவி இவன்தந்தை

என்நோற்றான் கொல்எனும் சொல் ... (70)

*என்ற குறள் பெரியாழ்வார் திருமொழியில்,*

என்ன நோம்பு நோற்றாள் கொலோ

இவனைப் பெற்ற வயிறுடையாள்

என்னும் வார்த்தை எய்துவித்த

இருடிகேசா முலையுணாயே ...

*என்று இடம் பெற்றுள்ளது.*

வானோக்கி வாழும் உலகெல்லாம் மன்னவன்

கோல் நோக்கி வாழும்குடி ... (542)

*என்ற குறள் பெருமாள் திருமொழியில்*

*மன்னனை நம்பியே மக்கள் வாழ்ந்திருந்த செய்தியை*

கோல் நோக்கி வாழும் குடி எல்லாம் ...

(நான்மணி., 27)

*என்று குறிப்பிட்டுள்ளது.*

... தார் வேந்தன்

கோல் நோக்கி வாழும் குடிபோன்றிருந்தேனே ...

*என்று இடம்பெற்று உள்ளது.*

நாளென ஒன்று போல் காட்டி உயிரீரும்

வாள துணர்வார்ப் பெறின் ... (334)

*என்ற குறள் திருமழிசையாரின் திருச்சந்த விருத்தத்தில்,*

வாள்களாகி நாள்கள் செல்ல ... (112)

*என்று இடம் பெற்றுள்ளது.*

பற்றற்றே கண்ணே பிறப்பனுக்கும் மற்று

நிலையாமை காணப் படும் ... (349)

*என்ற குறள் நம்மாழ்வார் திருவாய்மொழியில்,*

அற்றது பற்றெனின் உற்றது வீடு ...

*என்று இடம் பெற்றுள்ளது.*

வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்கு

யாண்டும் இடும்பை இல (4)

*என்ற குறள் திருவாய்மொழியில்,*

கொள்கை கொளாமை யிலாதான்

எள்கல் இராகம் இலாதன

விள்கை விள்ளாமை விரும்பி

உள்கலந் தார்க்கோர் அமுதே ...

*என்று இடம் பெற்றுள்ளது.*

இரவார் இரப்பாக் கொன் றீவர் கரவாது

கைசெய்தூண் மாலை யவர் ... (1035)

*என்ற குறள் நாலாயிர திவ்ய பிரபந்தத்தில்,*

வம்மினத் புலவீர் நும்மெய்

வருந்தக் கைசெய் துண்மின் ...

*என்று இடம்பெற்றுள்ளது.*

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும்
ஒண்டொடி கண்ணே புள ... (1101)

*என்ற குறள் நம்மாழ்வார் திருவாய்மொழியில்,*

கண்டு கேட்டுற்று மோந் துண்டுழலும் ஐங்கருவி ...

*என்று இடம் பெற்றுள்ளது.*

ஊரவர் கல்வை எருவாக அன்னைசொல்
நீராக நீளும் இந்நோய் ... (1147)

*என்ற குரல் நம்மாழ்வார் திருவாய்மொழியில்,*

ஊரவர் கவ்வை எருவிட் (டு) அன்னைசொல் நீர்படுத்து
ஈரநெல் வித்தி முளைத்த நெஞ்சப் பெருஞ்செய்யுள் (3142)

*என்று இடம்பெற்றுள்ளது.*

வித்தும் இடல்வேண்டும் கொலலோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம் (85)

*என்ற குறள் திருமழிசையாரின் நான்முகந் திருவந்தாதியில்*

வித்தும் இடல்வேண்டும் கொல்லோவிடை அடர்த்த
பக்தி யுழவன் பழம் புனத்து ... (2404)

*என்று இடம்பெற்றுள்ளது.*

நாலடியார்

*சமண முனிவர்களால் இயற்றப்பெற்ற நாலடியாரில் நீதியைக் கூறும் கருத்து ஒன்று நாலாயிர திவ்ய பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளது. ஒருவனுக்குச் செல்வம் இருக்கும்போது அவனைச் சுற்றி அனைவரும் இருப்பர். அவன் வறுமையுற்ற காலத்து மெய்யான ஒருசிலரைத் தவிர மற்றவர்கள் அவனை விட்டுப் பிரிவர் என்ற இக்கருத்து,*

காலாடு போழ்தில் கழிகிளைஞர் வானத்து
மேலாட மீனிற் பலராவர்-ஏலா
இடர் ஒருவர் உற்றக்கால் ஈர்ங்குன்ற நாட!
தொடர்புடையோம் என்றார் சீலர் ... (113)

*என்று இடம் பெற்றுள்ளது. இதே கருத்து நாலாயிர திவ்யபிரபந்தத்தில்,*

பொருள்கை உண்டாய்ச் செல்லக் காணில்

போற்றி என்று ஏற்று எழுவர்

இருள்கோள் துன்பத்து இன்மைகாணில்

என்னே! என்பாரும் இல்லை ... (3559)

*என்று இடம்பெற்றுள்ளது.*

### கார்நாற்பது

*திருமால் கடல் நிறத்தவன் என்ற செய்தியை கார்நாற்பது*

பொருகடல் வண்ணன் புனைமார்பில் தார்போல்

திருவில் விலங்கூன்றித் தீம் பெயில் தாழ

வருதும் என மொழிந்தார் வாரார்கொல் வானம்

கருவிருந் தாலிக்கும் போழ்து (1)

*என்ற பாடல் விளக்குகிறது.*

### இனியவை நாற்பது

*இந்நூலில் கடவுள் வாழ்த்து பிரம்மா, விஷ்ணு சிவன் ஆகியோரைப் பற்றியதாக அமைந்துள்ளது.*

கண்மூன் றுடையான்தாள் சேர்தல் கடிதினிதே

தொல்மாண் துழாய்மாலை யானைத் தொழலினிதே

முந்துறப் பேணி முகநான் குடையானைச்

சென்றமர்ந் தேத்தல் இனிது ...

*என்ற பாடல் விளக்குகிறது.*

### திரிகடுகம்

*திரிகடுகத்தில் திருமால் கண்ணனாக அவதரித்தபோது குருந்தமரத்தை சாய்த்ததும், சகடத்தை உதைத்ததும் ஆகிய செய்தி இடம்பெற்றுள்ளது.*

கண்ணகன் ஞாலம் அளந்ததூஉம் காமருசீர்த்

தண்ணறும் பூங்குருந்தம் சாய்த்ததூஉம்-நண்ணிய

மானச் ககடம் உதைத்ததூஉம் இம்மூன்று

பூவைம்பூ வண்ணன் அடி ...

**நான்மணிக்கடிகை**

*திருமால் பற்றிய செய்தி நாண்மணிக்கடிகையின் கடவுள் வாழ்த்துப்பாடலில் இடம்பெற்றுள்ளது.*

மதி மன்னு மாயவன் வாள்முகம் ஒக்கும்
கதிர் சேர்ந்த ஞாயிறு சக்கரம் ஒக்கும்
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றவன் கண் ஒக்கும் பூவைப்
புதுமலர் ஒக்கும் நிறம்

*என்று திருமாலின் நிறத்துக்குப் பூவை மலர் நிறத்தை ஒப்புமைப்படுத்துகிறார்.*

## 2. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தின் மீது காப்பியங்கள் ஏற்படுத்திய செல்வாக்கிற்குரிய பகுதிகள்

### சிலப்பதிகாரம்

*கோவலன், கண்ணகி, கவுந்தியடிகள் மூவரும் மதுரையை நோக்கி வரும்போது மாங்காட்டு மறையோனை சந்திக்கின்றனர். கோவலன் அவனை யார்? என்பது பற்றி வினவும்போது மாங்காட்டுமறையோன் பதிலளிக்கிறான். அதில் திருவரங்கம், திருவேங்கடம் ஆகியவை பற்றிய வருணனைகள் இடம்பெற்று உள்ளன.*

### திருமாலின் கிடந்த கோலம்

நீல மேக நெடும்பொற் குறைத்துப்
பால்விரிந் தகலாது படிந்தது போல
ஆயிரம் விரித்தெழு தலையுடை அருந்திறல்
பாயற் பள்ளிப் பலர் தொழுதேத்த
விரிதிரைக் காவிரி வியன் பெருதுருத்தித்
திருவமர் மார்பின் கிடந்த வண்ணமும்

### திருமாலின் நின்ற கோலம்

வீங்குநீர் அருவி வேங்கடம் என்னும்
ஓங்குயர் மலயத்து உச்சி மீமிசை
விரிக்கதிர் ஞாயிறுந் திங்களும் விளங்கி
இருமருங் கோங்கிய விடைநிலைத் தானத்து
மின்னுக்கோடி யுடுத்து விளங்குவிற்பூண்டு
நன்னிறமேகம் நின்றது போலப்
பகையணங் காழியும் பால் வெண் சங்கமும்
தகைபெறு தாமரைக் கையில் ஏந்தி
நலங்கிளர் ஆரம் மார்பில் பூண்டு
பொலம்பூ ஆடையில் பொலிந்து தோன்றிய
செங்கண் நெடியோன் நின்ற வண்ணமும்

என்று வருணிக்கப்பட்டுள்ளன. இவற்றிலிருந்து திருமால் மேகம் போன்ற நிறமுடையவன் என்றும் ஆயிரம் தலைகளையுடைய ஆதிசேடன் மீது பாயல் கொண்டு திருவரங்கத்தில் இருப்பவன் என்றும் திருமகள் அமர்ந்த மார்பை உடையவன் என்றும் ஒலிக்கின்ற அருவிகள் நிறைந்த திருவேங்கட மலையில் சூரியனும், திங்களும் இருபுறமும் இருக்க இடையில் நல்ல நீல நிறத்தையுடைய மேகம் தன் மின்னலாகியப் புதுப் ஆடையை உடுத்து தன் வில்லாகிய பணியைப் பூண்டு நிற்பது போல ஆழியையும் சங்கையும் அழகிய தாமரைக்கையில் வலனும் இடனும் ஏந்தி ஆரத்தை மார்பில் அணிந்து பொற்பூவாடையுடுத்தி நின்றருளுகின்ற செய்தியையும் அறியமுடிகிறது. இவற்றைத் தவிர வேனிற் காதையிலும், கடலாடுகாதையிலும் திருவேங்கடம் பற்றிய குறிப்பைக் காணமுடிகிறது.

நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்
தமிழ்வரம் புறுத்த தண்புனல் நன்னாடு

என்றும்,

வேங்கட மலையும் தாங்கள் விளையுன்
காவிரி நாடும்

என்றும் இடம்பெற்றுள்ளது.

### கருடக்கொடி

உவணச் சேவல் உயர்த்தோன் நியமமும்
**மேழிவலன் உயர்த்த வெள்ளை நகரமும்**

என்ற வரிகளில் கருடக் கொடியையுடைய திருமால் கோயிலையும் மேழிப்படையை வலமாக உடையவன் என்பதைக் குறிப்பிட்டுள்ளார்.

### திருமால் பலதேவன் வழிப்பாடு

வால்வளை மேனி வாலியோன் கோவிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்

என்ற வரிகள் திருமால், வழிபாடும் பலதேவன் வழிபாடும் ஆரம்பகாலத்தில் இருந்தே இருந்திருக்கிறது என்பதைத் தெரியபடுத்துகிறது. திருமாலை அடியவர்கள் ஊர் ஊராகச் சென்று வழிபட்டு வருவர் என்பது மாங்காட்டு மறையோன் தன்னை திருமால் அடியவன் என்று கூறுவதிலிருந்து அறியலாம்.

நீள்நிலம் கடந்த நெடுமுடி அண்ணல்
தாள் தொழு தகையேன் போகுவல்

*என்று இடம்பெற்றுள்ளது. மதுரைக் காண்டத்தில் ஆய்ச்சியர் குரவையின்போது திருமாலின் (கண்ணன்) அவதாரச் செய்திகள் இடம்பெற்றுள்ளன.*

கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
இன்றுநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
கொன்றையுந் தீங்குழல் கேளாமே தோழி
பாம்பு கயிறாக் கடல்கடந்த மாயவன்
ஈங்கு நம் ஆனுள் வருமேல் அவள்வாயில்
ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி
கொல்லையஞ் சாரல் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் ஆனுள் வருமேல் அவன் வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி

*திருமால் வாசுகி என்னும் பாம்பைக் கயிறாக்கியும் மேருமலையை மத்தாகவும் கொண்டு திருப்பாற் கடலைக் கடைந்த செய்தியும் கண்ணன் கன்று வடிவாக வந்த வத்சலாசுரனைக் கொண்டு விளாமர வடிவாக நின்ற கபித்தா சுரன்மேல் ஏறிந்து இருவரையும் கொன்ற செய்தியும், குருந்த மரத்தை வளைத்த செய்தியையும் கண்ணனின் குழல்இனிமையையும் குறிப்பிட்டு ஆயர்குலப் பெண்கள் பாடியிருப்பதைக் காணமுடிகிறது திருமால் "புள்ளூர்க்கடவுள்" 'கோகுல மேய்த்துக் குருந்தொசித்தான்', பொன்னந்திகிரிப் பொருபடையான் 'கடல் கடைந்தான்', 'கதிர் திகிரியால் மறைந்த கடல் வண்ணன்' என்று பெயர் பெற்றிருக்கிறான் என்பதை காடுகாண் காதையின் வாயிலாக அறியலாம்.*

முன்னிலைப் பரவல்

வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டொருநாள் கடல் வயிறு கலக்கினையே
கலஞ்சியகை யசோதையார் கடைகயிற்றால் கட்டுண்கை
மலர்க்கமல உந்தியாய் மாயமோ மருட்கைத்தே
அறுபொருள் இவன் என்றே அமரர்கணம் தொழுதேத்
உறுபசியொன் றின்றியே உலகடைய உண்டனையே
உண்டவாய் களவினால் உறிவெண்ணெய் உண்டவாய்

வண்டுழாய் மலையாய் மாயமோ மருட்கைத்தே
திரண்டமார் தொழு தேத்தும் திருவில்நின் செங்கமலம்
இரண்டடியால் மூவுலகும் இருள்தீர நடந்தனையே
நடந்தவடி பஞ்சவர்க்குத் தூதாக நடந்தவடி
மடங்கலாய் மாறட்டாய் மாயமே மருட்கைத்தே

*இவற்றுள் திருமால் கடல்கடைந்த வரலாறும், வாமன அவதாரத்தில் உலகை இரண்டடியால் அளந்த செய்தியும் இடம்பெற்றுள்ளது. மேலும்,*

மூவுலகும் ஈரடியில் முறைதிறம்பா வகைமுடியத்
தாவியசே விடிசிவப்பத் தம்பியொடு கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்லிலங்கை கட்டழித்த
சேவகன் சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால் சீர் கேளாத செவியென்னை செவியே

பெரியவனை மாயவனைப் பேருலகும் எல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியும் கையும் திருவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன கண்ணே

மடந்தாழு நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றுப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத்தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
நாராயணா என்னா நாவென்ன நாவே ...

*என்று இடம்பெற்றுள்ளது. மேலும் ஆய்ச்சியர் குரவையில் கண்ணன் ஆயர்பாடி மகளிருடன் குரவையாடிய செய்தியையும் காணலாம்.*

ஆங்கு,
தொழுவிடை யேறு குறித்து வளர்த்தார்
எழுவர் இளங்கோதையார்
என்றுதன் மகளை நோக்கித்
தொன்றுபடு முறையால் நிறுத்தி
இன்டமுது மகளிவர்க்குப்

படைத்துக்கோட் பெயரிடுவாள்
குடமுதலிட முறையாக் குரல் துத்தம்
கைக்கிளை யுழையிளி விளர்தாரமென
விரிதரு பூங்குழல் வேண்டிய பெயரே

மாயவன் என்றாள் குரலை விறல் வெள்ளை
ஆயவன் என்றாள் இளிதன்னை-ஆய்மகள்
பின்னையாம் என்றாளோர் துத்தத்தை மற்றையார்
முன்னையாம் என்றாள் முறை

மாயவன்சீருளார் பிஞ்ஞையும் தாரமும்
வால் வெள்ளை சீரார் உழையும் விளரியும்
கைக்கிளை பிஞ்ஞை யிடத்தாள் வலத்துலாள்
முத்தைக்கு நல்விளரிதான்
அவருள்
வண்டிழாய் மாலையை மாயவன் மேலிட்டுத்
தண்டாக் குரவைதான் உள்படுவாள்-கொண்டசீர்
வையம் அளந்தான்நன் மார்பிற் றிருநோக்காப்
பெய்வளை கையாள நம்பின்னைதா நாரமன்றே
ஐயென்றாள் ஆயர் மகள்

என்று மகளிர் குரவைக் கூத்தாடும்போது பாடியது இடம்பெற்றுள்ளது.

நலம்பாராட்டல்

சங்க இலக்கியம் போலவே காப்பியங்களிலும் நலம்பாராட்டல் என்ற துறை இருந்திருக்கிறது. கோவலன் தன் மனைவி கண்ணகியின் அழகை,

மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும் பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே ...

(மனையாம்., 73-75)

என்று பாடுவதாக இளங்கோவடிகள் குறிப்பிடுகிறார். இந்த நலம்பாராட்டல் என்ற முறையானது பக்தி இலக்கியமான திவ்யபிரபந்தத்தில் இடம் பெற்றுள்ளது.

### காமனைப் பற்றிய செய்தி

*சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் காமவேளைப் பற்றிக் குறிப்பிடுகிறார். அவன் மீன் கொடியையும் தனக்கென்று சேனையையும் உடையவன் என்பதை,*

இளங்கால் தூதன் இசைத்தன னாதலின்
மகர வெல்கொடி மைந்தன் சேனை ...

(வேனிற்., 9-10)

*என்று குறிப்பிடுகிறார். இதனை திவ்ய பிரபந்தத்தில் ஆண்டாள் குறிப்பிடும்போது,*

சுவரில் புராண! நின்பேரெழுதிச்
சுறவநற் கொடிக்களும் துரங்கங்களும்
கவரிப் பிணர்க்களும் கருப்பு வில்லும்
காட்டித்தந்தேன் கண்டாய் காமதேவர் ...

(நா.தி.பி., 507)

*என்று காமனின் மீன் கொடியை குறிப்பிட்டு அவனது படையாக கரும்பு வில்லையும் மற்றொரு பாடலில் மலர்கணையையும் குறிப்பிடுகிறார்.*

### மாலைக்கால வருத்தம்

*மாலைப் பொழுது வந்தவுடன் கதிரவனும் அருள் செய்யாதுப் போயினான். இதுவரை உதவியாக இருந்த பறவைகளும் கூட்டுக்குள் போயின. உயிரை பறிக்கின்ற இந்த கொடுமையான மாலைப் பொழுது வந்துவிட்டதே என்று தலைவி புலம்பியதை இளங்கோவடிகள்,*

பறவை பாட்டங்கினவே பகல் செய்வான் மறைந்தனனே
நிறைநிலா நோய்கூர நெடுங்கணீர் உகுத்தனவே
துறுமலர் அவிழ்குழலாய் துறந்தார் நாட்டுளே தாங்கொல்
மறவையாய் என்னுயிர்மேல் வந்த இம்மருள் மாலை ...

(சிலம், கானல், 42)

*என்று பாடுகிறார். இதனை நாலாயிர திவ்ய பிரபந்தத்தில்*

மாலையும் வந்தது மாயன் வாரான் மாமணிபுலம்பவல்
வேறனைந்த

கோல நன்னாகு சறுகளுமாலோ ...

(நா.தி.பி., 3654)

என்று நம்மாழ்வார் மாலை துயரைப் புலப்படுத்துகிறார்.

அந்திமாலை

இளங்கோவடிகள் தம் சிலப்பதிகாரத்தில் அந்திமாலைச் சிறப்பை வெளிப்படுத்துகிறார். அதாவது கோவலனை ஆகூழ் காரணமாகப் பெற்ற மாதவிக்கும் போகூழ் காரணமாகப் பிரிந்த கண்ணகிக்கும் மாலைப் பொழுது எவ்வாறு இருந்தது என்பதை தெளிவுப்படுத்துகிறார்.

கணவனைப் பிரிந்த கண்ணகியின் நிலையை,

காதலர்ப் பிரிந்த மாதர் நோதக
ஊதுலைக் குருகின் உயிர்த்தன ரொடுங்கி

(அந்தி., 58-59)

என்று கணவனைப் பிரிந்த மகளிர் நிலா முற்றத்துக்குக் கூடச் செல்லாத கொடிய நிலையைப் புலப்படுத்துகிறார்.

தலைவனைப் பிரிந்த தலைவி மாலைக்காலத்தில் துயருற்றதை திவ்யப் பிரபந்தமும் எடுத்துக்காட்டுகிறது.

சிலப்பதிகாரம் (இராம அவரதாரம்)

இராமாயணச் செய்திகளை இளங்கோவடிகள் தம் காப்பியத்தில் பயன்படுத்துகிறார். கோவலன் கண்ணகி, கவுந்தியடிகள் மூவரும் மதுரை நகரத்திற்குச் செல்லும்போது வழியில் கோசிகனை சந்திக்கின்றனர். அப்போது கோவலன் கோசிகனிடம் வினவும்போது கோசிகன் மறுமொழி கூறுகின்றான். அம்மறுமொழியில்(மறுமொழியாக)இராமாயணச் செய்தி இடம்பெற்றுள்ளது.

அருந்திறல் பிரிந்த அயோத்திபோல ...

(சிலம்., 13-65)

என்று இராமனைப் பிரிந்த அயோத்தியை உவமையாகக் கூறுகிறார். இதனை நாலாயிர திவ்ய பிரபந்தம்,

தேனகுமாமலர்க் கூந்தல் கௌசலையும் சுமித்திரையும்
சிந்தைநோவ
கூனுருவின் கொடுந் தொழுத்தை சொற்கேட்ட கொடியவள்
தன் சொற்கொண்டு இன்று
கானகமே மிக விரும்பி நீதுறந்த வள நகரைத் துறந்து நானும்
வானகமே மிக விரும்பிப் போகின்றேன் மறுகுலத்தார்
தங்கள் கோவே?
(நா.தி.பி., 739)

என்று இராமன் காட்டிற்குச் சென்றதைக் கண்ட தயரதன் புலம்பலை குலசேகரர் புலப்படுத்துகிறார்.

## மணிமேகலை

சிலப்பதிகாரத்தின் தொடர்ச்சிக் காப்பியமான மணிமேகலையிலும் வைணவம் பற்றிய செய்தி இடம்பெற்றுள்ளது. மணிமேகலை வஞ்சிநகரில் பல்வேறு சமயவாதிகளையும் கண்டு அவரவர் சமயத்தை பற்றிக் கேட்கும்போது வைணவன் தன்னுடைய சமயத்தைக் கூறுவதாக,

காதல் கொண்டு கடல்வணன் புராணம்
ஓதினன் ஆரணன் காப்பென்று உரைத்தனை

என்பது கடல்வண்ணனாகிய திருமாலின் புராணம் பற்றிய செய்தியை குறிப்பிடுவதாக அமைந்துள்ளது. நாராயணன் முறை செய்தலே அன்றி காப்பதும் அவனுடைய கடமை என்பதிலிருந்து காக்கும் கடவுள் திருமால் என்பதை அறிய முடிகிறது.

## மோகினி அவதாரம்

தேவர்களும் அசுரர்களும் பாற்கடலைக் கடைந்தபோது விடத்திற்குப் பிறகு அமுதம் கிடைத்தது. அந்த அமுதத்தை தேவர்களுக்குப் பரிமாறுவதற்காக திருமால் பெண் வேடமிட்டார் என்று சொல்வர். அதுவே மோகினி அவதாரம் எனப்படும். அந்த மோகினி அவதாரத்தை குறிப்பிடுகிறது. "மோகினி அவதாரத்தைக் கொண்டு திருமாலை அம்பாளாக சித்தரிப்பதும் உண்டு. இம்மோகினி அவதாரத்தை முக்கிய அவதாரமாகக் கொள்ளாமல் துணை அவதாரமாகக் கொள்வதுமுண்டு." என்று குறிப்பிடுகிறார்.

## சீவகசிந்தாமணி

### ஏமாங்கத நாட்டு வளம்

*திருத்தக்க தேவர் குறிப்பிடுகின்ற சச்சந்தனின் ஏமாங்கத நாட்டுவளத்தைமிகச் சிறப்பாக விருத்தப் பாவில் குறிப்பிட்டுள்ளார். ஏமாங்கத நாட்டில் தேங்காய் விழும்போது பல மரங்கள் மேல் விழுந்து அவற்றின் பழங்களிலிருந்த தேன் ஆறாக ஓடியது என்பதை,*

காய்மாண்ட தெங்கின் பழம் வீழக் கமுகினெற்றிப்
பூமாண்ட தீந்தேன் நொடைகீறி வருக்கை போழந்து
தேமாங் கனிசிதறி வாழைப் பழங்கள் சிந்தும்
ஏமாங்கத மென்றிசை யாற்றிசை போய துண்டே ...

(சீவ., 31)

*என்று பாடுகிறார். இதே இயற்கை வளத்தை திருமங்கையாழ்வார்,*

நெட்டிரிய கருங்கமுகின் செங்காய் வீழ
நீன் பலவின் தாழ்சினையில் நெருங்கி பீனத்
தெட்டபழம் சிதைந்து மதுச்சொரியும் காழிச்
சீராம விண்ணகரே சேர்மீனீரே...

(நா.தி.பீ., 1185)

*என்று பாடியுள்ளார்.*

### சீவக சிந்தாமணி (உவமை)

*திருத்தக்கதேவர் பயன்படுத்திய உவமையானது நாலாயிர திவ்ய பிரபந்தத்துள் இடம்பெற்றுள்ளது. ஆயப் பெண்கள் தயிர் கடைந்த செய்தியைக் குறிப்பிடும்போது அதிகாலையில் அவர்கள் தயிர் கடையும்போது எழுகின்ற ஓசையானது புலியின் ஓசை (உறுமல்) யைப்போன்று இருந்தது என்பதை,*

கடைதயிர் குரல் வேங்கை ...

(சீவசிந்த., 2717)

*என்று பாடுகிறார். இதனை திவ்யபிரபந்தத்தில் ஆண்டாள்,*

காசும் பிறப்பும் கலகலப்பக்கைபேர்த்து
வாசநறுங்குழலாய்ச்சியர் மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவம் கேட்டிலையோ ...

(நா.தி.பி., 480)

*என்று அரவம் (ஓசையைக்) குறிப்பிடுகிறார்.*

### அரவு படுக்கையன்

*திருமால் பாம்பில் பள்ளிகொண்டவன் என்பதை திருத்தக்க தேவர்,*

பைந்நாகப் பள்ளி மணிவண்ணனிற் பாயல் கொண்டு...

(சீவக., 17)

*என்று குறிப்பிடுகிறார். இதனை நாலாயிர திவ்ய பிரபந்தம்.*

விடத்தவாய் ஓராயிரம் இராயிரம்கண் வெந்தழல்
விடுத்து வீள் விசபாத போகம் மிக்க சோதி தொக்கசீர்
தொடுத்து மேல்விதானமாய பௌவ நிரராவணைப்
படுத்த பாயல் பள்ளிகொள்வது என்கொல் வேலைவண்ணனே!

(நா.தி.பி., 769)

*என்று திருமழிசையாழ்வார் பாடுகிறார்.*

### மயிலை விளித்தல்

*சீவகனைப் பிரிந்த கேமசரி துன்பத்தின் மிகுதியால் பேசாத மயிலை விளித்து தன் கணவன் இருக்குமிடத்தை கேட்கிறாள். இதனை,*

புனமா மயிலை பொழிலே புனலே
வனமார் புழையே வரையே திரையே
இனமா மணிசூ ழெரிபூ ணவனைத்
துனயான் பெறுகோ தொழுதே னுரையீர் ...

(சீவக., 1519)

*என்று பாடுகிறார். இதேப் போன்று திவ்ய பிரபந்தத்தில் ஆண்டாள்,*

கணமாமயில்காள் கண்ணபிரான் திருக்கோலம் போன்று
அணிமா நடம் பயின்றாடுகின்றீர்க்கு அடிவீழ்கின்றேன்
பணமாட ரவணைப் பற்பல காலமும் பள்ளிகொள்,
மணவாளர் நம்மை வைத்த பரிசிது காண்மினே ...

(நா.தி.பி., 602)

*என்று மயிலை விளித்து திருமால் இருக்கின்ற இடத்தைக் கேட்கிறாள்.*

### மாலைக் கால வருத்தம்

*சீவகனைப் பிரிந்த கேமசரியார் மாலைப் பொழுதில் அடைந்த துயரை,*

பொன்பசலை பூப்பப் பொருகயற்கண் முத்தரும்ப

அன்புருகு நெஞ்ச மழுங்குவிக்கு மாலை

(சீவக., 2051)

*என்று குறிப்பிடுகிறார். இதனை திவ்ய பிரபந்தமும் எடுத்துக்காட்டுகிறது.*

## கருத்து

*சீவக சிந்தாமணியில் இடம்பெற்ற கருத்தானது திவ்ய பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளது. துன்பம் வரும்போது மட்டுமன்றி இன்பம் வரும்போதும் நினைக்க வேண்டும் என்ற அகப்பொருள் கருத்தை,*

நீங்காத காதலுடையாய் நினைக்கொன்று பின்னும் ...

(சீவக., 16)

*என்று குறிப்பிட்டதை, பக்தி இலக்கியத்தில் திருமங்கை ஆழ்வார்,*

துஞ்சும்போது அழைமின் துயர்வரில் நினைமின்
துயநிலீர் சொல்லிலும் நன்றாம்...

(நா.தி.லி., 957)

*என்று குறிப்பிட்டுள்ளார்.*

## திருமால் குருக்தொசித்தது

நீனிற வண்ணன் இன்று நெடுந்துகில் கவர்ந்து தம்முன்
பாலிற் வண்ணன் நோக்கில் பழியுடைத் தென்று கண்டாய்
வேனிறத்தானை வேந்தே! விரிபுனல் தொழுனை யாற்றுள்
கோனிற வளையி னார்க்குக் குருந்தவன் ஒசித்த தென்றான்

(சிந்., 209)

## கண்ணன் கோகுலத்தில் வளர்ந்தது

மேகம் மீன்ற மின்னனை யாள்தன் மிளர் பைம்பூன்
ஆகம் மீன்ற வம்முலை யின்பால் அமிர்தேந்தப்
போகம் மீன்ற புண்ணியன் எய்த நணையே போல
மாகம் மீன்ற மாமதி யன்னான் வளர்கின்றான்

## கண்ணன் நப்பின்னையை மணந்த செய்தி

குலம் நினையல் நம்பி கொழுங் கயற்கண் வள்ளி
நலனுகர்ந்தான் அன்றே நறுந்தார் முருகன்

நிலமகட்குக் கேள்வன் நிணீரைநப் பின்னை
இலவலர்வாய் இன்னமிர்தம் எய்தினாய் அன்றே

இராமாயணச் செய்தி (மராமரம் எறிந்தது)

மராமரம் ஏழும் எய்த வாங்குவில் தடக்கை வல்வில்
இராமனை வல்லன் என்ப திசையலால் கண்டதில்லை
உராமன மிவன்கணின்றி யுவக்குமா செய்வல் என்று
குராமலர்க் காவி னீங்கிக் கோயிலே கொண்டு புக்கான்

என்று இடம்பெற்றுள்ளது.

## 3. நாலாயிர திவ்யப் பிரபந்தத்தில் சைவ இலக்கியங்கள் ஏற்படுத்திய செல்வாக்கிற்குரிய பகுதிகள்

தேவாரத்தில் இடம்பெற்ற திவ்ய பிரபந்தம்

பாற்கடல் கடைதல்

*சுந்தரர் தம்தேவாரத்தில் தேவர்களும், அசுரர்களும் பாற்கடல் கடைந்த செய்தியை,*

**கோல மால்வரை மத்தென நாட்டிக்**
**கோளர வுசுற்றிக் கடைந்தெழுந்த**
ஆல நஞ்சுசுண்டவர் மிகக்குரிய
அமரர் கட்கருள் புரிவது கருதி
நீலம் ஆர்கடல் விடந்தனை உண்டு ...

(சுந்.தே. திருச்சா., 5)

*என்று பாடுகிறார்.* இதனை *நாலாயிர திவ்ய பிரபந்தம்*

கடைந்து பாற்கடல் கிடந்து காலநேமியைக்கடிந்து ...

(நா.தி.பி. 832)

*என்று திருமழிசை யாழ்வார் பாற்கடல் கடைந்த செய்தியைக் குறிப்பிடுகிறார்.*

இறையடியவர்

*இறைவனுடைய அடியவர்கள் எல்லோருக்கும் தாம் அடியவன் என்பதை,*

அங்க மெல்லாம் குறைந்தழுகு தொழு நோயராய்
ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக் கரந்தார்க்கு அன்பராகில்
அவர் கண்டீர் யாம் வணங்கும் கடவுளரே ...

(திரு.நாவு., 9)

*என்று பாடுகிறார்.* இதனையே *நம்மாழ்வார்,*

குலத்தாங்கு சாதிகள் நாலிலும் கீழிழிந்து
நலந்தானிலாத சண்டாள சண்டாளர்களாகிலும்
வலந்தாங்கு சக்கரத்து அண்ணல் மணிவண்ணர்க்கு

**ஆள் என்று உள**

**கலந்தார் அடியார்தம் அடியார் எம் அடிகளே ...**

(நா.தி.பி.)

*என்று தம் அடிமைத் தன்மையைப் பாடுகிறார்.*

*சங்க இலக்கியத்தில் பரிபாடல் திருமாலைக் குறிப்பிடுவதைப் போன்று திருநாவுக்கரசரும் தம் தேவாரத்தில் இறைவனை எல்லாமாகவும் குறிப்பிடுகிறார்.*

**அப்பனும் நீ அம்மையும் நீ ...**

(திருநாவு, 1)

*என்று குறிப்பிடுகிறார். இதனை நம்மாழ்வார்,*

**நீயே உலகெலாம் நின் அருளே நிற்பனவும்**

**நீயே தவத் தேவ தேவனும்-நீயே**

**எரிசுடரும் மால்வரையும் எண் திசையும் அண்டத்து**

**இரு சுடரும் ஆய இவை ...**

*என்று பாடுகிறார்.*

**அமைப்பு**

*சுந்தரர் தம் தேவாரத்தில் தன் நாச்சியாரைப் பார்க்கும்போது, நலம்பாராட்டலாக,*

கற்பகத்தின் பூங்கொம்போ? காமன் தன் பெருவாழிவோ

பொற்புடையப் புண்ணியத்தின் புண்ணியமோ?

(சுந்.தே.,)

*என்று பாடுகிறார். இப்பாடலின் அமைப்பு நாலாயிர திவ்ய பிரபந்தத்தில், ஆண்டாள்,*

கற்பூரம் நாறுமோ? கமலப்பூ நாறுமோ

திருப்பவளச் செவ்வாய்தான் திரந்திருக்குமோ ...

(நா.தி.பி.,)

*என்று பாஞ்சன்னியத்தைப் பாடுகிறார். இவ்விருவரின் பாடல் அமைப்பும் ஒரே நிலையில் பாடப்பட்டுள்ளது.*

காலன் பற்றிய கருத்து

*திருஞான சம்பந்தர் தம் தேவாரத்துள் பார்வதியை இடபாகத்தில் உடைய சிவபெருமானை வணங்கினால் காலன் மற்றும் அவன் தூதர்களும் நெருங்க மாட்டார்கள் என்பதை,*

கொதியுறு காலன் அங்கி நமனொரு தூதர்
கொடுநோய்கள் ஆன பலவும்
அதிகுணம் நல்ல நல்ல அவை நல்ல நல்ல
அடியாரவர்க்கு மிகவே ...

(திரு. கோளறு., 782)

*என்று பாடுகிறார். இதனை திருமழிசையாழ்வார் திருச்சந்த விருத்தத்தில்,*

காலநேமி காலனே! ...

(நா.தி.பி., 782)

*என்று காலனுக்கும் காலன் திருமாலாகக் குறிப்பிடுகிறார்.*

மார்க்கண்டேயன்

*அந்தணச் சிறுவனாகிய மார்க்கண்டேயனை சிவபெருமான் காலனிடமிருந்து காப்பாற்றிய செய்தியை,*

அந்தணாளன் அடைக்கலம் புகுத
அவனைக் காப்பது காரணமாக ...

(சுந்.தே. திருச்சா., 1)

*என்று பாடுகிறார். அந்த மார்க்கண்டேயனுடைய குறிப்பு திவ்ய பிரபந்தத்தில்,*

மார்க்கண்டன் கண்டவகையே வரும் கண்டீர் ...

(நா.தி.பி., 2396)

*என்று இடம்பெற்றுள்ளது.*

திருவாசகமும் திவ்ய பிரபந்தமும்

1. பதிகமுறை

*சங்க இலக்கியத்தில் ஐங்குநுறூறு, பதிற்றுப்பத்து ஆகியவற்றில் இடம்பெற்றுள்ளது போன்றே திருவாசகத்திலும் பதிகமுறை இடம்பெற்றுள்ளது. பதிகம் என்பது பத்துப்பாடல்கள் கொண்ட அமைப்பு, ஒரு பகுதியாகும். திருவாசகத்தில் பதிகம் என்றும் பத்து என்றும் இது*

குறிக்கப்பெறுகிறது. இந்தப் பதிகமுறை திருவாசகத்தைத் தொடர்ந்து நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் இடம்பெற்ற அமைப்பு முறையாகும்.

### அடைக்கலப் பத்து

அடியவர்கள் தம்மை அடைக்கலமாக இறைவனிடம் ஒப்புவித்தல் அடைக்கலப் பத்தாகும். இதனை மாணிக்க வாசகர்,

சுருள்புரிகூழையர் சூழலிற் பட்டுன் திறம்மயுந்திங்கு
இருள்புரி யாக்கையி லேகிடந் தெய்த்தனன் மைத்தடங்கண்
வெருள்புரி மான்அன்ன நோக்கிதன் பங்கவிண் ணோர் பெருமான்
அருள்புரி யாய் உமையிய் அடியேன் உன் அடைக்கலமே

(அடை., 5)

என்று பாடுகிறார். இதனை நம்மாழ்வார்,

வைகுந்தா! மணிவண்ணனே! என்யெயில்லாத
திருக்குறளா! என்னுள் மன்னி
வைகும் வைகல்தோறும் அமுதாய வான் ஏறே!
செய்குந்தா வரும்தீமை உன்னடியார்க்குத்தீர்த்து
அசுரர்க்குத் தீமைகள்
செய்குந்தா! உன்னை நான் பிடித்தேன் கொள் சிக்கனேவ ...

(நா.தி.பி., 2840)

என்று திருமாலிடம் தாம் அடைக்கலமானதைக் குறிப்பிடுகிறார்.

### பிரம்மன் தலையைக் கொய்தவன்

பிரம்மனின் தலைகள் ஐந்தனுள் ஒன்றினைத் தன் நகங்களால் கொய்தவன் சிவபெருமான் என்பதை,

அயன்தலை கொண்டு செண்டாடல் பாடி...

(திருப்பொ, 18)

என்று பாடுகிறார். இதனை திவ்ய பிரபந்தம் சிவன் பிரம்மாவின் தலையைக் கொய்ததால் ஏற்பட்ட சாபத்தைத் திருமால் தான் தீர்த்தாதாகக் குறிப்பிடுகிறது.

மாணிக்கவாசகரின் திருவெம்பாவையில் நவசக்திகளில் ஒருவளாகிய இரவித்திரி சேட்டை என்பவளை எழுப்பும்போது அவள் கூறிய வாசகத்தை நினைவுறுத்துகிறாள். இதனை,

மானே நீ நென்னலை நாளை வந்து உங்களை
நானே எழுப்புவன் என்றலும் நாணாமே ...

(திருவெம்., 6)

என்று பாடுகிறார். இதனை நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் ஆண்டாள் தம் திருப்பாவையில் துயில் எழுப்பும்போது தன் தோழி கூறியதை நினைவு கூறும் வகையில்,

வல்லை உன் கட்டுரைகள் பண்டே உன் வாயறிதும் ...

(நா.தி.பி., 488)

என்று திருவாசக அமைப்பை ஒட்டியே பாடியுள்ளார்.

## திருச்சாழல்

சாழல் என்பது விளையாட்டாக தோழியர்கள் கைகொட்டி நகைத்து பேசுவதாகும். இது பெண்கள் விளையாடுவதாகப் பெரும்பாலும் குறிக்கப்படுவதுண்டு. சாழல் என்பதற்கு "இது பல்வரிக் கூத்துள் ஒன்று என்பர் அடியார்க்கு நல்லார். இந்த சாழலானது திருவாசகத்தில் இடம் பெற்றுள்ளது போன்றே திவ்ய பிரபந்தத்திலும் இடம்பெற்றுள்ளது, திருவாசகத்தில்,

பூசுவதும் வெண்ணீறு பூண்பதுவும் பொங்கரவம்
பேசுவதுந் திருவாயால் மறைபோலுங் காணேடி
பூசுவதும் பேசுவதும் பூண்பதுவுங் கொண்டென்னை
ஈசனவன் எவ்வுயிர்க்கும் இயல்பானான் சாழலோ

(திருச்சா., 1)

என்று வினாயெழுபா மற்றவர் விடைகூறும் பகுதியாகப் பாடப்படுகிறது. இதனை நாலாயிர திவ்ய பிரபந்தத்தில் திருமங்கையாழ்வார்,

மானமரு மென்னோக்கி வைதேகியின் துணையா
கானமரும் கல்லதர் போய்க் காருறைந்தான் காணேடி
கானமரும் கல்லதர் போய்க் காடுறைந்த பொன்னடிக்கல்
வானவர்தம் சென்னிமலர் கண்டாய் சாழலே ...

(நா.தி.பி., 1992)

என்று அமைப்பு மாறாமல் பாடுகிறார்.